உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

**அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய**

# சிவபராக்கிரமம்

சென்னைக் கிரிஸ்டியன் காலேஜ் தமிழ்ப்பண்டிதர்
ஈக்காடு

## இரத்தினவேலு முதலியாரவர்கள்

அறுபத்துநான்கு திருவுருவப் படங்களோடும்
வேதாகமாதி
வடநூன் மேற்கோளகளோடும்
திராவிடநூற்பிரமாணங்களோடும்
வசனரூபமாகச் செய்ததை

அமரம்பேடு
இரங்கசாமி முதலியார் குமாரர்
**முத்துவடிவேல் முதலியார் அவர்களால்**

**பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்**
பதிப்பிக்கப்பட்டது.

**அ. இரங்கசாமிமுதலியார் சன்ஸ்**
பூமகள்விலாசம் பிரஸ்
நெ-24, தாண்டவராயப்பிள்ளை வீதி.
சென்னை
இரண்டாம் பதிப்பு
1924

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனால் சகல அச்சுக்கூடத்தலைவர்களுக்கும் மற்றயாவர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:-

இந்த அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய சிவபராக்கிரமம் என்னும் நூலை வித்வான் ஈக்காடு. இரத்தினவேல் முதலியார் இயற்றி அவர்பேரால் உள்ள ரிஜிஸ்டர் சுதந்தரத்தை ஷையார் மனைவி ஈ. இலஞ்சியம்மாள், ஷையார் குமாரர்கள் ஈ.சபாபதிமுதலியார், ஈ.சோமசுந்தரமுதலியார், ஈ.ஆனந்தமுதலியார் இந்நால்வர்க ளிடம் ரிஜிஸ்டர் காபிரயிட் சுதந்தரத்தை அடியிற் கையொப்பமிட்ட அ. முத்துவடி வேல் முதலியாராகிய நான் கிரயத்திற்கு வாங்கப்பட்டு அச்சிறப்பதித்து ரிஜிஸ்டர் செய்திருப்பதால் இப்புத்தகத்தை என்னுடைய அனுமதியன்னியில் யாரேனும் அச்சிடுவாராகில் 1867-ஸ்த்திய 25-வது ஆக்டு 20-வது பிரிவு 6-வது உட்பிரிவின்படி நான் கோரும் நஷ்டத்திற்கும் இன்டியன் பினல் கோர்ட்டு என்னும் ஆக்ட்டுப்படி குற்றத்திற்கும் உத்திரவாதிகளாக வேணுமென்பதைக் கவனிக்கக்கோருகிறேன்.

இப்படிக்கு,<br>
**அ. முத்துவடிவேல் முலிதயார்.**<br>
24 தாண்டவராயப்பிள்ளை வீதி,<br>
சென்னை

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# விஷய சூசிகை.



விஷய சூசிகை முற்றிற்று.

# இதன்கண் எடுத்தாளப்பெற்ற நூல்கள்.

## ஸம்ஸ்கிருத நூல்கள்.

| | | |
|---|---|---|
| இருக்வேதம் | இலிங்கபுராணம் | அஷ்டமஸ்கந்தம் |
| எசுர்வேதம் | வாமனபுராணம் | நவமஸ்கந்தம் |
| அதர்வணவேதம் | கூர்மபுராணம் | தசமஸ்கந்தம் |
| காமிகாகமம் | விஷ்ணுபுராணம் | உருத்திரகோடிமகாத்மியம் |
| ரௌரவாகமம் | பிரமாண்டபுராணம் | தானவக்ரீடை |
| வாதுளாகமம் | நரசிம்ஹபுராணம் | இராமாயணம் |
| கைவல்யோபநிஷத் | ஆதித்யபுராணம் | சாந்திபர்வம் |
| அதர்வசிகோபநிஷத் | பராசரபுராணம் | ஸௌத்திகபர்வம் |
| ஶ்வேதாஸ்வதரோபநிஷத் | ஈசானசங்கிதை | அநுசாசனிகபர்வம் |
| மந்த்ரோபநிஷத் | உமாசங்கிதை | ஸௌந்தரியலஹரி |
| தைத்திரியசுருதி | வாயுசங்கிதை | ஹரதத்தர்வாக்கியம் |
| ஶ்ருதிவாக்கியங்கள் | சநத்குமாரசங்கிதை | மஹிம்நஸ்துதி |
| சித்தாந்தசாராவளி | சிவரஹஸ்யகாண்டம் | நிகண்டு |
| ஸ்மிருதிகள் | காசிகாண்டம் | |
| ஸ்காந்தபுராணம் | பிரமோத்தரகாண்டம் | |
| சைவபுராணம் | சதுர்த்தஸ்கந்தம் | |

## திராவிட நூல்கள்.

| | |
|---|---|
| திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம் | திருவாலங்காட்டுப் புராணம் |
| திருநாவுக்கரசுநாயனார் தேவாரம் | திருவிளையாடற் புராணம் |
| திருவாசகம் | பாகவத புராணம் |
| திருவிசைப்பா | உபதேசகாண்டம் |
| திருமந்திரம் | காசிகாண்டம் |
| பதினொன்றாந் திருமுறை | காந்தச்சுருக்கம் |
| திருத்தொண்டர் புராணம் | சீகாழிப்புராணம் |
| சிவஞானபோதம் | ஆகமத்திரட்டு |
| சிவஞானசித்தியார் | பாரதம் |
| உண்மைவிளக்கம் | சிலப்பதிகாரம் |
| இலிங்கபுராணம் | சிந்தாமணி |
| கூர்ம புராணம் | பஞ்சாரதீயம் |
| கந்த புராணம் | முதலியன. |

உ

முருகன்றுணை.

முதற்பதிப்பின்

## சிறப்புப்பாயிரம்.

புரசை-அஷ்டாவதாநம்-சபாபதிமுதவியாரவர்கள் மாணாக்கரும்,
சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ்
தமிழ்ப் பிரதம பண்டிதருமாகிய ஸ்ரீ
**திரு - சின்னசாமிப்பிள்ளையவர்களியற்றிய**
நிலைமண்டில ஆசிரியப்பா.

பிறையணி சடிலத் திறையுல கனைத்தும், பூத்தினி தளித்து நீத்தருள் பனிதன், விண்ணிடைப் பறந்து மண்ணுற வகழ்ந்தும், அயன்மா லறியா வியன்பெருஞ் சோதி, செவ்விதி னவ்வவ் வமயத்தடியார்க், குறுதுயர் தவிர்த்து நிறைவளம் பொழிவான், சகளீகரித்த புகழ்சேர் மூர்த்தம், எட்டெட் டினையு மட்டறு கருணையின், திருவாய் மலர்ந்தருள் புரிவா யெமக்கெனாப், புவன மதிக்குஞ் சவுனகர் முதலா, மாத்தவரெ வரு மேத்தியிறைஞ்ச , வேதமே யுருவாஞ்சூதனுட் களிகூர்ந், தன்னவர் தமக்குப் பன்னிய மேன்மை, சிவபராக் கிரமமா முவமையின் மான்மியம், மாசிலாத் தவர்க்கிறை கேசிமா முநிவரன், சீரியல் போங்க வாரியத் தமைத்தனன், செப்பரு மேன்மை யப்பெரு நூலை, எண்டகு சீர்த்தித் தண்டமிழ்ப் பாஷையின், மொழி பெயர்த் தெவரும் பழுதறத் தேர்வான், இமிழ்தரு வேதாகமவுப நிடதப், பிரமாணங்கள் திரமுறக் காட்டி, வசனகா வியமா விசைதர வியற்றினன், ஆக்கமே பெருகு மீக்காடதன்கண், கங்கையங் குலம்வி ளங்கவத் துதித்தோன், புங்கவர் புகழு மரங்க சாமிமால், குற்றவ மனைத்தும் பெற்றிசே குருவா, யுதித்ததென் றறிஞர் மதித்திடு புலவன், ஒழுக்க மனைத்தும் விழுத்தக வமைந்தோன், கலைவலார் புகழ்தரு நிலைமையானன், அரனடியவரை யானெனப் போற்றுறூஉம், பத்திமை தழைந்த ரத்தினவே லேந்தலே.

அ

எஸ்-பி-ஜி-ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
திருமயிலை ஸ்ரீ,
**சண்முகம்பிள்ளையவர்களியற்றியன.**

தண்ணேந்து மலரிதழித் தொடையேந்து சசியேந்து தனிக்கோடீரத், தெண்ணேந்து மொருவனைமுன் னிமயவரை யீன்றெடுத்த வெம்பி ராட்டி, பண்ணேந்து மொழிப்பாவை புன்னையங்கா னலின் மயிலாப் பரிவி னேத்தும், நண்ணேந்து தென் மயிலை நகரொருசாருடைத்தொண்டை நாட்டின் மாதோ.

தீக்காட்டி லாடுகின்ற சிந்தையினார் திருத்தொண்டு செறிவன் றொண்டர், வாய்க்காட்டற் புதஞ்சாலுங் கோலுதவு நன்னீர்மை மலிவெண் பாக்கம், பூக்காட்டி னிறைபொலியும் பாசூரென் றொருதல னும்புடையே கொண்ட, ஈக்காட்டுக் கோட்ட த்து ளீக்காடென் றொருநகர மிலங்கு மாலோ.

இன்னநகர் வயிற்றொண்டர் சீர்பரவு மெங்கள்பிரா னினிது தோன்றும், நன்னர்மர பினிலரங்க சாமியெனப் புவிபுகழு நல்லோனாற்றும், இன்னறவிர் மாதவத்தி னங்குரமா விரத்தினவே லென வந்தீண்டித், தன்னிகரில் சைவமெனும் பயிர்வளர்ப்பான் மிகச் செறிந்தான் றனை நேரில்லான்.

பிறந்தபய னரனடியே பேணுவதென் றுளக்தேர்ந்து பிறங்கினோனான் , கறந்த பால் கன்னலொடு நெய்கலந்தா லெனக்கவிதை கழற வல்லோன், மறந்துமவ னடியாரை யவ்விறைவ னெனக்கருது மாண்பினானல், அறந்தவா வுள்ளத்தா னரன் வெருண்டே மிகப்புரியுமார்வமிக்கான்.

முப்பொருளென் றுரைசாலும் பொருளினணி சிறந்தோங்கி முன்னூலெல் லாம், இப்படியென் றுரைத்திடவொண் ணாப் பதியைக் கேசியெனு மிருடி யக்காள், செப்பிய தோத்திர மென்னச் செறிப்ராக்ரம மெனைத்துஞ் சிந்தை யோர்ந்திட், டற்புதச் செந்தமிழினெமக் கிந்தஞான் றுதவினனா லடைவி னம்மா.

இன்னநூ லரதத்த ரப்பதீக் கிதர் முன்னோ ரெடுத்தஞ் ஞான்று, சொன்னநூ லெனச்செழிக மற்றிதனைக் கற்கின்றோர் துனைவினெந்தை, மன்னுமல ரடிப்பத்திமருவுகமற் றவன்சீர்த்தி மாழாதென்றய், மிந்நிலமேலினிதிலக கேட்குநகரி ங்கரனருடானெய்த மன்னோ.

இரண்டாம்பதிப்பின்
## சிறப்புப்பாயிரம்.

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ்
தலைமைத் தமிழ்ப்பண்டிதர் பிரமஸ்ரீ
**வி. கோ. சூரிய நாராயணசாஸ்திரியாரவர்கள்**. பி. ஏ.
இயற்றியது.

அருவுருவ மானபிரா னவ்வவம யங்களினி லடியர்க் காகத், திருவுருவங் கலையளவாச் சொண்டருளித் திகழ்ந்தமையைத் தேர்ந்தஞான, குருவனைய கேசிமுனி வடமொழியி னனிவகுத்துக் குறைவொன் றின்றிவ், விருநிலத்தோ குணர்ந்துயச்செய் திட்ட சிவபராக்கிரம மென்னு நூலை. (க)

பொற்புறுதென் மொழிபெயர்த்து வடமொழிமேற் கோள்கள் பல பொருந்தக் காட்டிச், சிற்பநெறி நயஞ்சான்ற திருவுருவப்படங் குயிற்றிச் செறித்தாங்காங்குத், தற்பரனார் சீர்விளங்கத் தனிவிரித்துச் சித்தாந்த சைவ மோங்க, வற்புதவா சகநடையினிரத்தினவே லறிஞனினி தமைத்தா னம்மா. (உ)

---

சைவப்பிரசாரணர்
**யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி**
**ஸ்ரீ , நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள்**
இயற்றிய
**ஆசிரியச்சந்த விருத்தம்.**

சீரளி யாமிரு காலின டந்தொரு செம்பொரு ளைந்து திகழ்
செழுமறை யுரைமிரு திகண்முடி புரணமொ டருண்முறையிப்
பாரளி மாகலை யாமெழு வம்பர முற்றவை கொண்டுபரூஉப்
பரிதிரு தவனென அருவுட னணிக்க சமிதுபடீஇ

யேரளி பாரச மேமினி சொற்பொரு ளின்குமு றற்றமுவி
யெமர்பவ வெயிலிளை யஞர்தப சிவகுளி ரெவணுமுறத்
தாரளி மாசிவ வாடலெ ணெண்ணமு தந்தரு ரத்தினவேற்
றகுகலை வலனருள் பெருகுறு கவிகரு முகிறழையே.

**நேரிசை வெண்பா.**

அன்பினா னல்லருளா லார்பொருளா லீகையினா
லின்பினா லென்று மிலகிடலாற் - றுன்பொழியெண்
ணெண்ணுருவா லின்புகழா லெந்தை பராக்கிரமத்
தெண்ணிப் பராக்கிரம மே.

---

மூன்றாம்பதிப்பின்

# சிறப்புப்பாயிரம்.

இந்நூலாசிரியர் மாணவர்களிலொருவராகிய
**சி. வீரபத்திர ஐயரவர்களியற்றியது.**

நவபராக்கிரமஞ் சிலர்பொரு ணசையா னாட்டினிற் பலப்படவியற்றிர்
அவபராக்கிரம மாகியே யிரிய வாரிய மறைகலை யளவாக்
தவபராக்கிரமம் வடமொழிக்காட்டுத் தண்டமிழ்க்கத்தியம்படஞ்சே
சிவபராக்கிரமந்தருமிரத்தினவேற்செந்தமிழ்க்குரவனைப்புகழ்வாம்.

---

# அபிப்பிராயம்.

அஷ்டாஷ்டக விக்ரக லீலையென்பது சிவபிரான் அறுபத்து நான்கு திருவுருவமைந்து அடியார்கட் கருள்செய்த திருவிளையாட லெனப்படும். இதனையே அஷ்டாஷ்ட மூர்த்தமெனவும் சிவபராக்ரமமெனவும் வழங்குவர்.

இவ்விக்ரஹலீலையை வேதாகமபுராணங்களுள், வேதம் தியானரூபமாக வும், ஆகமம் அதனை விரித்துச் சகளத் திருமேனியில் அடியார்கள் வழிபட்டுய்யும் பொருட்டு க்ரியாரூபமாகவும், புராணங்கள் அவ்வாறு வழிபட்டுப் பேறுபெற்றோ ரிவரெனக் கதாரூபமாகவுங்கூறும். இன்னும் பலவாகக்கூறுஞ்சரிதங்களியாவையு மிதனுளடங்கும்.

புராணங்கள் கூறுஞ் சரிதங்களின் சுருக்கத்துடனும், பூஜிப்போருணரும் வண்ணம் திருவுருவப்படத்துடனும், த்யானிப்போருக்குப் பயன்பட த்யானய்லோகத் துடனும், இஃது வெளியிடப்பட்டது. இதனை நன்காராய்ந்து தத்தமக்கு வேண்டிய பலன்கள் சித்திக்கும் பொருட்டு அவ்வவற்றிற்குரிய திருவுருவங்களை அவ்வவற் றின் நியமப்படி த்யானித்தும் பூஜித்தும் வழிபடுவோர்க் கெய்தாதன வுலகங்களு ளொன்றுமில்லை; திண்ணம்.

இந்நூல் பல வருடங்களாகப் பலரால் அச்சிட்டு வெளியிடக் கருதியும், ஸ்வலாபத் தேட்டத்தாற் சரித்திரங்களை யெழுதிப் பூர்த்திசெய்யாது சிவபுண்ணியத்தைக் கைக்கொள்ளாது விடுத்தனர். மில்லர்துரைக் கல்விச்சங்கத்து உபாத்தியாயர் ஈ- இரத்தினவேலு முதலியாரென்பவர் இச்சரித்திரங்கள் யாவும் யாவரு முணர்ந்து இடுக்கண் தீர்ந்து இஷ்டசித்திகளடைந்து சிவபுண்ணியத்தை மேற் கொளச்செய்தனரால், இவரும்பெருதற்கரிய சிவபுண்ணியத்தைப் பெற்றுச் சிவாநந்த முற்று வாழ்வாரென்பதே உண்மை! உண்மை! உண்மை!

சிந்தாதிரிப்பேட்டை. | இங்ஙனம்:
ஜயஹு மார்கழிமீ | கொ-ஷண்முகசுந்தரமுதலியார்.

# சுதேசமித்திரன்

1895ஹ ஏப்ரல்மீ 30உ

சிவபராக்கிரமமென்பது சிவபிரான் தனது அடியார்களுய்யும் பொருட்டு அவ்வவ்வமயங்களிற் சகளீகரித்த அறுபத்து நான்கு அவசரங்களையும் பற்றிக் கூறுமோர் நூல். இவ்வறுபத்து நான்கு அவசரங்களையும் அஷ்டாஷ்டமூர்த்தங்களெ ன்பர். அஷ்டாஷ்டமூர்த்தங்களும் அநாதியாய்ச் சிவாகமங்களிலேயே கூறப்பட்டுள் ளன. ஆதலினிவ்வாறு சிவாகமங்களிற் சிறப்பித்துக்கூறப்படும் சிவபராக்கிரமமெ ன்னும் அஷ்டாஷ்ட விக்கிரக லீலையானது வடநூல் வல்லார்க்கேயன்றி ஏனையோ ர்க்குப் பயன்படாதிருத்தல்கண்டு, அதனைத் தமிழ்ப்படுத்துவான் முயன்று ஸமஸ்கி ருதவல்ல சாஸ்திரிகள் உதவி கொண்டு, சென்னைக்கிறித்தவ கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர்களுளொருவராகியஸ்ரீ, ஈக்காடு- இரத்தினவேலு முதவியாரவர்கள் இனிது செய்து முடித்திருக்கின்றனர். இதனைச்செய்து முடித்தல் அருமையினுமரு மையென்பது இந்நூலை ஒருமுறை பார்த்தவர்களுக்கு நன்கு விளங்கும். இதற்கு முன்னே இந்நூலை மொழிபெயர்த்து அச்சிடுவான் முயன்று விளம்பரம். வெளிப்படுத்தினோர் பலர். அவர்தம் விளம்பரமெல்லாம் வெற்றுரையாய் முடிந்தன. அவ்வாறு அவர்தம் முயற்சி வீணாயினதெல்லாம் ஆகமசாஸ்திர வாதாரங்கள் கிடைத்தற் கருமைபற்றியும் திருவுருவப்படம் வரையச் சிற்பப்பிரமாணங்கள் அகப்படாமை * * * * பற்றியுமேயாம். இதுநிற்க, நந்தமிழ்ப்பண்டிதர் செய்து பிரசுரித்த சிவபராக்கிரமமானது 368-பக்கங்களும், 64-மூர்த்தங்களுக்கேற்ப, 64-சிற்ப நூல் விதிவழுவாத திருவுருவப்படங்களும் உடையதாய் விளங்குகின்றது.

இவர். இதன்கண், சரித்திரங்களைக் கூறுமிடத்து வெறுங்கதை கூறும் வீணர் போலாது, அநேக வடமொழிச் சாத்திரப் பிரமாணங்களோடும், பற்பல தென்மொழி நூன் மேற்கோள்களோடும் விரித்து விளக்குகின்றனர். இதனை இவர் வசன நடையில் வரைந்துளர். இதன்கணமைந்த வாசகநடையோ, செந்தமி ழருஞ்சொற்கள் விரவப் பெற்று இழுமெனுமோதையினொழுகுறு மருவிபோற் செவ்வனே செல்லுகின்றது. இஃது சைவ சம்பந்தமான கதைகளையெல்லாங் கூறுதலின் தற்காலத்து ஆங்கிலம்பயிலு மாணாக்கர்களுக்குப் பெரிதும் உபயோகப்படலாம் சைவசமய பிரசங்கியார்க்கும் இதன் பயன் இவ்வளவினதென்பது சொல்லாமே விளங்கும். மேலுமிது சைவ சமயிகளாவார் யாவர்க்கும் இன்றியமையாத நூலாம். இத்தகைய பயன்களையுடைய இச்சிவபராக்கிரம நூலினைப் பரீட்சாபாட மேற் படுத்துஞ்சர்வகலாசாலைத் தமிழ்ச்சபையார் சிறிது கண்ணோட்டஞ் செய்து இதுவும் பிரவேச பரீட்சை முதலியனவற்றிற்குப் பாடமாமாறு முயலுவார்களென்று நம்புகின்றோம். அவ்வாறு அவர்கள் செய்வார்களாயின் நந்தமிழ்ப்பாஷையில் உழைத்து வரும் உத்தமக்கல்விமான்களுக்கு ஒரு பேருதவியாம். இப்புத்தகத்தை யாவரும் வாங்கிப் படிக்கும் வண்ணம் வெகு சரசமான விலைக்கு விற்கின்றனர். இத்தன்மையான பரோபகார காரியங்களில் தலையிட்ட நம் இரத்தினவேலு முதலியாரவர்கட்கு வந்தனந் தந்து அவரை இன்னு மிது போன்ற நூல்கள் செய்யுமாறு வேண்டிக்கொள்ளுகின்றோம்.

இரண்டாம்பதிப்பின்

## உபோற்காதம்.

உலகெலாமுணர்ந்து மறிவரும்பொருளாய், அலகிலாச்சோதியாகி யுருகுணம், செயன் முதற் கற்பனாதீதமாய் நிலவிடு, ஒருபரம் பொருளே வருமலப்பசுக்கள், இருண்மயக்கொழீஇத், தெருண்மலரடியினிற் சேர்வான் கொண்ட. அன்பே யென்பா வருளே யுருவா, இன்பேகுணனாவெடுத்தடையுண்மை, அன்பர் துன்பொழித்தின்பவர் க்கருளிய பற்பல திவ்யமூர்த்தங்களுள்ளுஞ் சிறந்தனவாய அஷ்டாஷ்டமூர்த்தங் களையும் அவற்றின் பெருமைகளையுந் தெரிக்காநிற்பது சிவபராக்கிரமமேயாம். இதனைக்கிரமமாக விரித்துக்கூறு நூலை வடமொழியிலேனுந் தென்மொழியிலே னும் இதுகாறும் ஒருவருஞ் செய்திலர். வடமொழிக்கணுள்ள வேதாகமாந்த மிருதி புராணாதிகளிலே ஆங்காங்குப் பெயர்மாத்திரையாகவுஞ் சுருக்க மாத்திரையாகவுங் கூறப்பட்டுள்ளது. ஆயினும் வடமொழியிலே ஸ்காந்தபுராணத்து ஸநத்குமார ஸம்ஹிதையில் மூர்த்திவிசேட முரைத்துழி மாத்திரம்கேசி முநிவரால் இம்மூர்த்தங்கள் பெயர்மாத்திரையானே துதிக்கப்பட்டுள்ளன. தென்மொழியிலோ "பூமன் * * * சேவகமே" என்னுங் கட்டளைக்கலித்துறையில் அஷ்டபராக்கிரமங்களே யறைப்பட்டுள்ளன, ஆகவே யிவற்றையும், மற்றவற்றுள் இலைமறைகாய் போல மறைந்து கிடந்தனவற்றையும், பண்டையாசிரியர்கள் தண்டமிழ்க்கண் மொண்டு மொண்டு கூறப்பட்டவற்றுள் அண்டினவற்றையும் ஆதாரமாகக்கொண்டு, வடமொழி க்கடலைநிலைகண்டுணர்ந்தவிற்பன விவேக சற்சனர் பலரினுதவியால் அம்மூர்த்த ங்களின் சரிதங்களையேற்றவாறு சுருக்கியும் விரித்தும் கற்றோரு மற்றோரு மிலகு விலறிந் தொழுகுமாறு செந்தமிழ் நடையிற் செவ்வனே வரைந்தும், சாரிதங்களை யெழுதுங்கால் வெறுங்கதைவரையும் வீணர்போலாது விஷயஞானமுமிருத்தல் அவசியமென்னுங் கருத்தாற் கடின சந்தி முதலியனவின்றி ஆங்காங்குச் சிற்சில அரும்பதங்களைப் புணர்த்தியும், பிரமாணங்களை யுதகரித்தும், மூர்த்த லக்ஷணங்களைக் காசிப சிற்ப விலக்கணத்திற் கூறியாங்கு எழுதுவித்தமைத்தும், வெகுபிரயாசையோடு பூர்த்திசெய்து வெளிப்படுத்தியுள்ளேன். இந்நூற்காக வேண்டிய சாஸ்திரங்களைச் சம்பாதித்தற்கும், சம்பாதித்தவற்றுள் ஏற்ற பிரமாணங்களை யெடுத்தற்கும், எடுத்தவற்றை யுள்ளவாறமைத்தற்கும் யான் பட்ட கஷ்டங்கள் இவ்வளவிற்றென்பது இந்நூலை வாசிக்கும் அறிவுடையோர் யாவர்க்கும் இனிது புலப்படுமென்க. இவ்வாறாயநூலை 1895ஆு பிப்ரவரி மீ௴த்தில் எனக்கே சுதந்தரமான காபிரைட்டோடும் அச்சிடுவித்து எனது கஷ்டநஷ்டங்களை நோக்காமே சுலபமான விலையும்வைத்து விற்பனை செய்து வரலாயினேன்.

முதற்பதிப்புப் புத்தகங்கள் செலவாய்விட்டமையானும், சிவநேயச்செல்வர் அநேகர் விரும்புகின்றமையானும், இரண்டாவது பதிக்கத்தொடங்கி முன்னுள்ள வற்றோடு சில பிரமாணங்களையுஞ் சொற்பொருள்களையும் புதுக்கியும் விளக்கியும் கூட்டியும் பெருப்பித்து, பதிப்பித்து வெளியிடலானேன். இந்நூலிற் காணப்படாத விஷயங்களுளவேல், சிறியேற்கு அவற்றைத் தெரிவிக்கின், யானவர்க்குப் பெரு நன்றி கூறிப் புத்தகத்துள் அவரது நாமத்தையும் நன்மையையுங் காட்டி வெளியிட

ற்குப் பேரவாவுடையவனா யிருக்கிறேன். யானெழுதியவற்றுட் குறையிருப்பினும் பாலுண்ணும் குருகார்போல நிறையெடுத்தாளல் அறிவுடையோர்கடமையேயாம்.

இங்கனம்:
ஈ. இரத்தினவேலுமுதலியார்.
தமிழ்ப்பண்டிதர்.
சென்னை.

---

மூன்றாம் பதிப்பின்

## உபோற்காதம்.

இரண்டாம் பதிப்புஞ் செலவாய்விட்டமையானும் இன்னுஞ் சிவனடியார் பலர் இப்புத்தகம் வேண்டுமெனக் கேட்டலானும் மூன்றாம்பதிப்பு வெளியிடலாயது. சுபம்.!

இங்ஙனம்:
ஈ. இரத்தினவேலுமுதலியார்.
தமிழ்ப்பண்டிதர்.
சென்னை

---

.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

அஷ்டாஷ்ட மூர்த்தங்களாகிய

# சிவபராக்கிரமம்.

## பாயிரம்.

### விநாயகர் துதி.

திருவி னாயகன், மருக னாகிய,
ஒருகை மாமுகன், சரண மோதுவாம்.

### கடவுள் வாழ்த்து.

#### சபாநாயகர்.

கானேந்துகுழற்கவுரிவிழிகளிப்பவிருமுனிவர்கனிந்துபோற்றத்
தேனேந்துமலர்ப்பொழில்சூழ்தில்லைநடந்தனையியற்றுதேவதேவன்
வானேந்துமைம்பூதவகையனைத்துந்தன்னுருவாவயங்கக்காட்டு
மானேந்துகரத்தொருவன்மலரேந்துசரணமலர்வழுத்திவாழ்வாம்.

#### சிவகாமவல்லியார்.

சிலையொருகையடக்கியலைகடலொருகையடக்கியபின்செழுந்தமிழ்க்கு,
நிலையதனைவயக்குமமர்முனிவனுக்கோர் மொழியுதவு நிமலனைத்தந்,
தலைமகளைக்கலைமகளை யணிவிழியாக் கொண்டகிலமளிக்குந்தெய்வ,
மலையரயன்பயந்தபரம்பரையடியை யிறைஞ்சிமனவாட்டந்தீர்வாம்.

#### குமாரக்கடவுள்.

அன்றோங்கிச்சூர்தடிந்திட்டறனோங்குமமரர்துயரனைத்துமோட்டிச்,
சென்றோங்கிவருந்தகரையூர்ந்திமையாவிழி படைத்ததேவர்க்கெல்லா,
நன்றோங்கவவருறையு நாடுதவிக்கல்லார நலக்கமேவுங்,
குன்றோங்குமொருகுகனைக் குறைநீங்க நெஞ்சகத்தாற்குறித்து வாழ்வாம்.

### சமயகுரவர்.

கந்தநாண்மலரயன்றாழ்காழி வருமறைக்கன்றைக்கயிலைதன்னை,
யந்தமில்சீரையாற்றிற்கண்டவருட்பெருங்கடலையானையூர்ந்து,
கொந்தவிழ்நாண் மலர்க்கொன்றையான் பறம்புகண்ட குணக்குன்றையன்று,
மந்திரர்கள்பெருந்தகையாய் வாதவூர் வருமணியைவழுத்தி வாழ்வாம்.

### அறுபத்து மூவர்.

சித்த மாசகல், முத்தி சேரறு
பத்து மூவர்நங், கத்த ராவரே.

### அவையடக்கம்.

மதிவளர் சடாடவி மன்ற வாணனார்.
விதியுளி பூசைபோல் விதியில் பூசையுங்
கதுமெனக் கோடலாற் கடையன் புன்சொலு
மதியுடை யறிஞர்கண் மரபிற் கொள்வரே.

பாயிரம் முற்றிற்று.

உ
சிவமயம்.

# நூல் வரலாறு.

திவ்விய மங்கள தேஜோமயமாகிய சிவபெருமானே பரம்பொருளென்றுணர்ந்த உண்மைஞானத்தையுடைய வசிட்டர் - வேதாரணியர் - புலத்தியர் - துருவாசர் - சுகர் - மாண்டவியர் - சம்வர்த்தர் - சுநச்சேபர் - சம்புபத்தர் - சதாநந்தர் - ஆத்திரேயர் - சௌநகர் - புலகர் - சமதக்கிநி - சங்கர் - மாதேசர் - லிகிதர் - பராசர் - குற்சர் - கற்கர் - நாரதர் - விச்சுவாமித்திரர் - பரத்துவாசர் - உத்தாலகர் - காசிபர் - வாமதேவர் - கண்ணுவர் முதலாகிய ருஷிசிரேஷ்டர்கள் முன்னொரு காலத்தில் நைமிசாரண்ணியத்தில் திருவெண்ணீறு சண்ணித்து, திரிபுண்டரமணிந்து, அக்கமாலைசூடிச் சிவத்தியாநபரராய், வேதாகமங்களாற் பரமபதியைத்துதித்து வாழ்ந்திருந்தனர். அக்காலத்துச் சதுர்வேத ஷடங்க அஷ்டாதஶபுராணங்களை வியாதமுநிவர்பால் ஐயந்திரிபறவுணர்ந்த புண்ணியவடிவினராகிய ஸூதபுராணிகர் அங்கெழுந்தருள, முநிவர்கள் கண்டு எதிர்கொண்டழைத்து அருக்கியபாத்திய ஆசமாதிகளாலுபசரித்துத் தகுந்த ஆதநத்திருத்தி “மும்மலமற்ற முநிபுங்கவரே! எமது தவப்பேற்றால் தேவரீர் ஈண்டெழுந்தருளப் பெற்றோம். சிவபிரானே அகிலலோக சிருஷ்டியாதி பஞ்சகிருத்திய காரணரென்றும், அவரது திருவடியே அழிவற்ற நற்கதியையளிப்பதென்றும், அவரை மகிழச்செய்வது ஸ்ரீ பஞ்சாக்ஷரமந்திரமேயென்றும் யாங்கள் உணர்ந்திருந்தும் அப்பெருமானது புகழைக் குறிக்கும் பலபுராணங்களைத் தேவரீர் அடியேங்கட்குபதேசித்திருந்தும், அம்மகாதேவன் அடியார்க்குறும் இடுக்கண்களைந்து இஷ்ட சித்திகளையருளும்படி அநாதியே சகளீகரித்த அவசரங்களென்னும் அஷ்டாஷ்ட மூர்த்தமாகிய **சிவபராக்கிரமத்தை** நன்குணரும்படி அநுக்கிரகஞ்செய்யவேண்டும்" என்று விண்ணப்பிக்க, ஸூதமுனிவர் “நைமிசாரணியவாசிகளே! பெரியோரைச் சேவித்தது வீண்போகாமற் சிவபுண்ணியத்தைப் பெறச்செய்தீர்கள்” என்று கூறிச்சிறிதுநேரம் அசைவறச் சிவயோக நிஷ்டைகூடி வீற்றிருந்து, காளகண்டமுங் கண்ணொரு மூன்றுந் தோளொருநான்குஞ் சுடர் முகமைந்துமுள்ள சுயஞ்சோதியாகிய சிவபிரானை யுள்ளத்திருத்தி "நீங்கள் விரும்பிய சரிதை பதினெண் புராணங்களிலுஞ் சிறந்த புராணரத்திநமாக விளங்கும் ஸ்ரீஸ்காந்த மகா புராணத்திலுள்ள சநற்குமார சங்கிதை - சூதசங்கிதை - சங்கரசங்கிதை விஷ்ணு சங்கிதை - பிரமசங்கிதை - சூரியசங்கிதையாகிய ஆறு சங்கிதைகளுள், சநற்குமார சங்கிதையில் மூர்த்திமான்மியமுரைத்த சர்க்கத்தில், திருநந்திதேவர் சநற்குமாரமுநிவருக்குக் கூறியதாக வுள்ளது. இதனை அவர்பாற்றெரிந்த வியாதமுநிவர் எனக்குபதேசித்தருளினர். அதனை ஒருவகையாகக் கூறுகின்றேன். திரிகரண சுத்தியோடு கேட்பீர்களாக" என்று சூதமுநிவர் எம்பெருமானது அஷ்டாஷ்ட மூர்த்தங்களின் பிரபாவத்தைக் கூறக்கேட்டு உரை குழற, உடலசைய, உள்ளமுருக, இன்பவெள்ளம் பெருகப்பரவினர் பாடினர் - ஆநந்தக்கூத்தாடினர். பரவசராய் அத்திருவுருவங்களை யருச்சித்து அரியபுண்ணியத்தைக் கைக்கொண்டு எழுந்தருளி யிருந்தனர்.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# அஷ்டாஷ்டமூர்த்தநாமத்தியாநம்

“லிங்கம்லிங்கோத்பவஞ்சைவ முகலிங்கம்ஸதா ஶிவம்
மஹாஸதாஶிவஞ்சைவோ மாமஹேஶமத:பரம்
ஸுகாஸநமுமேஶந்து ஸோமாஸ்கந்தந்ததைவச
சந்த்ரஶேகரமூர்த்திஞ்ச வ்ருஷாரூடம்வருஷாந்திகம்
புஜங்கலளிதஞ்சைவ புஜங்கத்ராசஸமேவச
ஸந்த்யாந்ருத்தம்ஸதாந்ருத்தம் தாண்டவம்ஜாஹ்நவீதரம்
கங்காவிஸர்ஜநஞ்சைவ த்ரிபுராந்தகமேவச
கல்யாணஸுந்தரஞ்சைவ அர்த்தநாரீஶ்வரந்ததா
கஜயுத்தம்ஜ்வராபக்நம் ஶார்த்தூலஹரவிக்ரஹம்
ததாபஶுபதஞ்சைவ கங்காளம்கேஶவார்த்தகம்
பிக்ஷாடநந்துஶிம்ஹக்நம் சண்டேஶ்வரப்ரஸாதகம்
தக்ஷிணாமூர்த்திதத்பேதம் யோகவீணாதரந்ததா
காலாந்தகந்துகாமாரிம் லகுளேஶ்வரபைரவம்
ஆபதுத்தாரணஞ்சைவ வடுகம்க்ஷேத்ரபாலகம்
வீரபத்ரமகோராஸ்த்ரம் தக்ஷயஜ்ஞஹரந்ததா
கிராதம்குருமூர்த்திஞ்ச அஶ்வாரூடம்கஜாந்திகம்
ஜலந்தரவதஞ்சைவ மேகபாதந்த்ரிமூர்த்திகம்
த்ரிமூர்த்தித்ரிபதஞ்சைவ ததாகௌரீவரப்ரதம்
சக்ரதாநஸ்வரூபஞ்ச கௌரிலீலாஸமந்விதம்
விஷாபஹரணஞ்சைவ கருடாந்திகமேவசமவச
ததாப்ரஹ்மஶிரஶ்சேதம் கூர்மஸம்ஹாரமேவச
மத்ஸ்யாரிந்துவராஹாரிம் ப்ராத்தநாமூர்த்தமேவச
ரக்தபிக்ஷாப்ரதாநஞ்ச ஶிஷ்யபாவந்ததைவச
ஷடாநநந்ததாஷ்டாஷ்ட விக்ரஹம்பாவயேத்ஸதா."

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.
பரமபதயே நம:

### முதலாவது

# இலிங்கமூர்த்தி.

ஒலி முதலிய புலன்களின்றி மனோ வாக்குகளுக்கெட்டாததாய் அளவில்லாத பேரொளியாய்த் தனக்குமேல் நாயகமில்லாததாய் அருவமாய் நின்மலமாய்க்குணர கிதமாய் அநந்தகுணமணியாய் வண்ணமற்றதாய் நாசரகிதமாய்ச் சர்வஜகத்துக்கும் ஏதுவாய் அவ்யக்தமெனப் பழமறை பகர்வதாகியுள்ளது சுத்தசிவம். மேற்கூறிய விலக்கணங்களையுடைய அப்பரசிவம் ஆன்மாக்களின் தியாநபாவனா நிமித்தம் நிட்கள சகளத் திருவுருக் கொண்ட நிலை இலிங்கமெனப்படும். அவ்விலிங்கத்தின் பிண்டிகையானது சத்தியுருவம். இலிங்கமானது சிவரூபம். ஆகவே, இலிங்கம் ஞானசத்தி வடிவம். பீடம் கிரியாசத்திவடிவம். ஆதலின் இவ்விரண்டுஞ் சிவனதிஷ்டிக்குக்தேகம். இத்தேகத்தை யதிஷ்டித்துள்ளவனாகிய பரசிவன் இலிங்கி யாம். முன்னர்க்கூறிய அவ்விலிங்கம், வ்யக்தம் - வ்யக்தாவ்யக்தம்-அவ்யக்தமென மூவிதமாம். அவற்றுட் சந்திரசேகரர் முதலிய பல திருவுருவங்களையுடைய சகளவுருவமே வ்யக்தம். சகளநிஷ்களமே வ்யக்தாவ்யக்தம். நிஷ்களமே அவ்யக்த மென்பர். இனி வ்யக்தாவ்யக்தம் சிவலிங்கவுருவமாம். அதன் திருவுருவில் விருத்தமே ருத்ர பாகம். பீடத்தின் அதோபாகத்தின் அடிநான்குமூலை பிரமபாகம். நடுவின் எட்டு மூலைவிஷ்ணுபாகம் இவற்றுட் பிரமபாகம் நபும்ஸ்கலிங்கம். விஷ்ணுபாகம் ஸ்திரீலிங்கம். உருத்திரபாகம் புல்லிங்கமாம். இதுவே பிரணவமுதற் பொருள். இதன்சோதி யுருவமே மகார அகார உகாரமாயிருக்கும். அகார வாச்சியமே சிவம். உகார வாச்சியமே சத்தி மகாரவாச்சியமே பரம் எனவும், அகாரம் நாதம், உகாரம் விந்து , மகாரம் கலை எனவும், வேதங்கூறும். இவை சிவனது அவ்யக் தவுருவாகிய நிஷ்களம். இவ்வோங்கார சிவசத்திலிங்கத்திற் சதாசிவாதியர் தோற்ற லயமாவர். அகாரங்கண்டம், உகாரங் கோமுகம், மகாரம் வட்டமாய், சிவசாதாக்கியம் - அமூர்த்திசாதாக்கியம் - மூர்த்திசாதாக்கியம் - கர்த்திசாதாக்கியம் - கன்மசாதாக்கியமாகும். அவற்றுள் சிவசாதாக்கியமாவது கரண வியாத்தி யதீத மாய் அதிசூக்குமமாய் மகாசோதியுருவாய் நிரஞ்சநமாய்ப் பரா சத்தியால் அதிஷ்டிக்கப்பட்டுள்ளது. இதுவே லயத்தாநம். இதை யதிஷ்டிக்குஞ் சத்தி சாந்திய தீதை. அமூர்த்தி சாதாக்கியமாவது வடிவுறுதியாய்க் கலைகளுக்கப்பாற்பட்டு அநேக சூரியருதித்ததை யொத்த தாணுலிங்க மத்தியத்திற் காண்டற்கரிய திருவுருப்பெற் றெழுந்தருளியிருப்பது. இஃது அமூர்த்தமாகிய காந்தியென்னுஞ் சத்தியால் அதிஷ்டிக்கப்பட்டிருக்கும். மூர்த்திசாதாக்கியமாவது காணப்பட்ட வடிவையுடைத் தாய்க் காலாக்கிநி தேஜஸை யுடையதாய் இலிங்க வடிவாகி ஊர்த்வபாகத்து ஒருதிருவதனமும் இச்சை ஞாநக் கிரியைகளாகிய மூன்று திருநேத்திரங்களும் அகண்டிதமானமூர்த்தமுமுடையது. இது வித்தை என்னுஞ் சத்தியால் அதிஷ்டிக்கப்

பட்டிருக்கும் கர்த்திருசாதாக்கியமாவதுசத்தாய், சுத்தபடிக வொளிகொண்ட திவ்ய லிங்கமாய் நாலுதிருமுகமும் பன்னிரு திருநேத்திரங்களுமுடைத்தாய் வலப்பாற் சூலம் கட்கம் வாள் அபயம், இடப்பால் நாகம்பாசம் மணிவரதம் ஆகியவற்றைப் பெற்றுக்கருத்தாவுக்குக் குணமாய்ப் பிரதிட்டாசத்தியை அடைந்திருப்பது. கன்ம சாதாக்கியமாவது தொழிலென்னும் யோகராமத்தையடைந்து நாத மயமான ஞாநலிங்கமும், அபேதவிந்து யேமான கிரியாபீடமுங் கூடிப் பஞ்சகிருத்தியஞ் செய்வது. இது நிவர்த்திசத்தியுடன் கூடியிருக்கும். சிவசாதாக்கியம் அமூர்த்தி சாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம் கர்த்திரு சாதாக்கியம் இவை நான்கும் நாதத்துத் தொழில் அறுதி கன்மசாதாக்கியம் தொழில். நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி யென்னுஞ் சத்திகள் நான்கும் விந்துவிற்றொழில். சாந்திய தீதையில் தொழிலறுதி. இவ்வகைத் தொழிற்கொண்ட நிவிர்த்தியே முதலானபீடமும், தொழிலறுதியான கர்த்திருமுதலான விலிங்கமும், கன்மசாதாக்கியமான விலிங்கமும், சாந்திய தீதையான நான்கும் தந்தொழில்களை பள்ளடக்கித்திரண்ட குடிலாபீடத்து வியாபிநி முதலிய சத்திகளாற் பிரேரேமிகப்பட்டுள்ள இந்திகையாதியாய் நாதகலைகளைந்தும் பொருத்தின் இடம் நாதமயமான இலிங்கமாம். இந்நாதமயமான விலிங்கத்தின் கண் இடை குடக்கு வடக்கு தெற்கு கிழக்கு முதலிய திசைகளிலுள்ள சதாசிவன் ஈசன் பிரமன் ஈசன் ஈசானன் முதலிய மூர்த்திகனிடத்துச் சாதாக்கிய முதலிய ஐந்தும் பொருந்தியுள்ள அவசரம் கன்மசாதாக்கியமாம் முன்னர் மொழிந்த ஐவகைச் சாதாக்கியங்களுட் சிவசாதாக்கியம் பரமசிவத்தையும், அமூர்த்திசாதாக்கியஞ் சிகசாதாக்கியத்தையும், மூர்த்திசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியத்தையும், கர்த்திரு சாதாக்கியம் மூர்த்திசாதாக்கியத்தையும், கன்மசாதாக்கியங் கர்த்தருசாதாக்கியத் தையும் பொருந்திற்கும். இஃது அழிவில்லாப் பொருள்கட் கெல்லாமாதாரமாய் அழிபொருள்களை யதிஷ்டிப்பித்திருப்பது. இது பஞ்சமூர்த்திகளுடைய ஒருமைப் பாட்டி லுண்டாதலாலும், அண்டத்துப் பிண்டங்கட்குயிராய் நிற்றலாலும், பிண்டிகை யெனப்பட்ட பீடத்தில் எழுந்தருளியிருத்தலாலும், பிண்டமான சத்தி தானே திருமேனியாதலாலும், கருணாநிலையான நிஷ்களமும் பெருமையுற்ற சகளமுந் திரண்டு பிண்டமென்னும் பெயரை யுடையதாயிருக்கும்.

பிரம விஷ்ணு ருத்திரரை யதிஷ்டிக்கப்பட்ட பீடமும், அதற்கு ஏதுவான மஹேஸ்வரரை யதிஷ்டிக்கப்பட்ட கல்லபத்திரமும், இவ்வகைய சிவபீடத் தெழுந்தருளியிருக்குஞ் சிவமூர்த்தியான சதாசிவமும், அவர் திருமுக முதலிய திருவுறுப்புகளை யதிஷ்டிக்குஞ் சிவசத்தி கிரியைகளாகிய வித்தியாதேகமும், அதற்கு மூர்த்திமானாகிய சிவோபாதி ஐந்தும், அபரநாதம் அபரவிந்துவையும் பரநாதம் பரவிந்துவையும் அதிஷ்டிக்கப்பட்ட சாதாக்கியமென்று பெயருற்றதே இலிங்கம்.

பின்னும் சிவபெருமான் அதிகாரத்தனமாகிய சதாசிவரெழுந் தருளியிருக்கும் பதுமத்தின் நிழங்கு பிரமாண்டமாகிய பிருதிவிதத்துவம். அப்பு முதலிய கலையீறாகச்சொல்லிய இருபத்தொன்பது தத்துவமும் நாளம். அமரேசமுதலிய புவனமெழுபத்திரண்டும் நாளத்தின் கண்டங்களாகிய முள்ளுகள். புத்தி குணமாகிய பஞ்ச சற்பாவம் நாளத்தின் சூத்திரமான நூல். புறவிதழைச் சுமந்து நிற்கும் முடிச்சுப்படம் மாயாதத்துவம். உள்ளிதழ் சுத்தவித்தியா தத்துவம். சுத்தவித்தியா

புவன கலாசத்திகள் அறுபத்து நான்குங் கன்னிகை கலையறுபத்து நான்குங் குண்டலி. வித்தை ஐம்பத்தோரக்ஷரம். வட்டம் நான்கும் ஞானங் கிரியை யிச்சையாதி சத்திகளால் வியாபிக்கப்பட்ட சூரியன்-சந்திரன்-அக்கினிமண்டலமாம். பிருதிவி முதலிய முப்பத்தொரு தத்துவங்களையு மதிஷ்டிக்குஞ் சுத்த வித்தை யினுடைய வியாத்தியான சத்திமண்டலமென்னும் அபரவிந்து, அபரநாதம், பரவிந்து, பரநாதமாய்நிற்பது சிவாதகமாம் சுத்ததத்துவ மிருபத்து மூன்றும் இவற்றை யதிஷ்டிக்கும் சமனையுன்மனைகள் திருமேனியாம். இவ்வகைப் பெருமையுற்றதே தியாநலிங்கம். இலிங் = லயம், கம் = தோற்றம்; ஆகவே சிருஷ்டியாதி பஞ்ச கிருத்தியத்தைச் செய்யு மீசுரப்பிரபாவம் இலிங்கமெனப்படும்.

**வாதுளாகமம்.**

“*ஸௌவீர்யம் நாஸ்திதத்தேஹே மாம்ஸாஸ்திருதிரக்நச*
*இந்த்சாபஇவாகாஸே தர்ப்பணேப்ரதிபிம்பவத்*
*அமூர்த்தத்வாத்கலாஹீநம் தத்ரூபம்லிங்கவத்பவேத்*
*ஸூர்யகோடிப்ரதீகாஸம் ஜ்யோதிஸ்தம்பாக்ருதிஸ்திதம்*
*ஏதஸ்யாந்தர்க்கதாமூர்த்தீ ரமூர்த்தாதிரிஹோச்யதே.*"

"*ஏதத்வைதிவ்யலிங்கந்து மூலஸ்தம்பமிஹோச்யதே*
*லிங்கேஸர்வம்ஸமுத்பந்தம் லயஸ்தத்ரைவ சோச்யதே*
*ஸ்ருஷ்டிஸ்ஸம்ஹாரவோக்தம் லிங்காநாமஸ்யசோச்யதே.*"

**திருமந்திரம்.**

"*மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன்*
*பலந்தரு மைம்முகன் பரவிந்து நாதம்*
*நலந்தரு சத்தி சிவன்வடி வாகிப்*
*பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே.*”

“*அகார முதலா வனைத்துமாய் நிற்கும்*
*உகார முதலா வுயிர்ப்பெய்தி நிற்கும்*
*அகார வுகார மிரண்டு மறியில்*
*அகார வுகார மிலிங்கம தாமே.*”

**இலிங்கமூர்த்தயே நம:**

### இரண்டாவது

# இலிங்கோற்பவ மூர்த்தி.

இரண்டாயிரஞ் சதுர்யுகம் பிரமனுக் கொருநாளாதலின் ஆயிரஞ் சதுர்யுக மகல ஒருபகல் கழிதலாற் பிரமன் துயின்றனன். அப்பொழுது சூரியர் சந்திரர் நக்ஷத்திரங்கள் நவக்கிரகங்கள் முநிவர்கள் தேவர்கள் முதல் மாறிய பதினான்கும நுக்களும், பதினான்கு இந்திரர்களும், யாவரும் மகலோகமுற்றனர். கற்பாந்த வெள்ளந் தோன்றி உலகிலுள்ள உயிர்களையழித்தது. மகாமுநிவர் சநலோஞ் சேர்ந்தனர். கடற்பெருக்கால் உலக மறையத் திருமால் ஓராலிலையின்பேரிற் குழந்தை வடிவுகொண்டு சிவத்தியாநத்துடன் நித்திரை செய்தனன். அதைச் சநலோகத்துள்ள முநிவர்கண்டு துதிக்கவிழித்துப் பழையவுலகைத்தேட, அதுபாதலத் தமிழ்ந்ததனால் வராகவுருவேற்றுப் பிலத்தின் வழியே சென்று கண்டு தனது கொம் பிற்குத்தி யெடுத்துவந்து முறைப்படி நிறுத்திப் பாற்கடலிற்படுத்து யோகநித்திரை யிலிருந்தனன். இதனுள் ஆயிரஞ் சதுர்யுகங்கழிய, பிரமனுக்கு இரவு நீங்கிப் பகற் காலமெய்தியதனால் கண்விழித் துலகைப்பார்த்து தேவர் அசுரர் மனிதர் விலங்கு முதலிய தாவரசங்கமங்களைச் சிருட்டித்துத் தேவலோக பூவுலகங்களை நிரப்பி இந்திரனை அரசிலிருத்தி அட்டதிக்குப்பாலகரை அவரவர் பதவியில் வைத்துத் தான் துயின்றால் உலகந்துயிலுந் தானெழுத்தால் உலகமெழும் ஆதலின். தன்னை விட வேறே கடவுளில்லையென்று தருக்கெய்தித் தரணி முழுவதும் பார்த்து வருகையில், க்ஷீராப்தியிலே திருமால் இறுமாந்து யோக நித்திரை செய்வது கண்டு அகந்தையால் மார்பிற்றட்டி, “எழுந்திரு" என, விண்டுவிழிக்க, பிரமன் "நீயார்?" என்று வினாவ, "யானுன் தந்தை' என, "நீயின்னும் விழிக்கவில்லை; நீயென்மகன்; யானேயுன்னைப் படைத்தேன்” என, திருமால் "நீயென்னுந்தியிற் பிறந்தோனலை யோ?” என, பிரமன் "பிருகுமுநிவன் சாபத்தா லுன்னைப்படைத்துப் படைத்துக் கை சிவந்திருக்கின்றன பார்' என, திருமால் "நான்முக! உனது நடுச்சிரத்தைச் சிவபிரான் கிள்ளியபோது அச்சமுற்றதை மறந்தாய்" என்று பலவகையாகக்கூற, கமலாசநன் கடுஞ்சினங் கொண்டு "நாமிருவரும் போர்புரிந்தால் நம்மில் வெற்றியுற்றவனே பெரியவன்" என, இருவருஞ் சம்மதித்துப் போர்க் கோலங்கொண்டு வில்லை வளைத்துப் பல்வகைப் பாணங்களைப் பிரயோகித்துச் சமர் புரிகையில் அவ்வத்திரங்கள் அவனிமுழுவதுந் திரிந்தனவாதலாற் பலரிறந்தனர், பலர்கரித்தனர், பலர் கயிலைமலையை யடைந்தனர், மேகங்கள் கரிந்தன, தேவலோகமும் பூவுலகமுமெரிந்தன, கடல்கள் முழுவதும் நீர் வறந்தன, இவ்வாறு செருச்செய்கை யிற் சிவாக்கினையினால் நாரதமுநிவர் அங்கு வந்து "நீங்க ளிருவரும் நான் முதல் நான் முதலென்று சண்டைசெய்கிறீர்கள். உங்களிருவரில் ஒருவருமுதல்வரல்லர். முதல்வன் சிவபிரான் இன்னும் போர்செய்வீரேல் முதற்பொருள் சோதிவடிவாய் வரும்" என்று தேற்றிப்போகவும், அதனைக் கவனியாமல் இருவரும் முன் போலவே சமர் விடாதிருக்கக் கண்ட சிவபெருமான், இன்னுஞ்சமரைத் தடுக்காதிருந்தால் உலக மழியுமென்று திருவுளங்கொண்டு, யாவர்க்கு முற்ற விடுக்கண் களைவாராய் ஓரக்கினித்தம்பமாய் இருவரு மஞ்சும்படி அவர்க்கிடையே தோன்றினர். அப்பொழுது அசரீரி “சிறுவர்களே! உங்கள் வல்லமையைச் சோதிக்கக் கருதி, சிவபெருமானே

சோதி வடிவாய் எழுந்தருளினர். இத னடிமுடிகளை யறியுங்கள்" என, பிரம விஷ்ணுக்கள் அவ்வொளிப்பிழம்பைத் தரிசித்து அசரீரியைக் கேட்டவுடனே கோப மொழிந்தும் அகந்தை நீங்காதவர்களாய் "இதன் முடியையும் அடியையும் தேடுவோம். அவற்றி லொன்றைக் கண்டவரே மேலோர்" எனச் சபதஞ்செய்து, பிரமன் "யான் முடியைக் காண்பேன்" என்றும், விஷ்ணு "அடியைக் காண்பேன்" என்றுந் தம்முள் மநத்தீர்மானஞ் செய்துகொண்டனர்.

மாயவன் வராக வடிவேற்றுக் கொம்புகளாற் பூமியைத்தோண்டி அதலம் விதலம் சுதலம் நிதலம் தராதலம் ரசாதலம் பாதல மென்னுஞ் சத்தலோகங்களுந் தேடிச் சென்று மேலுஞ் செல்லுகையில் அநேககாலமாகியும் அடியைக் காணவில்லை. நாவறண்டு ஒளி மழுங்கிக் காதடைப்புற்றுச்சலித்த திருமாலுக்குப் பண்டைய வுணர்வு தோன்றியது. மீண்டு வரவுஞ் சக்தியற்றுத் திரிநேத்திரனைப் பலவகையாகத் துதித்து "அடியேன் அறியாமையாற் செய்த பிழையைப் பொறுப்பீரர்க" என்று பிரார்த்தித்துப் பெருமானருளாற் சிறிது வலிபெற்றுப் பூமியையடைந்து சோதிமலையைச் சமீபித்து வணங்கி நின்றனன். இது நிற்க. முடிகாண்பதாகச் சபதஞ்செய்த பிரமன் அன்னப்பறவை வடிவேற்றுப் பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் சநலோகம் தபோலோகம் மகாலோகம் சத்தியலோகமென்னுஞ் சத்தலோகங்களுந் தேடி ஆயிரவருஷந் திரிந்து திரிந்துழன் றும் முடியைக் காணாமல் திரும்ப விரும்பானாய் "திருமால் அடி கண்டு வருவான். தலைவனாவானே. யான் முடிகண் டல்லது திரும்பேன்" என்று மேலுஞ் சென்றமையாற் கண் சுழன்று சிறகுகள் நொந்து காலோய்ந்து மனந் திரிந்து துன்புறுகையில் "ஐயோ இவ்வன்னம் இன்னுஞ் சிறிது நேரம் பறந்தாலிறக்கும். சோதியைச் சிவமென் றறியாதோ? அம்முடியைக் காண முடியுமோ? திருமாலே அடியைத் தேட முடியாமற் சிவனே சரணனெனத் திரும்பிச் சோதியையடைந்தனன்" எனச் சித்தர் சிலர் செப்பக் கேட்டு அவரை வணங்கிச் சிவபிரானது புகழைச் சிந்தித்து, சிவார்ச்சனை செய்யத் துணிந்து திரும்பிப் பூலோகத்தை யடைந்து, சோதியருகே தொழுது நிற்கும் வாசுதேவனைக் கண்டு "மாலே! நாமிருவரும் மால்கொண்டு கெட்டோம் அடிமுடி தேடி யறியாமற் போனோம். இனி அவனை யருச்சித்து அவனருளா லவற்றைக் காண்போம்" என, இருவரு மொத்து ஆங்கோர் சிவலிங்கப் பிரதிட்டை செய்து, திருமஞ்சன முதலியவற்றை யியற்றி ஆகம முறைப்படி யருச்சிக்க, பெருமான் நீலகண்டமும், மான் மழுவரதாபயம் பொருந்திய சதுர்ப்புஜமும், நெற்றிக்கண்ணும், நிலவணி சடையும், பார்ப்பதி பாகமுமாகக் காட்சியளிக்க, இருவரும் அஷ்டாங்க பஞ்சாங்க சாஷ்டாங்க நமஸ்காரங்களைச் செய்து, "யாங்களறியாமற் செய்த பிழையை க்ஷமிக்கவேண்டும். புத்திரர் செய்த குற்றத்தைப் பெற்றவர் பொறுக்க வேண்டு மன்றோ" என்று பல வகையாகப் பிரார்த்திக்க, சிவபெருமான், "மைந்தர்களே! அஞ்சாதீர்கள். உங்கள் பிழையைப் பொறுத்தோம். நீங்கள் செய்த பூசைக்குகீ களித்தோம். உங்கள் பதவியை யளித்தோம். வேண்டிய வரங்களைக் கேளுங்கள்" என, பிரம விஷ்ணுக்கள் 'தேவரீர் திருவடிகளில் நீங்காத அன்பு அநுக்கிரகிக்கவேண்டும்" என்று வேண்ட அம்பிகாபதி அருளிச்செய்கின்றார்.

*"மைந்த ரின்னையென் வலப்புறத் தீன்றன னறிய*
*பைந்து ழாய்மது வண்ணனை யென திடப் பாலிற்*
*றந்த ளித்தன னீவிர்வெங் கரிமுகன் றழல்வேற்*
*கந்த னேரெனக் கருணையி னுச்சிமோந் துரைத்தான்.'*

என்றபடியே "பிரமனே! நீயென் வலப்புறத்திற் பிறந்தாய். திருமால் என்னிடப்புறத்திற் பிறந்தான். நீங்களிருவரும் எனக்குக் கணபதியுங் கந்தனும் போல்வீர். பகையின்றி ஒற்றுமை பெற்று வாழக்கடவீர்" என்றருள் செய்து "உங்கட்கு ஞானமுண்டாகக் கடவது" என்றாசீர்வதித்து அந்தர்த்தானமாயினர். சோதி சிறிதுசிறிதாகச்சுருங்கி மலைவடிவாய் உலகத்தாரால் துதி செய்ய நின்றது (இஃது அருணாசலம் என்பர்.) பிரமவிஷ்ணுக்கள் அம்மலையை மும்முறை வலஞ்செய்து பணிந்து தத்தம் பதவியடைந்து பண்டு போல் வாழ்ந்திருந்தனர். இவ்வகைய அத்தாணுவில், தோன்றிய திருவுருவமே இலிங்கோற்பவமெனப் பெயர்பெறும்.

**வாமநபுராணம்.**

*"தத:பிதாமஹோதேவம் கேஸவம்சஜகத்பதி:*
*ஆஜக்மதுஸ்த முத்தியய யத்ரலிங்கம்பவஸ்யது. இத்யாதி*
*நைவாந்தமம்பராத்ப்ரஹ்மா விஸ்மித:புநாரகதம்*
*விஷ்ணுர்கத்வாதபாதாளாந் ஸப்தலோக பராயண:*
*சக்ரபாணிர்விஷ்க்ராந்தோ லிங்கம் நலபதேமுநே*
*விஷ்ணு:பிதாமஹஸ்சோபௌ ஹரலிங்கம்ஸமேத்யஹி*
*க்ருதாம்ஜலி புடௌபூத்வா ஸ்தோத்திரம்தேவஸ்ய்சக்ரது."*

**இலிங்கோற்பவாய நம:**

### மூன்றாவது

# முகலிங்க மூர்த்தி.

மேலிலிங்கப் பிரபாவத்திற் பிரதிபாதித்த சிவலிங்கம், திருமுகங்களைப் பெற்றிருக்கின் முகலிங்கமெனப்பெறும். அதுதான் ஆட்யம், அநாட்யம், ஸுரேட்யம், ஸர்வஸமம் என நான்குவகைப்படும். ஆட்யம் ஆயிரத்தொரு லிங்கங்களுடையது. ஸுரேட்யம் நூற்றெட்டு லிங்கங்களுடையது. அநாட்ய ஸுரேட்யலிங்கங்கள் திருமுகங்கள் பெறா. ஸர்வஸமம் 5-4-3-2-1 இவ்வகைய ஐந்து முகபேதங்களைப் பெறும். ஈசாநம் தற்புருஷம் வாமம் அகோரம் ஸ்த்யோஜாதம் முதலிய ஐந்தும், ஈசாநமொழிந்த முகங்கள் நான்கும், தற்புருஷ அகோர வாமதேவ முகங்கள் மூன்றும், தற்புருஷ ஸத்யோஜாத முகங்களிரண்டும், தற்புருஷ முகமொன்றும் பெற்றிருக்கநிற்பது ஸர்வஸமமாகும்.

மேற்கூறிய ஸர்வஸமலிங்கம் அல்லது முகலிங்கத்தின் பிரபாவத்தினை மற்றுமொருவகையால் ஆகமங்கள் கூறும். அதனை யொருவாறு சுருக்கிக் கூறுவாம்.

அநாசிருதர் அநாதர் அநந்தர் வியோமரூபர் வியாபகரென்னு மூர்த்திகளை வரும், பராசத்தி 'கிரியாசத்தி ஞாநசத்தி இச்சாசத்தி ஆதிசத்தியரென்னும் ஐவகைச் சத்திகளைக்கொண்டு, முறையே சிவசாதாக்கியம் கன்மசாதாக்கியம் கர்த்திரு சாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியங்களால், அசுத்த பஞ்சகிருத்தி யங்களை நடாத்துதலால், இவை அநாசிருதருடைய அவதாகாரிய மென்னுங் கன்மசாதாக்கியருக்குச் சுத்தர்சுத்த பஞ்சகிருத்தியங்களின் தொழில்கள் தாமே ஐந்து திருமுகங்களாம். இதில் அநாசிருதராவார் சமனையாம் பராசத்தியும், உன்மனை யாம் பரமுந் தம்முளொன்றி ஆன்மாக்களைத் திருவுளத்தடைத்த நிலையர்.

அநாசிருதராகிய இவர்க்குப் பிரமனளவாகவும், அநாகதர்க்கு விஷ்ணு அளவாகவும், அநந்தர்க்கு உருத்திரனளவாகவும், வியோம ரூபர்க்கு மகேச்சுரனளவாகவும், வியாபகர்க்குச் சதாசிவனளவாகவும் வியாத்தி. மேற்கூறிய ஐவருள், வியாபகருடைய மூர்த்திபேதமான ஆடகேசுரர் பாதாளாதிபதியாய் ஆங்குள்ளவர்தொழ எழுந்தருளுவர். வியோமரூபருடைய மூர்த்திபேதமான கூர்மாண்ட தேவநாயனார் இருபத்தெட்டுக்கோடி நரகத்திற்கதிபதியாயிருப்பர். அநந்தருடைய மூர்த்திபேதமான காலாக்கி. ருத்திரதேவர் பிரமாண்டத்தை யதிஷ்டித் தெழுந்தருளியிருப்பர். அநாகதருடைய மூர்த்திபேதமான ஆதாரசத்தி அண்டங்க ளைச் சுமந்து எழுந்தருளியிருக்கும். இவ்வகைச் சகலபுவநாதாரமாய்நின்று சிருட்டி-திதி-சங்காரம்-திரோபவம்- அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்களையும் நடத்துமி டத்துப் பிரம-விஷ்ணு-ருத்திர-மகேச்சுர-சதாசிவபேதமே முகலிங்கமெனவும் பெறும். விரிவு சிவாகமங்களுட் காண்க.

**ஸித்தாந்த சாராவளி.**

"*ஏகாதிகம்லிங்கஸஹஸ்ரமாட்யே*
*த்வஷ்டோத்தரம்லிங்கஶதம்ஸூரேட்யே*
*விசேஷதஸ்ஸர்வஸமேஶவக்த்ர*
*மாட்யேப்யநாட்யேவிநதேவபூஜ்யே.*"

**முகலிங்காயா நம:**

நான்காவது

# ஸதாசிவமூர்த்தி.

சாந்தராயும், சர்வ கர்த்தாவாயும், அவ்யயராயும், சர்வஜ்ஞராயும், ஸ்வபாவப் பிரகாசராகியும், அசலராகியும், அமேயராகியும், அநாதியாயும், அதுலராயும், சூக்ஷ்மராயும், மகானாகியும், சிக்கனராயும், வியாபியாகியும், முக்தப்பிரியராகியும், அமலராகியும், பராசத்தியுடன் கூடியுமுள்ள ஸதாஸிவமூர்த்தி ஈஸாநம் - தற்புருஷம் - வாமம் - அகோரம் ஸத்தியோஜாதம் முதலாகிய ஐந்து திருமுகங்களு டனியைந்து எருந்தருளி ஆன்மாக்களின் பாசச்சேதநிமித்தம் சித்தாந்தமாகிய காருடம் - வாமம் - பூததந்த்ரம் - பைரவ மீறாகிய ஆகம பேதங்களை ஈஸாந மொழிந்த நான்கு திருமுகத்தினும், காமிகாதி இருபத்தெட்டாகமங்களை ஈஸாநமுகத்தினும் அருளிச்செய்தனர். அக்காமிகாகி ஆகமங்களாவன:- காமிகம் - யோகஜம் - சித்தியம்- - காரணம்- அசிதம்- தீப்தம்- சூக்ஷ்மம்- ஸஹஸ்ரம் - அம்சுமான் - சுப்ரபேதம் - விஜயம் - நிஸ்வாஸம் - ஸ்வயம்பூதம் - ஆக்நேயம் - வீரம் - ரௌரவம் - மகுடம் - விமலம் - ஸந்தாஞாநம் - முகபிம்பம் - ப்ரோத்கீதம் - லளிதம் - சித்தம் - சந்தாநம் - சர்வோத்தமம் - பாரமேச்சுரம் - கிரணம் - வாதுள மென்பன. இவைகளைக் கேட்டோர் ப்ரணவர் - திரிகலர் - ஹரர் - சுதர் - பஸ்மர் - காரணர் - சர்வருத்திரர் - பிரசாபதி - சுசிவர் - சிவர் - அச்சுதர் - ஈஸர் - ஈஸாநர் - ஹுதாஸநர் - ஸூக்ஷ்மர் - வைச்சிர்வணர் - ப்ரபஞ்சநர் - காலர் - பீமர் - தர்மர் - அம்பு - அக்கர் - ரவி - தாஸேஸர் - விக்நேச்சுவரர் - சசி - அநாதிருத்ரர் - பரமேசர் - தசார்ணர் - சைலஜர் - நிதநேசர் - பிரமர் - வியோமர் - ஹுதாஸநர் - தேஜசு - ப்ரஜாபதி - பிராம்ஹணேசர் - நந்திகேசர் - சிவர் - மஹாதேவர் - சர்வாத்மகர் - வீரபத்திரர் - அநந்தர் - பிரஹஸ்பதி - பிரசாந்தர் - ததீசி - சூலி - கவசர் - ஆலயேசர் - லளிதர் - பிந்து - சண்டி கேச்சுவரர் - சிவநிஷ்டர் - அசம்வாயர் - சேரமர் - ந்ருசிம்ஹர் - ஸ்ரீதேவி - உசநர் - தேவவிபவர் - சம்வர்த்தகர் - சிவர் - மஹாகாளர் முதலியோர். சிவாகமங்களுள் முதலிற்கூறிய பத்தும் சிவபேதங்களாம். ஏனைய பதினெட்டும் உருத்திரபேதங்களாம். இச்சிவாகமங்க ளிருபத்தெட்டும் வக்த்ராரம் முதல் விஸ்வாத்மகம் ஈறாயுள்ள இருநூற்றெட்டு உட்பிரிவுடையன. அவற்றைக் காமிகந்தந் திராவதாரப்படலத்துட் காண்க

காமிகம் - யோகஜம் - சிந்தியம் - காரணம் - அசிதம் என்னு மைந்தையும் ஸத்தியோஜாத முகத்தினின்று கௌசிக விருடியின் பொருட்டும், தீப்தம் - சூக்குமம் - சகச்சிரம் அஞ்சுமான் சுப்பிரபேதம் என்னு மைந்தையும் வாமதேவ முகத்தினின்று காசிப ருஷியின் பொருட்டும், விஜயம் நிச்சுவாசம் சுவாயம்புவம் ஆக்கிநேயம் வீரம் என்னு மைந்தையும் அகோரமுகத்தினின்று பாரத்துவாசவிருடியின்பொருட்டும், ரௌரவம் மகுடம் விமலம் சந்திரஞானம் முகவிம்பம் என்னு மைந்தையும் தற்புருட முகத்தினின்று கௌதம விருடியின் பொருட்டும், புரோற்கீதம், இலளிதம் சித்தம் சந்தாநம் சர்வோக்தம் பாரமேசுவரம் கிரணம் வாதுளம்என்னுமெட்டையும், ஈஸாநமுகத்தினின்று அகத்திய விருடியின்பொருட்டும் அருளிச் செய்தனர் என்பதும் நூல் வழக்கு.

ஆகமமென்னு மொழியில், ஆ என்பது ஞானமும், க என்பது மோக்ஷமும், ம என்பது மலநாசமுமாம். ஆகவே ஆன்மாக்கட்கு மலத்தை நாசஞ்செய்து ஞானத்தை யுதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுத்தலால் ஆகமமெனப் பெயராயிற்று. வேதமும் ஆகமமும் சிவபெருமானாலேயே அருளப்பட்டவையாதலின், அவை தம்முட் சிறிதும் பேதமின்றி யியலுந்தன்மையன.

**திருமந்திரம்.**

"வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாக னருளவை நாடிலிரண் டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே"- என்றதும்.

**நீலகண்டபாஷியம்.**

"வயந்துவேத ஶிவாகமயோர்ப்பேதம் நபஶ்யாம:வேதோபி ஶிவாகம:" - வேதசிவாகமங்கட்குப் பேதங்காண்கின்றிலம். வேத மேசிவாகமம். - என்றதும்; இப்பெற்றி நோக்கியேயென்க.

| ஆகமங்கள் | கிரந்தசங்கியை | உபபேதங்கள் | திருஅங்கம் |
|---|---|---|---|
| காமிகம் | பரார்த்தம் | மூன்று | திருவடி |
| யோகஜம் | இலக்ஷம் | ஐந்து | கணைக்கால் |
| சிந்தியம் | இலக்ஷம் | ஆறு | திருவடிவிரல்கள் |
| காரணம் | கோடி | ஏழு | கெண்டைக்கால் |
| அசிதம் | நியுதம் | நான்கு | முழந்தாள் |
| தீப்தம் | நியுதம் | ஒன்பது | தொடை |
| சூக்ஷ்மம் | பதுமம் | ஒன்று | குய்யம் |
| ஸஹஸ்ரம் | சங்கம் | பத்து | கடித்தானம் |
| அஞ்சுமான் | ஐந்துலக்ஷம் | பன்னிரண்டு | முதுகு |
| சுப்ரபேதம் | மூன்றுகோடி | ஒன்று | கொப்பூழ் |
| விஜயம் | மூன்றுகோடி | எட்டு | உதரம் |
| நிஸ்வாஸம் | கோடி | எட்டு | நாபி |
| ஸ்வயம்பூதம் | ஒன்றரைக்கோடி | மூன்று | முலை |
| ஆக்நேயம் | முப்பதினாயிரம் | ஒன்று | கண் |
| வீரம் | நியுதம் | பதின்மூன்று | கழுத்து |
| ரௌரவம் | எட்டற்புதம் | ஆறு | செவி |
| மகுடம் | இலக்ஷம் | இரண்டு | திருமுடி |
| விமலம் | மூன்றிலக்ஷம் | பதினாறு | கை |
| சந்திரஞானம் | மூன்றுகோடி | பதினான்கு | மார்பு |
| முகவிம்பம் | இலக்ஷம் | பதினைந்து | திருமுகம் |
| புரோற்கீதம் | மூன்றிலக்ஷம் | பதினாறு | திருநாக்கு |

| இலளிதம் | எண்ணாயிரம் | மூன்று | கபோலம் |
|---|---|---|---|
| சித்தம் | ஒன்றரைக்கோடி | நான்கு | நெற்றி |
| சந்தானம் | ஆறாயிரம் | ஏழு | குண்டலம் |
| சர்வோக்தம் | இரண்டிலக்ஷம் | ஐந்து | உபவீதம் |
| பாரமேசுவரம் | 12-இலக்ஷம் | ஏழு | ஆரம் |
| கிரணம் | ஐந்துகோடி | ஒன்பது | இரத்தினாபரணம் |
| வாதுளம் | இலக்ஷம் | பன்னிரண்டு | பரிவட்டம் |

இவ்வாகமங்கள் சாதாக்கிய மூர்த்தியாகிய இப்பெருமானுக்கு இவ்வாறு திருமேனியாகக் கூறப்படும். [திருவை அங்கங்களுக் கெல்லாங் கூட்டி யுரைத்துக் கொள்க.]

இவர் படிகநிறம் - சடைமுடி - ஐந்து திருமுகம் - பத்துக்கரங்கள் - ஒருதேகம் - இரண்டு திருவடிகள் - வலக்கரத்து இச்சை ஞானக்கிரியையென்னும் மூவிலைச் சூலமும், பராசத்தி ரூபமாயமழுவும், கர்த்துருபாவமான கட்வங்கமும், வாளும், பீஜாபூரகமும், வச்ரமும், ஜநநபயத்தைப் போக்குவதான அபயமும், இடக்கரத் துரித்தி குணமாகிய நாகமும், தூல சூக்கும பூதங்களை நடத்தும் மாயாரூபமாகிய பாசமும், குணமாகிய நீலோற்பலமும், அங்குசமும், சுத்தா சுத்த அத்துவாவைப் பிரவர்த்திக்குங் குணமான தமருகமும், போகத்தைத்தரும் வரதமும், நாதகுணமா கிய மணியும், சங்கார குணமாகிய அக்கிநியும், திரோதாயி யென்னும் பரிவட்டமும், அருளாகிய சுகந்தமும் பரையாகிய மாலையும், அநுக்கிரகாங்குரமான சிறுநகையும் பொருந்தித் தியானபூஜாநிமித்தம் சகளத் திருவுருக் கொண் டெழுந்தருளி யிருப்பினும், இவையிற்றிற்கு அப்பாற்பட்டு மிருப்பர். இது கன்மசாதாக்கியத் திருவுருவாதலின், மேற் சிவலிங்கமூர்த்திக்குக் கூறிய அனைத்தும் ஈங்கு மொக்கு மெனவறிக. இவ்வகைப் பிரபாவங்களையுடையது ஸதாசிவமூர்த்தமெனப்படும்.

**ஆகமம்.**

"*பத்மாஸநஸ்தம்பஞ்சாஸ்யம் ப்ரதிவக்த்ரம்திரிலோசனம்*
*த்ருக்க்ரியேச்சாவிஶாலாக்ஷம் ஜ்ஞாநசந்த்ரகலாந்விதம்*
*தவளேஶாநவதநம் பீதம்தத்புருஷாநநம்*
*க்ருஷ்ணாகோரமுகோபேதம் ரக்தாபம்வாமதேவகம்*
*ஸுஶ்வேதம்பஶ்சிமாஸ்யைகம் ஸத்யோஜாதம் ஸமூர்த்தகம்*
*நாகோபவீதிநம்ஶாந்தம் ஜடாகண்டேந்துமண்டிதம்*
*ஶக்த்யஸிஸூகட்வாங்கம் வரவ்யக்ரகராம்புஜம்*
*தக்ஷிணேவாமஹஸ்தேச டமரும்பீஜபூரகம்*
*நாகாக்ஷஸூத்ரநீலோப்ஜம் பிப்ராணம்பஞ்சபி:கரை:*"

**ஸதாசிவாய நம:**

# மஹாசதாசிவ மூர்த்தி



ஐந்தாவது

# மஹாசதாசிவ மூர்த்தி.

உமாஸஹாயம் பரமேஸ்வரம் ப்ரபும்த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரஸாந்தம் த்யாத்வா முநிர்கச் சதிபூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ:பரஸ்தாத்" என்னுங் கைவல்யோபநிஷதத்தாலும் "நாஸாதா ஸீந்துஸ ஏவாஸீத் தமஆஸீத்" என்னுஞ் சுருதிப்பிரமாணத்தாலும் பிரதிபாதிக்கப்பட்டும், படகாரியத்துக்குக் குவிந்தன்போல நிமித்த காரணமான எந்த நிஷ்கள சோதியினால் ஜங்கம ஸ்தாவர ரூபமான சராசரங்களனைத்தும் எக்காலத்தும் ஓதப் புரோ தரூபமாய் மேல் கீழாகச் சிருட்டிக்கப்பட் டிருக்கின்றனவோ, விஞ்ஞானகல பிரளயாகல சகலராகிய மூவகைப் பட்ட ஆன்மாக்களும், மல மாயை கன்மம் விந்து திரோதானசத்தி யென்னும் ஐவகைப் பாசசமூகத்தினின்று நீங்குகின்றனரோ, அத்தகைய பிரணவபிரசாத மந்திரோச்சாரண த்வநிகதமாயும், அநாஹதசிவ சதாசிவ மஹேஸ்வர ருத்ர விஷ்ணு பிரமாதிகளுக்குக் தேஜஸைக்கொடுப்பதாயும், வியாபிநிக்கு மேற்பட்ட வியோம வென்னுஞ் சமனை யிடத்தை வியாபித்த அநாஹதசிவத்திற்கு மேலானதாய்ப் பரிபூரணமாய் நிஷ்களமாய் எழுந்தருளிய ஸ்ரீசிவபெருமான், இச்சையாற் சத்திகாரியத் திருவுருக் கொண்டு ஆன்மாக்களை யநுக்கிரகிக்கவெடுத்த உமாமகேச முதலிய திருவுருவங்களை யதிஷ்டித்த ஸதாவநாயனார்; நிவர்த்தி - பிரதிஷ்டை - வித்தை - சாந்தி - சாந்தியத்தை முதலிய அபரவிந்து கலைகளானும், இந்திகை - தீபிகை - ரோசிகை - மோசிகை - ஊர்த்துவகாமிநி யென்னும் அபரநாத கலைகளானும், சூக்குமை - அதிசூக்குமை - மிருதை - அமிருதை - வியாபிநி யென்னும் பரவிந்து கலைகளானும், வியாபிநி - வியோமரூபை - அநந்தை - அநாதை - அநாசிருதை யென்னும் பரநாத கலாபேதத்தாலும், இருபத்தைந்து திருமுகத்துடன் கூடிப் பரசிவாபேக்ஷையுற்ற திருவுருவமே மஹாஸதாஸிவம்.

இச் சதாசிவம் பரசிவ மிரண்டும் தர்மாதர்மி ஸ்வரூபமாதலால், ஸதாஸிவம் பரசிவமூர்த்தியாகவும், பரசிவம் ஸதாஸிவ அந்தர்யாமியாகவுஞ் சிவாகமங்கள் கூறும். அச்சதாஸிவ பரசிவமிரண்டுஞ் சேர்ந்தது பாவாகார மென்பர்.

இன்னு மிவற்றின் விரிவெல்லா மெழுதப்புகின், சாஸ்திர சங்கேதமாதலின், அச்சாஸ்திரமுதிர்ச்சி யுடையோர்க்கன்றி ஏனையோர்க்குப் பயனுண்டாகாதது கருதி இவ்வகை நிறுத்தினன். இதன் வித்தாரம் காமிகாதி சிவாகமப் பெருங்கடலுட் காண்க.

மேற்கூறிய இலக்கணமேயன்றி, இப்பெருமான் கணக்கிட்டுரைத்தற் கேலாத கரம் சிர முதலிய திருவுறுப்புக்களோடு கலந்த திருமேனியை யுடையராகவு மிருப்பர் எனவுங் கொள்க.

### திருவிசைப்பா.

"*எண்ணில்பல் கோடி சேவடிமுடிக ளெண்ணில்பல் கோடி திண் டோள்க, ளெண்ணில்பல் கோடி திருவுரு நாம மேர்கொண்முக்கண்முக மியல்பு, மெண்ணில்பல் கோடி யெல்லைக்கப் பாலாய் நின்றைஞ்னூற் றந்தண ரேத்து, மெண்ணில்பல் கோடி குணத்தரேர்வீழி யிவர் நம்மை யாளுடையாரே.*"

**மஹாஸதாஶிவாய நம:**

---

## உமாமஹேச மூர்த்தி



ஆறாவது

# உமாமஹேச மூர்த்தி.

உலக மாதாவாகிய உமாதேவியார் இறைவன் திருக்குறிப்பின் வண்ணம் பஞ்சகிருத்திய மியற்றி அக்கிரியிலுஷ்ணமும் நீரில் தட்பமும் மலரில் மணமும் மணியிலொளியும் போல அபிந்நாபாவமாயிருப்பாள். அக்கருணையுருவாகிய சத்தியே பஞ்சகிருத்திய நிமித்தமாகக் கிருத்திய பேதத்தால் ஐவகைப்படும். அவை முறையே பராசத்தி - ஆதிசத்தி - இச்சாசத்தி - ஞானசத்தி - கிரியாசத்தி என்பனவாம். அவற்றுட் பராசத்தி பரமசிவத்தி லாயிரத்தொரு கூறு கொண்டது. ஆதிசத்தி பராசத்தியிலாயிரத்தொருகூறு கொண்டது. இச்சாசத்தி ஆதிசத்தியி லாயிரத்தொரு கூறுகொண்டது. ஞானசத்தி இச்சாசத்தியிலாயிரத்தொரு கூறுகொண்டது. கிரியா சத்தி ஞானசத்தியி லாயிரத்தொரு கூறுகொண்டது. இவற்றுள் ஆதிசத்தி ஆத்மாக்களுக்கு விஷய சுகத்தைப் பொருத்தும். இச்சாசத்தி சிருஷ்டியைச்செய்யும். ஞானசத்தி சர்வான்மாக்களுடைய கன்மங்களையும், அந்தக் கன்மங்களுக் கீடான தநு கரண புவந போகங்களையும், உபாதாநத்திரயங்களினின்று முண்டாக்கும்.

**வாதுளாகமம்.**

"*தச்சிவேதுபராஶக்திஸ் ஸஹஸ்ராம்ஶாதஜாயத*
*தச்சக்தேஸ்துஸ்ஹஸ்ராம்ஶா தாதிஶக்திஸமுத்பவ:*
*அஸ்யாம்ஶ்ஶக்தேஸ்ஸஹ்ராம்ஶா திச்சாஶக்திஸமுத்பவ:*
*தச்சக்தேஸ்துஸஹஸ்ராம்ஶாத் ஜ்ஞாநஶக்திஸமுத்பவ:*
*அஸ்யாஶ்ஶக்தேஸ்ஸஹஸ்ராம்ஶாத் க்ரியாஶக்திஸமுத்பவ:*
*ஏதாவைஶக்தய:பஞ்ச நிஷ்களத்வேநகீர்த்திதா:*
*ஶிவஸ்ருஷ்டிரியம்ப்ரோக்தே*" இதி.

இவ்வகையாகத் தோன்றிய ஐவகைச்சாத்திகளில் பின் வரும் பராசத்தியானது பக்குவமலராகிய ஆன்மாக்களைக் கருணையால் அநுக்கிரகிக்கும். ஆதிசத்தியானது ஆணவமலம் பக்குவமாகும்படி செலுத்தும். ஞாநசத்தி சத்தர்க்கு ஞானவொளியாகிச் சர்மசக்ஷுராதி யக்ராஹியமான தேஜோரூபமாம். இப் பஞ்சசத்திகளின் தசாம்சபேதத் தால் சகளநிஷ்களமாகிய ஸதாஶிவரூபமாம். இக் கருத்துப்பற்றியே "சத்திதான் சிவத்தையீன்றும்" என அருணந்தி சிவாசாரியர் திருவாய் மலர்ந்தனர். "கறைக்கண்டனுக்கு மூத்தவளே" என்றதும் இப்பெற்றி நோக்கியே யென்க. தசாம்சம் என்றதாற் பத்திலொன்று அகளமாகிய சாதாக்கியமாம்.

**வாதுளாகமம்.**

"*பராஶக்தேர்தஶாம்ஶேக ஶிவஸாதாக்யஸம்பவ:*
*பராஶக்த்யுத்பவத்வாச்ச ஶுத்தத்வாச்சிவஉச்யதே.*"

**வாதுளாகமம்.**

"*கர்மேஶஸ்யஸஹஸ்ராம்ஸ்ஹாந் மஹேஶஸ்யஸமுத்பவ:*
*மஹேஶம்ஸகளம்வித்யாத் ஸ்ருஷ்டிஸ்திதிலயாத்மக:*
*பஞ்சவிம்ஶத்பேதேந தந்மூர்த்தி:பஞ்சவிம்ஶதி:*
*ஶுத்தேத்வநிஶிவ:கர்தரப்ரோக்தோநந்தோஸதேப்ரபுரிதி*'

**உமாமஹேஶாய நம:**

---

# ஸுகாஸநமூர்த்தி



ஏழாவது

# ஸுகாஸந மூர்த்தி.

ஸ்ரீ கயிலாயகிரியாகிய வெள்ளிமலையி னுச்சியிற் கோடி சூரியோ தயமானாற்போன் றொளி வீசும் நவரத்ந மயமான ஆயிரக்கால் மண்டபத்தில், பக்தா நுக்கிரஹ காரணமாக ஹரி ப்ரஹ்மாதி தேவர்களும், பதினொருகோடி யுருத்திரர்களும், இந்திராதி திக்குப்பாலகர்களும், அஷ்டவசுக்களும் முதலாகிய முப்பத்து மூன்று கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் முநிவர்களும், சநக ராதி மஹருஷிகளும், நவசித்தர்களும், கருட காந்தர்வ சித்த வித்தியாதர யக்ஷ கிந்நரர் முதலாகிய பதினெண்கணங்களும் ஒவ்வொரு பக்கத்திலுறைந்து ஹரஹர சிவசிவ கங்காதர சங்கர மஹாதேவாவென்று துதித்து நமஸ்கரிக்கவும், வேதங்கள் கோஷிக்கவும், தும்புரு நாரதர்பாடவும், அரம்பையர் நடிக்கவும், கூட்டத்தைத் திருநந்திதேவர் பொற்பிரம்பு கொண் டடித்து விலக்கவும், இஷ்ட காமியார்த் தங்களைப்பெற வெண்ணினோர் வரங்கேட்டுக் கையேற்றுநிற்பவும். ஸ்ரீ உமாதேவி யாருடன் இரத்ந சிங்காதனத்தில் இறைவர் திருவோலக்கங்கொண் டெழுந்தருளி யிருந்து, பக்தியே வடிவமாகவுள்ள ப்ருங்கி மஹாருஷி நடிக்கும் நடனத்திற் சிறிது நாழிகை திருக்கண்சாத்திப் பின் அவரவர்கட்குத் தக்கபடி சிரக்கம்பன மந்தஹாஸாதி களான குறிப்புடன் அவரவர்கள் விரும்பின வரங்களை யநுக்கிரகித்துத் தத்தமிடங்க ளிற் செல்ல ஆஞ்ஞாபித்து விடுத்தனர்.

அதன்பின்னர் அருள்வடிவாகிய அன்னையார் அரியாதனத்திருந்து எழுந்து பணிந்து, சிறிது பொழுது கையேற்றுநின்று “எம் பெருமானே! தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய வேத சிவாகமங்களின் உண்மை இத்தகையினதென எளியேன் எளிதிலுணரும்படி திருவுளஞ்செய்து திருவாய்மலர்ந்தருள வேண்டும்" என்றிசைக்க, உம்பர்பெருமான் “உமையே! இரு" எனத் தமது வாமபாகத்திலிருத்தி, ஒரு திருமுகமும் ஆறு திருக்கரங்களு முடையராய் "நங்காய்! நன்றுவினாவினை இஃதுனக்கே யன்றி ஏனைய அண்டங்களிலுமுள்ள அகில சராசரங்கட்கும் பயனளிக்கும் பயனுள்ளது; அதனை யுனக்குக் கூறுவேன்" என்று [ஐவகைப் பாசபந்தத்தின் நிலைமையும், அவை நீங்குமாறும், அவற்றை நீங்கினா ரடையுந் தன்மையும், வேதசிவாகமாதியின் தோற்றமும், அவை அநாதியென்றறிவிப்பதற்கு எடுத்துக்காட்டிய வைகரியாதிய வாக்குகளுக்கு அதிஷ்டாநமாயுள்ள சுத்த மாயாலக்ஷணமும், அம்மாயை பராசத்தியாகிய உன்னிடத்துள்ளதும், நீ என் வாமபாகத்தி லமர்ந்ததும் இவ்விவ் வரலாற்றானென்று] திருவாய்மலர்ந்தருளினர். இத்தகைய வேதசிகாமப்பொருளை உமாதேவியார்கேட்டு நிற்பத் தாம் எல்லா ஆஸநத்தினு முயர்ந்த ஸுகாஸனத்திலிருந்து திருவாய் மலர்ந்தருளிய காரணத்தால், சிவபெருமான் ஸுகாஸா மூர்த்தி யெனப் பெயர்பெற்றனர்.

[ ] இக்குறியினுட் கூறப்பட்டுள்ள விஷயங்கள் ஞானாசிரியர் மூலமாக அறிந்து கொள்ளற்பாலன.

**ஸுகாஸநாய நம:**

எட்டாவது

# உமேச மூர்த்தி.

பண்டொரு பதுமகற்பத்தில், நான் முகன் வழக்கப்படி பல கோடி ஜீவராசிகளையுஞ் சிருட்டி செய்வான் கருதி, ஸநகன் - ஸநந்தனன் - ஸநாதனன் - ஸநற்குமாரன் என்னும் நான்கு புத்திரர்களை யுண்டு செய்து அவர்களைக்கொண்டு உலகவிர்த்திசெய்ய உத்தேசித்திருப்ப, அப்புதல்வர் நால்வரும் நான்முகன் விருப்பத்திற்கிணங்காராய் நல்லுணர்வுற்றுத் தவச்செயலை நாடினர். அதன்பிறகு வேதா யாது வழியிலும் சிருட்டிச்செயல் செவ்வைப்படாமையால், சித்தந்திகைத்து மெத்தவும் பிரமித்துத் தான் முன்பெற்ற தநயரோடு தாமோதரனைச் சார்ந்து தரை மேல் வீழ்ந்து பணிந்து தனக்குச் சிருட்டித்தொழில் கைவராமையைக் கழறி நின்றான். கமலை கேள்வன் "பிரமனே! உன் கருத்து நம் மிருவராலு முற்றுறாது. பன்னகாபரணன்பாற் கூறின்பதப்படும்." என்று பிரமனு முநிவருமுடன்வர, விஷ்ணு வெள்ளி மலையையடைந்து விடையூர்திபால் தமது வருகையை விண்ணப்பிக்கும் படி திருநந்திதேவரை நமஸ்கரித்துக்கூற, அவர் அவ்வாறே ஆண்டவர் சந்நிதியி லடைந்து சாற்ற, சங்கரன் "அவர்களைத் தருக" என்று ஆஜ்ஞாபிக்க, திருநந்திதேவர் அவர்களைச் செல்லும்படி விடைதந்தனர்.

கட்டளைப்படி உட்சென்று கண்ணுதலைத் தரிசித்து யாவரும் நிற்கையில், திருமால் “பெருமானே! பிரமன் சிருட்டிசெய்யவெண்ணிஎத்தனித்தபொழுது அது விருத்தியாகாமையின், அக்குறைதனை யகற்றவேண்டும்" என்று பிரார்த்திக்க, சிவபெருமான் தனது தீவிழியால் திருமால் - திசைமுகன் - புதல்வர் நால்வர் ஆகிய இவரைச் சாம்பராக்கினர். அக்காலத் தவ்விடத்து ஒன்றியாக நின்ற பரமன் தமது வாமபாகத்திலுள்ள திருத்தோளைப் பார்க்க அதனின்றும் அப்பெருமானதுசத்தியே உமாதேவியாகத் திருவுருவுற்றது. அவ்வுமையம்மையாரைத் தமது இடப்புறத்தி லிருத்தி இருவருமாக ஒரு திருவிளையாடல் செய்து-விஷ்ணு - பிரமன் - நான்கு முநிவர்களையும் முன்வந்த வண்ணமே படைத்தனர். அவர்கள் அறுவரும், சிவபெருமானையும் உமையம்மையாரையும் பணிந்து பரவி நிற்கையில், பரமபதி பந்நகசயநனைப் பார்த்து "நாரண! நமதருளாகிய சத்தியோடு கூடிநின்றோம் ஆதலின், பண்டுபோற் பதுமனுக்குப் படைப்புத் தொழில்கை வரும்" என்று திருவாய்மலர்ந்தருள, அவர்கள் அகமகிழ்ச்சியடைந்து அம்மையையும் அப்பரையும் பணிந்து வலம் வந்து விடைபெற்று அப்பாற் போயினர். அதுமுதல் ஆரணன் ஆன்மாக்களை யாக்குமாற்றல் பெற்றனன். அக்காலத்தில் ஆதிநாதன் உமாதேவியாருடன் ஒன்றிநின்றதனால் அகிலமெல்லாம் விருத்தியாகு மியற்கை யுற்றன.

சிவபெருமான் உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் படைத்துக் காத்துத்துடைக்கும் வகையாய் நாநாபேதம்பெற்ற தமது திருவருளாகிய சத்தியே

உமையம்மையாக வாமபாகத்திலிருக்கக்கண்டு வீற்றிருந்தமையின் உமேசமூர்த்தி யென ஒரு திருநாமமுற்றனர்.

**கந்தபுராணம்.**

*"தந்துழி யீசன் றன்னைத் தனயரு மயனு மாலும்*
*வந்தனை செய்து போற்ற மாயவன் வதன நோக்கி*
*நந்தம தருள தாகு நங்கையோ டினிது சேர்ந்தா*
*முந்தையின் வேதாச் செய்கை முற்றிடும் போதி யென்றான்."*

**உமேஶாய நம:**

---

## சோமாஸ்கந்த மூர்த்தி



ஒன்பதாவது

# சோமாஸ்கந்த மூர்த்தி.

சிவபெருமான், பார்ப்பதி சமேதராய்த் திருக்கயிலாயகிரியில் திருவோலக்கங் கொண் டெழுந்தருளியிருக்கையில், தேவர்களெல்லாருங்கூடி அம்மலையை யடைந்து ஆண்டு முதற்பெருங்காவலாக வீற்றிருக்கும் திருந்திதேவரைப் பணிந்து விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தி னுட்சென்று சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துக் கை கட்டி வாய்பொத்திநின்று , "மஹாதேவனே! தேவரீர் உமையம்மை யாரை மணந்தும், எங்களை நெடுநாளாகத் துன்புறுத்தி மஹேந்திரபுரியி லரசுசெய்யும் சூரபன்மனாதிய அசுரரைச் சங்கரிக்கத்தக்க தேவரீரைப்போன்ற ஒரு புத்திரனைப் பெற்று இன்னும் எங்கள் சங்கடத்தை ஒழித்திலீர். விரைவில் இது கை கூடுமாறு அருள் புரியவேண்டும்" என விண்ணப்பித்தனர்.

ஆதிமூர்த்தி அவர்கட்கிரங்கி ஆறு திருமுகங்களுடன் வீற்றிருந்து தமது திருமுகங்கடோறும் விளங்கும் அக்கிரிக் கண்களினின்றும் ஆறு நெருப்புப்பொறிகள் பெருஞ்சோதிமயமாய் வெப்பத்துடன் வெளிவரும்படி யருள் செய்ய, அப்பொறிகள் பார்முழுவதும் பரந்திடக் கண்டு, பார்ப்பதியார் பாதத்தணிந்த சிலம்புகள் ஒன்றுட னொன்று மோதும்படி விரைவிற் சென்று அந்தப்புரமடைந்தனர். தேவர்கள் சித்தங்கலங்கி மெத்தவும் திகைத்துச் சிறிது ஓடித் திரும்பி அத்தனை நாடி "ஐயனே! தீயோரை ஜயிக்கத்தக்க சிறுவனை யிரந்த எங்கட்குத் தீப்பொறிகளை யருளிச் செய்தால் எவ்வாறு பிழைப்பேம்" என நடுங்கிக் கூறினர். சிவபெருமான் திருமுக மொன்றுடனிருந்து தீப்பொறிகளைத் தம்பால் வரத்திருவுளஞ் செய்தனர். பொறிக ளாறும் புராரிமுன்னர்ப்புக, அம்பிகாபதி அக்கிரியையும் வாயுவையும் நோக்கி, "இப்பொறிகளை நீங்களிருவரும் தாங்கிக்கொண்டுபோய்க் கங்கையில் விடுங்கள்" என்று கட்டளையிட்டுத் தக்க பலமுந்தந்தனர்.. மாதேவன் திருவாணைப்படி அவர்கள் மாறிமாறி யெடுத்துக்கொண்டுபோய்க் கங்கையில் வைத்தனர். தகுதியா கிய அக்கங்கையும் சரவணத்தில் விடுப்ப, பத்துத்திக்குகளிலும் விண்டு முதலானார் கண்டு காத்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது அச்சரவணப்பொய்கையில் ஆறு திருமுகங்களுடனும் பன்னிரு திருப்புயங்களுடனும் அரனே குமரேசனாகத் தோன்றி யிருக்க, அமரர் தரிசித்து, அக்குழந்தைக்குப் பாலூட்ட அறுவராகிய கார்த்திகை நக்ஷத்திரமாதரையனுப்ப, அறுமுகப்பெருமான் ஆறு சிறுவர்களாகி அவர்கள் பாலுண்டிருந்தனர்.

.

இது நிற்க: அந்தப்புரமடைந்த அம்மையார் முக்கணருடன் சிங்காதனத்துட் கார்ந்தனர். ஈஸ்வரியார் முன்னெழுந்து செல்லுகையில், திருவடிச்சிலம்பினின்று சிதறிய நவரத்தினங்கள் பார்வதியின் சாயை யுற்று, பரமனழைக்கப் பக்கலில் வந்து, கட்டழகு நோக்கிக் கருப்பமடைய, கவுரிகண்டு கடுங்கோபங் கொண்டு, "கருப்பயவாமல் தாங்குமின்" எனச் சபித்தனர். அவ்வநிதையர் கருப்பவாதனையால் வருந்துகையில், உடலில் வியர்வையில் இலக்கம்வீர ருதித்தனர். பின் பொருநாள் பெருமாட்டி விருப்பின்படி அவர்கள் வீரவாகு - வீரகேசரி - வீரமகேந்திரன் -

வீரமகேசன் - வீரபுரந்தரன் - வீரராக்ஷசன் - வீரமார்த்தாண்டன் - வீரராந்தகன்- வீரதீரன் என்னும் ஒன்பது புதல்வரை யுதவினர். ஈசன் இமயவல்லியை நோக்கி "இந்த லக்ஷத்தொன்பதின்மரும் நமது புத்திரர்கள்" என்று, அவர்களை நோக்கி "எனதுமைந்த னேவலைச்செய்திருங்கள்" என்றிசைத்து, அம்மையாருடன் இடப வாகன மேறிச் சரவணப்பொய்கையைச் சார்ந்து "உமையே! உன் குழந்தையைக் கொண்டுவா" என, தேவியார் விடையினின்றிழிந்து விசையுடன் சென்று, ஆறுருமைந்தனை அம்மையெடுக்கையில், குழந்தை ஆறுதிருமுகமும் பன்னிருதிருக்கரமும் ஒரே திருமேனியுமாக, இறைவி யெடுத்து, உண்ணாமுலை யாதலின் தமது திருமுலைப்பாலை வள்ளத்திற் கறந்து திருவமுது செய்வித்து ஈசனைப்பணிவித்தனள். ஸ்கந்தன் என்று அப்பொழுது திருநாமமுற்ற குமரேசனை முன்னவன் மார்பிலணைத்து முத்தங்கொண்டு உமையுடன் இடபவாகனத்திலேற்றி, (கார்த்திகை நக்ஷத்திரமாகிய மாதர்கட்கும், பராசர புதல்வர்க்கும் திருவருள்புரிந்து) ஏனைய தேவர்களை யவரவரிடத்திற்கேக விடைதந்து, எம்பெருமானும் விடையேறி வெள்ளிமலை யடைந்து, தேவியாருக்கும் தமக்கு மிடையே ஸ்கந்தரிருக்க வீற்றிருந்தனர். இதனால் சிவபெருமான் ஸ் + உமா + ஸ்கந்தர் = ஸோமாஸ்கந்த ரெனப் பெயருற்றனர்.

லக்ஷம்வீரரும், நவவீரரும் ஸ்கந்தமூர்த்தியைப் பணிந்தனர். பிறகு குமாரக் கடவுள் ஸ்கந்தகிரியில் இலக்ஷத்தொன்பது வீரருடன் வீற்றிருந்து பல திருவிளையாடல்கள் செய்து, ஏகாதசருத்திரர்களைப் பதினொருபடையாகவும் பராசத்தியை வேற்படையாகவுங் கொண்டு தென்றிசையடைந்து சூரபன்மனாதி யரைத் தொலைத்து, தேவர் சிறையை விடுத்து, இச்சை கிரியைகளாகிய தெய்வயானையம் மையார் வள்ளிநாயகியார் இவர்களை மணந் தெழுந்தருளி விருந்தனர்.

**கந்தபுராணம்.**

எந்தை சத்திக ளுயிரெலா மொடுங்குறு மெல்லை
முந்து போலவொன் றாகியே கூடிய முறைபோ
லந்த மில்லதோர் மூவிரு வடிவுமொன் றாகிக்
கந்த னென்று பேர் பெற்றனன் கவுரிதன் குமரன்.

ஏல வார்குழ லிறைவிக்கும் மெம்பிரான் றனக்கும்
பால னாகிய குமரவே ணடுவுறும் பான்மை
ஞால மேலுறு மிரவொடு பகலுக்கு நடுவாய்
மாலை யானதொன் றழிவின்றி வைகுமா றொக்கும்.

**ஸோமாஸ்கந்தமூர்த்தயே நம:**

## சந்திரசேகர மூர்த்தி



பத்தாவது

# சந்திரசேகர மூர்த்தி.

பிரமதேவனது * மாநதபுத்திரர்களி லொருவனாகிய தக்ஷப் பிரசாபதி தான் பெற்ற அசுவினி முதலிய நட்சத்திரங்களாகிய இருபத்தேழு பெண்களையும், அத்திரிமுநிவர். மனைவியாகிய அநயையீன்ற சந்திரன் அழகிற்சிறந்தோனா யிருத்தல், கருதி மணம் புணர்த்தி அவனை நோக்கி "நீ இப்பெண்கள் யாவரிடத்தும் பாரபக்ஷமின்றிச் சமானமாக அன்பு கொண்டிருக்க வேண்டும்" என்று கூறிப் புதல்வியரைச் சந்திரனோடனுப்பினன்.

* மாநதபுத்திரர் பதின்மர். அவர்கள் ஸப்தருஷிகள் நாரதன் கர்த்தமன் தக்ஷன் எனப்படுவர். இவருள் தக்ஷன் அங்குஷ்டத்தினின்றும் ஜனித்தவன்.

சந்திரன் மாமனது மதிப்படி சிறிதுகாலம் யாவரிடத்தும் அன்புடையனாயிருந்து, பின்னர்க் கார்த்திகை உரோகணி என்னும் மாதரிருவருமே தனது மனைவியருட் பேரழகுடையராயிருத்தலால், அவ்விரண்டு மனைவியரிடத்திலேயே அதிக அன்புபாராட்டி ஏனையோரை முகநோக்கானாயினன். அக்கன்னியர் நெடுநாட் பொறுத்துப் பார்த்துச் சிறிதும் மனஞ்சகியாது தமது குறைகளைத் தந்தைபாற் சொல்ல, தந்தையாகிய தக்ஷன், சந்திரனையழைத்துப் பலவகையாகப் புத்தி மதிகளைக்கூறி விடுப்பவும், சந்திரன் அவற்றைத் "தையலார் மயலிற்பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ" என்னும் ஆன்றோர் வாசகத்தின்படி, தக்கன் சொல்லியவற்றைச் சிறிதுஞ் சிந்தியாமல் நடப்பது கண்ட அப்பேதையர் மீண்டுத் தந்தைபாற்சென்று "எந்தையே! எமது நாதன் எம்மை முன்போலவே முகநோக்காதிருக்.கின்றனன்" எனக் குறைகூறக் கேட்ட தக்ஷன் வெகுண்டு "நாளுக் கொரு கலையாய் குறைந்து இறக்கக்கடவன்" என்று சாபமிட, சந்திரன் அவ்வாறே தக்ஷன் சாபத்தால் நாளுக்கோர் கலையாகப் பதினைந்து தினங்களில் தன் கலைகளெல்லாமழிந்து, ஒருகலையோடு மனம்வருந்தி, தனக்கு நேர்ந்த துன்பத்தை இந்திரனிடஞ்சொல்லி யாசிக்க, இந்திரன் "நீபிரமதேவனிடஞ் சொல்லிக்கொண்டால், பிரமதேவன் ஒருகால் தன் புதல்வனாகிய தக்ஷனிடஞ்சொல்லி, உனக்குச் சாபவிமோசனஞ் செய்தல் கூடும்' என, அவ்வாறே பிரமதேவனை வேண்டிக்கொள்ள, பதுமன் "சந்திர! தக்கனுந் தந்தையென் றென் சொல்லைக் கேளான். யானு மகனென் றவனிடஞ் சொல்லேன் . நீ கைலையையடைந்து கருணாமூர்த்தியாகிய கண்ணுத லைப் பிரார்த்திக்கின் அவர் உனது குறைதீர்ப்பர்" என அது மேற்கொண்டு, சந்திரன் திருக்கைலாயகிரியை யடைத்து திருநந்தி தேவர் அநுமதியால் மஹாஸந்நிதாநத் துட்சென்று அருட்பெருங் கடலாகிய எமது சிவபெருமானைத்தரிசித்து அஷ்டாங்க பஞ்சாங்கமாக நமஸ்கரித்துத் தனக்கு நேர்ந்தசாபத்தை விண்ணப்பஞ்செய்து யாசிக்க, பார்ப்பதிபாகராகிய பரமன் எஞ்சியுள்ள ஒருகலையைத் தமது சடைமுடியில் தரித்து "உனது கலைகளிலொன்று என் முடிமீதிருத்தலால் நாளுக்கொரு கலையாக வளர்ந்தும், தக்ஷன் சாபத்தால் நாளுக்கொரு கலையாகக் குறைந்தும் இருக்கக்கடவாய். எப்போதும் ஒருகலையுன்னை விட்டு நீங்காது" என

அநுக்கிரகித்தனர். இது காரணத்தால் எம்பெருமானுக்குச் சந்திரசேகரர் என்பதோர் திருநாமமெய்தியது.

கந்தபுராணம்.

*தீர்ந்தன வன்றியே திங்க டன்னிடை*
*யார்ந்திடு கலையினை யங்கை பிற்கொளா*
*வார்ந்திடு சடைமிசை வயங்கச் சேர்த்தினான்*
*சார்ந்தில தவ்வழித் தக்கன் சாபமே.*

*எந்தை யவ்வழி மதியினை நோக்கிநீ யாதுஞ்*
*சிந்தை செய்திடே லெம்முடிச் சேர்த்திய சிறப்பா*
*'லந்த மில்லையிக் கலையிவ ணிருந்திடு மதனால்*
*வந்து தோன்றுநின் கலையெலா நாடொறு மாபால்.*

*நின்ன தொல்கலை யைந்து முப் பகலிடை நிரம்பிப்*
*பின்ன ரவ்வழி தேய்ந்துவந் தோர்கலை பிரியா*
*தின்ன பான்மையே நிகழுமெக் காலமு மென்றான்*
*முன்னை யாவிதோ றிருந்தெலா மியற்றிய முதல்வன்.*

**சந்திரசேகரமூர்த்தயே நம:**

### பதினொன்றாவது

# ருஷபாரூட மூர்த்தி.

ஆகாயவாசிகளாகிய இமையவர் , திரிபுரத்தவர்களால் உலகந் துன்புறுகின்ற தாதலின், அவர்களை யடக்கி யருள வேண்டுமெனச் சிவபெருமானிடம் விண்ணப் பஞ்செய்ய, சிவபெருமான் "அவர்கள் மேல் அமர்க்கோலங்கொண் டெழும்படி யுத்தத்திற்குரிய கருவிகளை சித்தஞ்செய்க" என்று கட்டளையிட்டருள, அமரர் அவ்வாறே ஆயத்தஞ்செய்து அரவாபரணனுக்குத் திருநந்திதேவர் மூலமாக அறிவிக்க , ஐயர் அம்மையாருடன் தருமதேவதையாகிய தாவள்யமான இடபவாக னத்தின்பேரி லாரோகணித்து, திருக்கயிலாய கிரியினின் றிறங்குகையில், திருமால், முதலாகிய தேவர்கள் கண்களாரத் தரிசித்துச் சிரசின்மேற் கைகளைக் குவித்து இறைஞ்சிப் பலவகையாகத்துதித்து மகிழ்ந்தனர். அம்பிகைபாகன் அமரராலாக்கிய இரதத்தைக்கண்டு இடபத்தினின்றும் இமயவல்லியுடனிழிந்து, மேருமலையாகிய வில்லுடன் சென்று தேரிலேறி மிதித்தவுடன்அதனச்சுமுறிந்தது.

அதுகண்ட அச்சுதன் அரனிடத்துள்ள அன்பின் மேலீட்டினால் அப்பொழுதே ஒரு வெள்ளியவிடை யுருவேற்றுத் தாங்கினன். சங்கரனைத் தாங்கி நின்ற சார்ங்கன் "என்னையன்றி எம்பெருமானைப் பரிப்போர் யாவர்? என் தவமே தவம்! இறைவன் எனக்களித்த வரமே வரம் ! ” என இவைபோற்பல நினைந்து இறுமாந்த னன். பத்திவலையிற் படுவோனாகிய பரமபதி, மாயவன் மனத்திலுற்ற மம்தையை யறீத்து ஓர் திருவிளையாடல் புரிந்தனன். அதனால் அச்சுதன் ஐயனைத் தாங்க மாட்டாமல் இருசெவியிலும் வாய் வழியிலும் நாசியிலும் உதிரவெள்ளமொழுக, இருவிழிகளும் பிதுங்க, கால்களை மடித்துக்கொண்டு நிலத்தின் பேரில் விழுந்தனர். அப்பொழுது தேவர்கள் பயந்து அத்தாசரணம் - அரனே சரணம், முத்தாசரணம் - முதல்வாசரணம், சித்தா சரணம் - சிவனே சரணம், நித்தாசரணம் - நிமலா சரணம்” எனப் பலவாறு துதித்தனர். கருணாநிதி கமலைகேள்வன் விஷயத்தில் மனங்கனிந்து பூமியிலிறங்கினர். ஈசன் இறங்கியபின்னர்க் கேசவன் வலிபெற்றோனாய் நிற்க, பிரிஹ்மேந்திராதி தேவர்கள் திகைத்தனர். சிவபிரான் புன்சிரிப்புக் கொண்டு திருமாலைநோக்கிச் சீதரா! யாது வேண்டினை. விரும்பியவற்றைக் கேட்பின், இப்பொழுதே தருவேம்' என, மாதவன் மனமகிழ்ச்சியுற்று 'தேவநாயகா! தேவரீரது வாமபாகத்தினின்றும் பிரியாது ஒருசத்தியிருக்கவும், அடியேன் விரும்பியபடி என்னையும் ஒரு சத்தியாகக் கொண்டீர். தொண்டருள்ளத்தில் அவாவியவற்றை எண்ணியாங்கீயும் அருட்கற்பகமாகிய தேவரீருக்குத் தருமவிடை யொன்றிருப்பி னும், மால்விடையென யானுந் தேவரீரைத்தாங்க வலிபெறவேண்டும்" என்று வருந்தி யாசித்து நிற்க, அருட்பெருங்கடல் தமது அடியவருட்சிறந்த திருமாலுக்கு அத்தகைய பெரும் பேறெய்தத்தக்க அரியவரத்தையும் வலியையும் அநுக்கிரகித்து அரியாகிய இடபத்தை வாகனமாகக் கொண்டு அதன்பேரி லாரோகணித்தனர். [எஞ்சியசரிதையைத் திரிபுரதகநத்திற் கண்டுகொள்க.]

மாலாகிய இடபத்தை வாகனமாகக் கொண்டு அதன்பேரில் ஆரோகணித்தலிற் சிவபிரானுக்கு ருஷபாரூடமூர்த்தி யென்பதோர் திருநாமம் விளங்குகின்றது.

**ஈஶாநஸம்ஹிதை.**

"*சதுஷ்பாத்வ்ருஷருபீத்வம் ப்ரஹ்மண: புத்ரதாங்கத:*
*தர்மஸ்ஸர்வார்சிதஶ்ஶஸ்வத் வாஹநோமெபவாநிஶ:*
*த்வஜேபிமமகோவிந்த தேநமாம்வ்ருஷபத்வஜம்*
*அஹம்வ்ருஷபவாஹஞ்ச ஸூரயோவேததத்பரா:*"

**உபதேசகாண்டம்.**

*மூரி வெள்ளிமி லேறுவிட் டிழிந்தனன் முதல்வன்*
*மேரு மால்வரை யொருதனி வில்லொடு மேவித்*
*தேரி னோர்தனி யெடுத்துற மிதித்தலும் தெறித்துப்*
*பாரு மச்சுமற் றிழிந்த்து தேர்த்தடம் பரப்பு.*
*மடுத்தெ டுத்தனன் வெள்விடை யுருக்கொடு மாய*
*னெடுத்த வப்பரம் பொறுக்கலா னிருதொளை நாசி*
*விடுத்தெ ழுந்தன குருதிநீர் விழித்துணை பிதுங்கிப்*
*படுத்த வாய்வழி யுமிழ்ந்தனன் குருதிநீர்ப் பறவை.*
*எந்தை யேயுனக் கபயமற் றெவ்வுயிர்த் தொகைக்குந்*
*தந்தை யேயுனக் கபயமெத் தலைவர்க்கு முதலா*
*முந்தை யேயுனக் கபயமென் றிரந்தனர் மொழிந்தா*
*ரிந்து சேகரன் மாயவற் குறித்தன னிரங்கி.*

*சத்தி யோர்புடை யிருக்கவும் யானுமோர் சத்தி*
*யொத்தி டப்புரிந் தருளினை யாதுபோ லுடையாய்*
*வித்த கத்தினி யேறுளை யாயினும் வினையே*
*னத்த னித்திற லேறெனத் தாங்குதற் கருள்வாய்.*

**ருஷபாரூடமூர்த்தயே நம:**

## ருஷபாந்திக மூர்த்தி.



பன்னிரண்டாவது

# ருஷபாந்திக மூர்த்தி.

சிவாக்கினைப்படி, இரண்டாயிரஞ் சதுர்யுகங்கொண்ட காலம் பிரமனுக்கொரு நாள்; அத்தகைய நாட்களாலாகிய நூறுவருடம் பிரமனுக்குரிய ஆயுட்காலம். அதுவே திருமாலுக்கொருநாள். அத்தன்மையாகவே திருமாலுக்கு வயது. நூறு கழியின் உலகிலுள்ள சர்வான்மாக்களுமொழியும். அக்காலத்திற் சமஸ்தலோகங்க ளும் மகாமயானமயமாகும். அச்சமயத்தில் எஞ்சி நின்ற பரம்பொருளாகிய சிவபெருமான் தமது சத்தியாகிய உமையும்மை தரிசிக்கும்படி திருநடம் புரிந்தருள் வர். இத்தன்மையான நேயுப்பிரளயத்தில் எல்லாத்தருமங்கட்கும் அதிதேவதையாக விளங்கும் தருமதேவதை தானுமிறக்கவருமே யென்செய்வேனென்றெண்ணி, சிவபிரானைச் சரணடைந்தால் மரணத் தீமை நீங்கி யென்று முயிர்கொண்டிருப்பே னெனத்தெளிந்து ஓரிடபவடிவேற்று எம்பெருமானையடைந்து "ஈசனே! யானிறவா மையும் தேவரீருக்கு வாகனமாந்தன்மையும் சமானமில்லாவலியுடைமையும் பெற்றுயிர்வாழ அடியேனுக்கருள வேண்டும்" எனப்பிரார்த்திக்க: அருட்கடலாகிய அம்பிகாபதி "அஞ்சாதே" என்றபயமளித்து அதன் சிரமேற் றமது அருமைத் திருக்கரமாகிய திதித்தொழிற்குரிய அபயாஸ்தத்தைச் சூட்டிப் பின்வருமாறு திருவாய்மலர்ந்தருளினர்: "தருமதெய்வமே! நீ விரும்பியவாறே யவற்றையடைக: அன்றியும், தருமத்தின் காலநிலை யிஃதென்று கண்டோருணர முற்பட்ட கிருதயுகத்தில் நான்கு கால்களும், இரண்டாவதாகிய திரேதாயுகத்தில் மூன்று கால்களும், மூன்றாவதாகிய துவாபரயுகத்தில் இரண்டுகால்களும், நான்காவதுங் கடைப்பட்டதுமாகிய கலியுகத்தில் ஓர்காலுங்கொண்டூன்றிப் பூமியில் நடந்து காட்டக்கடவாய். யாம் உன்னைவிட்டுப்பிரியேம்; நீயே யெமக்கு வாகனமாயிருத்தி" என்றநுக்கிரகித்து அதன் உயிர்போலத் தருமதேவதையைத் தனிவிடாமற் சிவபெரு மான் பரிபக்குவமுற்ற பரமபத்தர்கட் கநுக்கிரகஞ் செய்யுந்தோறும் அதனையே வாகனமாக ஆரோகணித்தெழுந்தருளுவர். ஊழிக் காலத்தில் அறவுருவாகிய விடையை அணுகி ஆதரித்தமையால் ருஷபாந்திகமூர்த்தியெனச் சிவபெருமானுக் கோர் திருநாமமெய்தியது.

**உபதேசகாண்டம்.**

*ஆறு லாஞ்சடை யண்ணலைச் சேர்வனே*
*லீறி லாதென்று முய்ந் திடு வேனெனாத்*
*தேறி யேயறத் தெய்வதஞ் செங்கணா*
*னேறு தாயொ ரெழிலுருக் கொண்டதே.*

*ஏற்றின் மேனிகொண் டீசன் முன் னேகியே*
*போற்றி யானின்று பொன்றிடுந் தன்மையை*

/

*மாற்றி யாறறல் வழங்கிநிற் கூர் தியாம்*
*பேற்றை யெற்குப் பிரானரு ளென்னவே.*

*இறத்தலை பின்மையும் யான மாய்த்தனைப்*
*பொறுத்திடுந் தன்மையும் பொருவில் வன்மையு*
*முறைத்திடு மன்பும்வா லுணர்வு நல்கியே*
*யறத்தனிக் கடவுளுக் கண்ணல் கூறுவான்.*

*முதலய விடைகடை மொழிய நின்றிடுஞ்*
*சதுர்வித யுகந்தனிற் றருமத் தின்றிற*
*மிதுவென நான்கு மூன் றிரண்டொன் றாகிய*
*பதமுறை யூன்றியே படியிற் சேறிமேல்.*

**ருஷபாந்திகமூர்த்தயே நம:**

---

பதின்மூன்றாவது

# புஜங்கலளித மூர்த்தி.

காசிபன் மனைவியர் பதின்மூவரில் கற்பின் மேம்பட்ட கத்துரு விநதை யென்னுங் காரிகையரிருவர் தாம் அழகிற் சிறந்தவரென ஒருவரோடொருவர் வாதிட்டுத் தமது நாதனை வினாவி, அவர் தீர்மானித்தவண்ணந் தோற்றவள் சிறையிருப்பதாக ஏற்படுத்திக்கொண்டு, முநிவரை யணுகிக்கேட்க, கத்துரு சிறந்தவ ளென, மற்றவள் சிறையிலகப்பட்டனள்: சிறையிலிருக்கும் விநதை தன்மாற்றவளை நோக்கித் தன்னை விடும்படி வேண்ட, “தேவலோகத்துள்ள அமிர்தமளித்தாற் சிறை நீக்குவேன்' என, விநதை தன் குமாரனாகிய கருடனுக்கறிவிக்க, கருடன் தேவலோகஞ் சேர்ந்து அமுதகலசத்தைக் காத்திருந்த அந்தரத்தவரைச் சயித்துக் கையிற் கொண்டு வருகையில் திருமால் எதிர்த்துச் செருச்செய்து செயிக்க மாட்டாமல் "பக்ஷிராசனே! உன் பராக்கிரமத்தை மெச்சினேன்; வேண்டிய ஒரு வரத்தைக்கேள்" என, கருடன் சிரித்து "கமலாக்ஷ! உன் வலிமைக்குக் களித்தேன். நீ விரும்பிய இரண்டுவரங்களைக்கேள்" என, விண்டு இதுதான் சமயமென் றுட்கொண்டு "சர்ப்பங்கட்.கமுதூட்டாதிருக்க வொருவரமும், நீ எனக்கு வாகனமாகித் தாங்க மற்றொருவரமும் வேண்டும்" என கருடன் அவ்வாறே யியைந்து அமுதகலசத்தைத் தாயினிடஞ் சேர்த்து, சர்ப்பங்கட் கமுதூட்டாவகையாகக் கூறிச் சிறைவிடுவித்து, சிவலிங்க பூஜை செய்யப் பெருமான்களித்துப் பிரசன்னமாய்ப் பல வரமளித்து "விட்டுணு நமதடியாரிற் சிறந்தோன். நீ யவனுக்கு வாகனமாதல் பற்றிக் களித்தோம்." என்று திருவாய்மலர்ந்தருளக் கருடன் மனம்பூரித்து மாலுக்கு வாகனமாயினன்.

**காசிகாண்டம்.**

*"கலுழ னாற்றிய காமரு தவத்தினை வியந்து*
*நிலவு தூங்கிளம் பிறையணி நீள்சடைக் கடவு*
*ளலகி னல்வர மளித்து நம் மடியரிற் சிறந்தோ*
*னுலகு பூத்தசெந் தாமரை யுந்தியங் கடவுள்.*

*ஆங்க வற்குநீ யூர்தியா யடைதுமென் றறைந்த*
*தீங்கி னல்வர முவந்தனஞ் செல்லெனக் கலுழன்*
*வீங்கி னான்றடம் புயமுளங் குளிர்ப்புற விழிநீர்*
*தூங்க மெய்ம்மயிர் சிலிர்ப்புறத் தொழுதிவை சொல்வான்."*

கருடன் சிவார்ச்சனை செய்து பெற்ற வல்லமையால், தன் மாற்றாந்தாயாகிய கத்துருவென்பாள் பெற்ற கட்செவிகளைக் கடுங் கோபத்துடன் கொன்று துன்புறுத்தி வருதல்கண்டு, நாகங்கள் “நாமும் சிவபிரானைப் பூசித்து வைநதேயனால் மாயாத வரமுறல் வேண்டும்" என்றாலோசித்துக்கொண்டு ஓர் சிவலிங்கக்குறியைத் தாபித்து, விதிமுறையே சிவார்ச்சனை செய்து நேர்நின்று "ஆதி மத்தியாந்தரகி

தராகிய அருட்பெருங்கடலே! தேவரீரது பூஜா பலத்தாலும், திருமாலுக்கு வாகனமா யிருத்தலாலும், மாற்றாந்தாய் மைந்தனாதலாலும், கருடன் எங்களைக் கொல்கின்றான். அவனா லிறவாவண்ணம் அருள்புரிய வேண்டும்" என்று பிரார்த்தித்தன. சிவபிரான் அச்சர்ப்பங்கட்குத் திருவுளமிரங்கித் தமதருமைத் திருமேனியி லாபரணமாக அவைகளை அழகுறும்படி அணிந்துகொண்டனர். இது நிற்க.

பின்னொரு காலத்தில் விஷ்ணு சிவதரிசனார்த்தமாக வந்த பொழுது அச்சர்ப்பங்கள் அச்சமின்றிக் கருடனை நோக்கி "ஏன் கருடா சுகமா" என வினாவின. இதனை உலகத்தா ரோர் வழக்கச் சொல்லாகக் கூறுகின்றனர். அஃதெற்றுக்கெனில் சிறியோரைச் சேர்தலினும் பெரியோரைக் கூடுதல் சிறந்ததென் றுணர்த்தற்கென வறிக.

புஜங்கம் - பாம்பு, வளிதம் - அழகு செய்தல். இக்காரணத்தால் இறைவர் புஜங்கலளிதமூர்த்தி எனப் பெயரெய்தினர்.

**புஜங்கலளிதமூர்த்தயே நம:**

## புஜங்கத்ராஸ மூர்த்தி.



பதினான்காவது

# புஜங்கத்ராஸ மூர்த்தி.

தாருவநத்து முநிவர்கள் தவமே சிறந்ததென்றும், அவர் பன்னியர் கற்பே மிகுந்ததென்றுங் கருதிக் கடவுளர் பெருமானாகிய கண்ணுதலைப் பரம்பொருளென மதியாது மமதை கொண்டு வாழ்ந்திருக்கு நாளில், சிவபெருமான் திகம்பரமாய்ப் பிக்ஷாடனத் திருக்கோலங் கொண்டும், திருமால் மோகினி வடிவேற்றுஞ் சென்று அம்முநிபத்தினிகள் கற்பையும் அம்முனிவர் மழித்தனர். அக்காலத்தில் அரிவையர் முயக்கி லவாவுற்றுத் தமதிருக்கை நாடிய அவ்வந்தணர் தத்தம் வீதியிற் கற்பழிந் துழலுங் காரிகையரைப்பார்த்துத் தமது ஞானத்தால் 'நம்தவத்தையழித்து நமது மனைவியர் கற்பை யொழித்தவன் சிவனே; அவனேவலால் ஆயிழையா யடைந்தவன் அச்சுதனே" என்றறிந்து விஷவிருக்ஷங்களைச் சமிதையாக்கி வேம்பு முதலியவற்றின் நெய்யினால் அபிசார வேள்வி செய்து அதினின்றெழுந்த பல பொருள்களையும் பரமபதியின்பேரிற் பிரயோகிக்க, சிவபிரான் அவற்றை எண்ணிய வகையெலாம் உடை, பாதச்சிலம்பு, ஆயுதம், சிரோமாலை, சேனை முதலியவாகச் செய்து கொண்டனர்.

தாம் பிரயோகித்தவை பிரயோசனப்படாதது கண்ட தாருவநமுநிவர் யாகாக்கிநியினின்றெழுந்த சர்ப்பங்களையுஞ் சங்கரன் மேல்விட, அவை அச்சமின்றி அவனி யழியும் வண்ணம் அதிவேகமாகத் தமது காளி - காளாஸ்திரி - யமன் யமதூதன் என்னும் நான்கு நச்சுப்பற்களிலுள்ள தொளைவழி விஷஞ்சிந்திக்கொண்டு நாதனை நண்ண, அண்ணல் ஆதிநாளையில் விண்டுவின் வாகனமாகிய கருடனுக் கஞ்சித் தம்பால் சரண்புகுந்த சர்ப்பங்களைத் தமதுடலிற்றாங்கி யிருந்ததுடன் இப்பாம்புகளையும் ஏற்று “உமது குலத்தாருடன் ஒன்றுகூடி வாழுங்கள்” என்று திருவுள்ளஞ்செய்து அப்பாம்புகஞ்சும்படி திருக்கரத்தாற்பற்றிச் சிறிது பொழுது நடித்து, திருக்கரம் திருவடி அரை முதலியவிடங்களிற் கங்கணம் - காலணி - அரை நாண் - கடிசூத்திரமுதலியவாகப் பிணித்தருளினர்.

[இச்சரிதத்தின் ஏனைய விஷயங்கள் பிக்ஷாடநம் சார்த்தூலஹத மிவற்றில் விளக்கப்பட்டுள்ளன. ஆங்குக் கண்டுகொள்க.]

தாருவநத்து முநிவர் செலுத்திய சர்ப்பங்களை அச்சுறுத்தினமையால், சிவபெருமான் புஜங்கத்ராஸமூர்த்தியெனத் திருநாமமெய்தினர்.

**கந்தபுராணம்.**

"*ஏந்திய பின்னர் வேள்வி யெரியதற் கிடையே யெண்ணில்*
*பாந்தளங் கொழுந்து தீயோர் பணியினாற் சீற்றங் கொண்டு*
*போந்தன வவற்றை மாயோன் புள்ளினுக் கஞ்சித் தன்பால்*
*சேர்ந்ததோர் பணிகளோடு செவ்விதிற் புனைந்தா னெங்கோன்.*"

**புஜங்கத்ராஸமூர்த்தயே நம:**

பதினைந்தாவது

# ஸந்த்யாந்ருத்த மூர்த்தி.

தேவர்கள் சிவாக்கினை யின்றித் திருப்பாற்கடலை மதித்த பொழுது அதில் நாட்டிய மந்தரமலையாகிய மத்திற்குப் பூட்டப்பட்ட தாம்பாகிய வாசுகியென்னும் பாம்பு தன் தலைவால்களைப் பற்றியீர்க்குந் தேவாசுரர் வலிக்காற்றாமல் வாய்வழி நஞ்சுகக்கியது. அவ்விஷம் யாவரையு மெதிர்க்கத் திருமால் அதனை யெதிர்த்து உடல் கருகி உம்பர் குழுவுடன் வெள்ளிமலையை யடைந்து சிவபிரானுக்கு விண்ணப்பஞ் செய்து கொள்ள, அருள்வள்ளல் அதனை அமுது செய்தனர்.

[இதன் வித்தாரம் விஷாபஹரணத்திற் காண்க.]

**ஆகமத்திரட்டு**

*"பொங்குங்கள் காதரன் காளமயின் றேயெரன்றும்*
*புகலாம லிருந்தனனோர் கணப்பொழுது புலவோர்*
*அங்கவனை யிடைவிடா தருச்சனைமுன் புரிந்தா*
*ரத்திதியே காதசியா மடுத்ததிதியதனிற்*
*புங்கவர்பா ரணம்புசித்தே பூர்த்தியுற்ற ரதன்மேற்*
*பொருந்துதிதி தனிலிமவான் பொற்கொடியைவைத்தே*
*சங்கான் கு லஞ்சுழற்றி நடித்தனனோர் யாமஞ்*
*சதுர்மறை லது பிரதோடம்மெனவே சாற்றும்."*

என்னும் பிரமாணத்தின்படியே,

சிவபெருமான் தேவர் துயர் தொலையும்படி விஷபானஞ்செய்த காலத்தில், அதனால் தாமொருதீமையு மடைந்தாரில்லையாயினும், ஓர் திருவிளையாடல் செயக்கருதி ஓர் க்ஷணப்பொழுது ஒன்றுங் கூறாராய் உமாதேவியார் தம்மை யுபசரிக்கும்படி மௌநமாய்ச் சயனித்திருந்தனர். அதுகண்ட அமரர் அரனை யருச்சித்தனர். அத்திதியை ஆன்றோர் ஏகாதசியென்பர். அற்றைய நாள் முற்றும் உணவில்லாது அன்றிரவெல்லாம் நித்திரையினின்று நீங்கி மறுநாளாகிய துவாதசி யிற் பண்ணவர் பாரணஞ்செய்தனர். அதன்மேற்பட்ட திதியாகிய திரயோதசியிற் சிவபிரான் மலையரசபுத்திரியாராகிய உமாதேவியாரை நிறுத்திச் சூலத்தைச் சுழற்றி, கையில் தமருகமேந்தி ஓர் ஜாமகாலம் நிருத்தஞ்செய்தனர். அக்காலத் தையே வேதசிவாகமங்கள் பிரதோஷமெனக் கூறும். இதுபற்றி, பதினைந்து தினங்கட் கோர்முறைவருந் திரயோதசியைப் பிரதோஷ மென்பதன்றி, தினந்தோறு மாலையு மிரவுங்கலக்கும் ஒருசாமப் பொழுதையும் பிரதோஷகாலமெனவும், வருடத்திற் கோர்முறையெய்தும் மகா சிவராத்திரியை வருடப்பிரதோஷமெனவுங் கூறா நிற்பர். ஒவ்வொரு தினமும் உதயாதி இருபத்தாறேகால் நாழிகை முதல் இரவு மூன்றே முக்கால் நாழிகைவரையும் நாழிகை ஏழரை. இதில்

ரஜநிமுககாலத்திற் சம்பவிப்பது பிரதோஷமெனவும், மத்தியான முகூர்த்த மெட்டனுள் எழுகழித்து எஞ்சிய எட்டாவது முகூர்த்தமே பிரதோஷமெனவும் ஆகமங்கள் கூறும். இம்முறை பற்றி மாதப்பிரதோஷத்தை மாதசிவராத்திரி யென்பர்.

இதுநிற்க. சிவபிரான் நிருத்தஞ்செயக்கண்ட தேவர் களித்து இருகரங்களை யுஞ் சிரமேற்குவித்து மனதை மகாதேவன்பாற் பதித்து அரனே பரனெனமதித்து ஆநந்தக்கூத்தாடினர்; அன்புருகிப் பாடினர்; ஐயனைக் கொண்டாடினர்; அருளாளர் விடைபெற்றுத் தமதிடத்தைநாடினர். இத்தகையநிருத்தகாலத்தில் தேவர்கள் தத்தமக்கியைந்த வாச்சியங்களும், திருமால் மிருதங்கமும்வாசித்தனர்.

பெருமான் திருக்கயிலாயகிரியில் உமாதேவியார் முதலானார் காணப் பிரதோஷகாலத்தில் நடனஞ்செய்த அவசரம் ஸந்த்யாந் ருத்தமூர்த்தமெனப்படும்.

**ப்ரஹ்மோத்தரகாண்டம்.**

*வாக்தேவீத்ருதவல்லகீஶதமகோவேணும்ததத்பத்மஜ:*
*ஸ்தாளோந்நித்ரகரோரமாபகவதீகேயப்ரயோகாஞ்சிதா*
*விஷ்ணுஸ்ஸாந்த்ரம்ருதங்கவாதநபடுர்தேவாஸ்ஸமந்தாத்ஸ்திதா:*
*ஸேவந்தேதமநுப்ரதோஷஸமயேதேவம்மருடாநீபதிம்.*

**ஸந்த்யாந்ருத்தமூர்த்தயே நம:**

**பதினாறாவது**

# ஸதாந்ருத்த மூர்த்தி.

சிவபெருமான் ஆன்மாக்களுக்குப் பெத்த முத்திகளைத் திருவருள் செய்தற் பொருட்டுப் பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு பஞ்சகிருத்தியத் திருநடனத்தை யெஞ்ஞான்றும் இயற்றி யருளாநிற்பர்.

"*தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்*
*சாற்றியிடு மங்கியிலே சங்காரம் - ஊற்றமாய்*
*ஊன்று மலர்ப்பதத்தி லுற்ற திரோதமுத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு.*"

"*மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ்*
*சாய வமுக்கியரு டானெடுத்து - நேயத்தால்*
*ஆநந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்தல்*
*தானெந்தை யார்பாதந் தான்.*"

என்னும் உண்மை விளக்கத்தின்படி, பெருமான் மூன்று திருக்கரங்களாலும் இரண்டு திருவடிகளாலும் பஞ்சகிருத்திய மியற்றுகின்றார். எவ்வாறெனில், தமருகமேந்திய கரத்தினாற் சிருட்டியும், அமைத்த அஸ்தத்தினால் திதியும், மழுவேந்திய கையினாற் சங்காரமும், முயலகன் முதுகிலூன்றிய திருவடியினால் திரோபவமும், அநவரத நடம்பயிலும் அடித்தாமரையினால் அநுக்கிரகமும் புரிவர். அன்றியும்,

"*உரையுணர்வுக் செட்டா வொருவன்மிகு பஞ்சாக்*
*கரத்தால் வரைமகடான் பாதி - பரையிடமாய்க்*
*காணும் படியே கருணையுருக் கொண்டாடல்*
*பேணுமவர்க் குண்டோ பிறப்பு.*"

என்றபடியே , ஆன்மாக்கள் அநாதியே பந்தித்துள்ள பாசவீக்கம்போக்கி முத்தியடைதற் பொருட்டே, அருள்வடிவாகிய அம்மையார் பக்தாநுக்கிரக காரண மாய், பஞ்சாக்கரவடிவமாகிய அவ்வாநந்தத் திருநடனத்தை வாமபாகத்தினின்றுந் தரிசிப்பர். மேலும்,

"*ஆடும் படிகேணல் லம்பலத்தி லையனே*
*நாடுந் திருவடியி லேநகரங் - கூடு*
*மகர முதரம் வளர்தோள் சிகரம்*
*பகருமுகம் வாமுடியப் பார்.*"

என்றபடியே, சிவபிரான் நிருத்தக் கோலங்கொண்டஞான்று திருவடியில் நகரமும், திருவயிற்றில் மகரமும், திருத்தோளில் சிகரமும், திருமுகத்தில் வாகாரமும்,

திருமுடியில் யகரமுமாகக்கொண்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரமே திருவுருவாக நின்று ஆன்மாக்களின் மீதுள்ள கருணையால் ஐவகையான கிருத்தியங்களையு மியற்றாநிற்பர். இனி இந்நடனம் ஊனநடனம் ஞானநடனம் என இருவகைப்படும். சிவபிரான் திருக்கயிலாயமலை ஸ்ரீ மேருமலை - வடாரண்யம் - திருத்தில்லை - திருவாலவாய் - திருநெல்வேலி - திருக்குற்றாலம் - திருத்தெளிச்சேரி முதலாகக் கூறப்படும் பலவிடங்களிற் பலகாரணங்களாற் பலமுறை பதம் பெயர்த்தாடி யிருப்பினும், ஸ்ரீ பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு பஞ்சகிருத்தியகாரணமாக எப்போதும் உமையம்மையார் தரிசித்து நிற்கும்படி திருமால் திருந்திதேவர் பிரமதகணங்கள் முதலானாரது தோற்கருவி தொளைக்கருவி நரப்புக்கருவி கஞ்சக் கருவி மிடற்றுக்கருவி முதலியவற்றி னோசையோடு திருநடனஞ் செய்திருத்தலின், ஸதாக்ருத்தமூர்த்தியெனப் பெயருற்றனர்.

**ஸதாந்ருத்தமூர்த்தயே நம:**

---

## சண்டதாண்டவ மூர்த்தி



### பதினேழாவது

# சண்டதாண்டவ மூர்த்தி.

ஸ்ரீவடாரண்யத்தின் மகிமையைச் சிவபிரானாற் சொல்லக் கேட்ட சுநந்த முநிவர், பெருமான் அதுக்கிரகித்தவண்ணந் தாண்டவதரிசனத்தை விரும்பி ஆங்கடைத்து தவத்திருந்தனர். அவ்வாறிருக்கையிற் கண்லுதல் கைவிரலணியாகிய கார்க்கோடகன், திருவிரலில் விஷத்தைக்கக்க, விடையூர்தி "நம்மை மனத்திற் கரு தாது மமதையோடு நீ செய்த தீமைக்கத் திருக்கைலையை நீங்குக" என, நாகம் நடுங்கிப்பணிய, நாதன் "வடாரண்யத்தலத்திற் பல வாண்டுகளிருந்து அருந்தவம் புரியுஞ் சுசந்தருடன் சண்டதாண்டவத்தைத் தரிசித்துப் பிறகுவருதி" என, கட்செவி கருடனுக் கஞ்சி முறையிட, இறைவர் "இத்தீர்த்தத்தில் மூழ்கி ஆண்டுள்ள முத்திதீர்த்தத்தில் முளைக்க" என, அரவு அவ்வாறே ஆலவன மடைந்து அருந்தவஞ் செய்யுஞ் சுநந்தரைக்கண்டு தொழுது தனது வரலாற்றைச் சொல்ல, சுநந்தமுநிவர் மகிழ்ந்து தன்பக்கலிற் றவமியற்றப்பணித்து, பழையபடி நெடுங்காலந் தவத்திருப்ப, முநிவரைப் புற்றுமூடி முடிமேல் முஞ்சிப்புல் முளைத்தமையால், அவர் முஞ்சிகேச முநி வரெனப் பெயர்பெற்றனர். இதுநிற்க:

நிசும்பன் சும்பன் என்னும் நிசாசாரிருவர் செய்துவருந் தீமையைப்பொறாத தேவர்கள், பார்வதியாரை நோக்கிப் பலகால் அருந்தவஞ்செய்ய, இறைவி இமையவர் முன் தோன்றி, "அமரரே! நீங்களவாவிய அடைவே அவர்களை யழிப்பேன்" என்றருளிச்செய்து மலைச்சாரலை யடைந்து தவவடிவேற்று வசித்திருக்கையில், சண்டன் முண்டன் என்னுந் தானவரிருவர் சாம்பவியைச் சார்ந்து, "தார்குழலே! தனித்திருப்பானேன்; சாற்றற்கரிய வலியுடைய சும்பனிடஞ்சேர்க" எனச் சொல்ல, அம்பிகை "அருந்தவமாற்றும் யான் ஆடவரோடுரையாடேன். அரைக்கணத் தகலுமின்" என்றறைய, அவர்கள் சும்பாசுரன்பால், தேவியின் பொலிவை வியந்து செப்பி, அவனேவலாற் சில படையுடன் மீட்டுஞ் சென்றழைத்தும் வாராமை நோக்கி வலிதிற் கைபற்றி யீர்க்கக் கருதுகையில், விமலை வெகுளிகொள்ள, அம்மையார் தோளிலிருந்து அனேகஞ் சேனையும் ஒருசத்தியும் அவதரித்து, அவ்விருவரையுஞ் சேனையுடன் சங்கரித்தனர். "சண்டனையு முண்டனையுஞ் சங்கரித்தமையாற் சாமுண்டியெனப் பெயர்பெற்றுத் தரணியோர் தொழவாழுதி" என அச்சத்திக்கருளினர். அவற்றை யறிந்த நிசும்பன் - சும்பன் என்போர் அநேக அசுரருடன் ஆர்ப்பரித்து வந்து அம்மையை யெதிர்த்து அஸ்திரமாரி சொரிய, உமாதேவியார் தமதுடலினின்று ஸப்தமாதர்களையுஞ் சிவதூதியரையும் உதிப்பித்து யுத்தத்திற்கனுப்பி அவர்களால் அசுரச்சேனையை யழிப்பித்து, தாமே முதலில் நிசும்பனையும் பிறகு சும்பனையு மாய்த்தனர்.

ஆற்றலுடைய அவ்விரண்டு அசுரர்கட்கும் இளையாளாகிய குரோதி யென்பவள் பெற்ற இரத்தபீசன் தனதுடற்சோரியில் ஒரு துளி தரைமேல் விழுந்தால் அத்துளி தன்னைப்போலத் தானவனாமாறு வரம் பெற்றனன். அவன்

இச்செய்தியறிந்து இமைப்பொழுதி லெதிர்த்தனன். அந்நிருதனுடன் ஸப்தமாதர்கள் சமர்கெய்கையில் உதிரத்துளிகட்கு ஒவ்வோர் உருவேற்றதுகண்டு ஓடிவந்து உமையம்மையோடுரைப்ப, தேவியார் சினமிகத் திருத்தோளினின்றுங் காளி தோன்றினள். "பெண்ணே யான்! இரத்தபீசனைச் சங்கரிக்கையில் உதிரத்துளி யொன்றும் பூமியில் விழாமல் உன் கைக்கபாலத்தேந்தி யுண்ணக்கடவாய்" என்று பணித்து, அவளுதிரபானஞ் செய்துவர, இறைவியார் இரத்தபீசனை இமைப்பிலழித்து இமையவரை அவரவர் நாட்டிற்கேக விசைத்து, காளியைக் களிப்பித்து அவளுக்குச் சண்டியென்று பெயரும் தெய்வீகமும் சிவபெருமானிடம் நிருத்தஞ்செய்து அவர் பக்கலில் வசித்தலும் ஆகிய இவற்றை அநுக்கிரகித்து, ஸப்தமாதர்கட்கருள்செய்து, அந்தர்த்தானமாயினர். காளி அசுரருதிரமருந்திய ஆற்றலாலும், இறைவியாரிடம் பெற்ற வரத்தாலு இறுமாந்து மாமிசம் நிண முதலியவற்றைப் புசித்து, மோகினி இடாகினி பசாசு பூதங்கள் புடைசூழ ஒரு வனத்திலிருந்து மற்றொரு வனத்திற்குப் போய் உலக முழுவது முலவிவடாரண்யத் தருகில் வந்து யாவரையுந் துன்புறுத்தி வாழ்ந்திருந்தனள். இஃதிவ்வாறிருக்க,

ஒருநாள் திருவாலங்காடு சென்ற நாரதமுநிவருக்குக் காளியின் தீச்செயல்களைக் கார்க்கோடகமுநிவர் கூற, நாரதர் கேட்டுச் செல்லுமளவில், காளி விழுங்கவர, அவர் கரந்து சென்று விண்டுவைக்கண்டு விஷயத்தை வாய்விண்டனர். திருமால் சிவபிரான்பால் திருவிண்ணப்பஞ்செய்ய, இறைவர் "இப்பொழுதே அக்காளியின் வன்மைகுன்ற வடவனமடைவோம்" என்று கூறி, சுநந்த முநிவர் கார்க்கோடக முநிவர்கட்குக் கருணை செய்யக் கருதி ஆலவனமடைந்தனர்.

மாதேவன் வயிரவவடிவு கொண்டமையின், உடன்வந்த பூதகணங்களுடன் காளியின் சேனை எதிர்த்து ஆற்றாது, காளிக்கறைய, அவள் அமர்க்கோலங் கொண்டுவந்து ஐயனைக்கண்டு பயந்து "நிருத்த யுத்தஞ்செய்வோம்" என நிகழ்த்த, முன்னோனிசைந்து முஞ்சிகேச கார்க்கோடகர்கட்குத் தரிசனந்தந்து திருநடனத்துக் குத் தேவருடன் வந்தனர். அக்காலத்து அமரர் அவரவர்கட்கிசைந்த பல வாத்தியங்களை வாசித்தனர். அநவரதம் - அற்புதம் - இரௌத்ரம் - கருணை - குற்சை - சாந்தம் - சிருங்காரம் - பயம் - பெருநகை - வீரியமென்னும் நவரசங்களும் அபிநயமும் விளங்க வாத்தியங்கட்கொப்பப் பாண்டரங்கமாகிய சண்டதாண்டவத் தைக் காளியுடன் செய்கையில், கருணாநிதியின் திருச்செவியிலிருந்த குண்டலமா னது நிருத்தவேகத்தால் நிலத்தில் நழுவ, அதை இறைவரே திருவடி யொன்றினா லெடுத்துத்தரித்துத் திருத்தாண்டவஞ் செய்து காளியைத் தோல்வியடையச் செய்தனர். அவள் செயலற்று நாணிப் பணிந்தனள். அருள்வல்லல் "ஈண்டோர் சத்தியா யிருத்தி" என அநுக்கிரகித்து இருமுநிவரும் எண்ணில்லா அடியார்களும் தமது தாண்டவக்கோலத்தைச் சர்வகாலமுந் தரிசிக்கும்படி ஆண்டு வீற்றிருக்கின்ற னர்.

இக்காரணத்தா லிறைவர் சண்டதாண்டவமூர்த்தி யெனப் பெயரெய்தினர்.

**திருவாலங்காட்டுப்புராணம்.**

*"இன்சுவை பொழியுஞ் சாய லபிநய மிலங்கச் செவ்வாய்*
*புன்சிறு முறுவல் பூப்பப் புரணவா னந்தம் பூரித்*
*தன்புறு மவையோ ருள்ள மயர்தர வியங்கட் கேற்ப*
*வின்படு நடனங் காளி யோடரன் விளைத்த வேலை.*

*மடிதரு முலக மென்ன வயங்கரு ணல்கி மெல்ல*
*வடிபெயர்த் தாடல் செய்ய வருகுறுங் காளி நோக்கி*
*யொடிவுறு நாணின் மேவி யொளிமுக மிறைஞ்சி யொல்கி*
*வடிவுறு பாவை போலச் செயலற மயங்கி நின்றாள்."*

**சண்டதாண்டவமூர்த்தயே நம:**

### பதினெட்டாவது

# கங்காதர மூர்த்தி.

திருக்கயிலாயகிரிக் கருகிலுள்ள ஒரு சிங்காரவனத்தில் சிவபிரான் உலாவு கையில் உமாதேவியார் ஒன்றமுரையாது ஒரு விளையாடல் கருதிப் பின்வந்து தமது திருக்கரங்க ளிரண்டினாலும் பெருமானது திருவிழிகளை மூடினர். அதனால் அளவில்லாத அண்டகோடிகளிலுள்ள ஆன்மாக்களெல்லாம் அல்லலுற் றழுங்கும்படி அந்தகாரம் நிறைந்தது. தினகரன் வெயிலுந் திங்களின் நிலவுந் தீயின் சுடரும் தேவர் ஒளியும் மற்றெங்குமுள்ள பிரகாசமு மிறந்து உலகமுழுவதும் பேரிருண்மய மாயிற்று.

சிவபிரான் திருவிழி யொளியால் எல்லாச் சோதியும் இயங்கும் தன்மையால், கங்களானது கண்களைக் கவுரி கையால் மூடிய கணமொன்றில் உயிர்கட்கு ஊழி பல கழிதல் கருதி, கருணைமூர்த்தி மன்னுயிர்த் தொகைகட் கின்னருள்புரியத் தன்னுளமதனிலுன்னினனாகி, நெற்றியினாப்பண் நீள்விழி தோன்றுவித்து, அன்னது கொண்டுலகின் இன்னலை விலக்கி நீங்காநிலையாய் நிறைந்த பேரிருளைத் தீர்த்து, திங்கள் - செஞ்சுடர் - தீ - முதலாய சுடர்கட்கொளிசெய்தனர். எண்ணிறந்த ஆன்மாக்கள் தத்தம் உண்ணிறைந்த பெருங்களிப்பால் உமைபாகனை வழுத்தின. இத்திறச்செய்கையை இறைவியறிந்து சித்தமதனில் மெத்தப்பிரமித்து ஈசன் இணை. விழிமூடிய இருகரத்தையும் இமைப்பொழுதிலெடுத்தனள். அவ்வாறெடுக்கையில் அம்மையாருக்கேற்ற அச்சத்தால் விரல்கள் பத்திலும் வியர்வு தோன்ற, விமலை கண்டு கைவிதிர்க்க, பத்துவிரலிலிருந்து பிறந்தவை பத்துக்கங்கைகளாகிப் பெருகிச் சத்தசமுத்திரக்கட்கும் வழிகொண்டன: நூறு ஆயிரங் கோடி முதலிய கணக்கில்லாத முகமுற்று மூதுலக முழுவதும் மூடிப் பரவக்கண்டு மோசம் வந்ததென்று இந்திரன் பிரமன் விண்டு மூவரும் திருக்கயிலாய கிரியில் திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தி னுட் சென்று திரியம்பகனைச் சேவித்து "தேவதேவா! ஏதோவொரு வெள்ளம் எங்கும் பெருகி எல்லையில்லா திரைந்து யாவையு மழிய அண்ட முழுவதுங் கவர்ந்தது. அதனை யடக்கி அடியேங்களையும் அகிலத்தையும் அளிக்க வேண்டும்" என்றறைய, பன்னகாபரணன் பார்வதி விரலிற் பத்துக் கங்கைகள் உற்பவித்ததை யுணர்த்தி உலகைச்சூழ்ந்த அவ்வெள்ளத்தை யுன்னியழைத்துத் தமது * சடைக் கற்றையிலோர் மயிர் முனையில் தரித்தனர்.

---

* இஃதிவ்வாறிருக்கையில், வைணவரி லொருசாரார் "திருமால் திரிவிக்கிர மாவதாரங் கொண்டு, மாவலிபால் மூவடி மண் ஏற்று ஆகாயத்திற் றன தடியை நீட்டிய பொழுது, பிரமன் கங்கா சலத்தால் அபிடேகித்தனன்' எனவும், மற்றொருசாரார் “வாமனாவதாரங்கொண்ட விஷ்ணுமூர்த்தியின் அங்குஷ்டத் தினின்றுங் கங்கை அவதரித்தது” எனவுங் கூறி, "அத்தகைய கங்கையைச் சிவபிரான ணிந்தனர்” எனவும், கர்ணபரம்பரையில் வழங்கி வருகின்றனர். அவையொவ்வா: எவ்வாறெனில்,

ததீசி - கண்ணுவர் - பிருகு முதவிய முநிசிரேஷ்டர் சாபத்தாற் பத்துப் பிறவியடைந்த பதுமநாபன் (மச்சம் - கூர்மம் - வராகம் - நரசிம்ஹம் - வாமனமாகிய) ஐந்து அவதாரங்களில் கண் - ஓடு - கொம்பு - தோல் - முதுகந்தண்டு இவற்றைப் பறிகொடுத்து) , ஐயனால் தண்டிக்கப்பெற்றும், மற்றைந் தவதாரங்களில் மஹாதேவனை யருச்சித்து வரங்கள் பெற்றும், தான் பெற்ற சாபப்படி, தசாவதாரங்க ளுஞ் செய்தொழிந்தனர் எனச் சிவபுராணங்கள் விளங்கக்கூறும். [இச்சரிதங்களை முறையே மச்சாரி - வராஹாரி - கூர்மாரி - ஹிம்ஹக்நம் - கங்காளமூர்த்தங்களிற் கண்டு கொள்க. ஈண்டு : விரிவு கருதி, விடுத்தாம்.] இது நிற்க.

ஈண்டுக் குறளுரு வேற்று, மாவலிச்சக்ரவர்த்திபால் யாசித்து மூவடி மண் பெற்று, வையகமும் வானகமும் மாயோன் அளந்த பொழுது, அவ்வாமனனது அடி அங்குஷ்டம் மேலண்டகடாக முகட்டிற்பட்டு, அண்டகடாகம் பினத்து, ஆங்குள்ள ஆகாயகங்கை அவனிமே லொழுகியதென்றும், அது கங்காத்வாரத்தின் வழியே, மாளவதேச மூலமாய்ச் சென்று மேற்கடலிற் சங்கமமாயிற்று என்றும், சிவரஹஸ்யம் துதீயாம்சத்தில் ஸ்ரீநந்தியெம்பெருமான் ஹிமவானுக்குப் பூலோக விசிஷ்டத்தைக் காட்டுகிற கட்டத்திற் கூறப்பட்டுளது.

### விவரஹஸ்யம் துதீமாம்சம்.

*அந்யாவிக்ரமதோவிஷ்ணோ:பாததோநிர்கதாநகா*
*கங்காத்வாராத்ப்ரதீச்யாப்திம்ஸங்கதாமாளவாந்திமே.*

அவ்வாறன்றி, அவ்வைணவர் கூறும் விஷ்ணு பாதோதக கங்கையைச் சிவபிரான் அணிந்ததுமில்லை. கமலைகேள்வன் காலினின்றுங் கங்கை ஜனித்தது மில்லை. அங்குக் கங்கோற்பவமாகக் காரணமுமில்லை யென்பவை நன்கு விளங்குகின்றன. அல்லது அவர்கள் அநுமானிக்கும் வகையே அத்திரிவிக்கிரமன் தாளிற் கங்கை ஜனித்திருப்பினும், அது அத்திருமாலின் சிரமேலேயே விழுந்து அவருடலின் வழியேயிழிந்து தரையையடைந்து ஊர்கடக்க வோடியிருக்க வேண்டு மேயன்றி, சிவபெருமான் தம்மால் கர்வ பங்க நிமித்தமாய் முதுகென்பு பறிக்கப்பட்ட வாமனனது பாதோதகத்தைச் சிரமேற் கொண்டாரென்பது வேதாகம விருத்தமாகவே விளங்கும் வாமனாவதாரத்தின் சரிதமும், அதனைச் சங்கரிக்க வந்த ஸ்ரீ கங்காளமூர்த்தியின் கண்யமும் பின்னர் வருமிடத்திற் கண்டுணர்க.

---

அதுகண்ட மூவரும் அரனை வணங்கி "அருள் வெள்ளமே! அவனிமுழுவது மழிக்கும்படி வந்த அவ்வெள்ளம் அன்னையார் திருவிரலினின்றும் ஜனித்தமை யானும், தேவரீர் செஞ்சடைமீதிற் சேர்த்தியதானும் புனிதமாகப் பொருந்துதலானும் எங்கள் நகரத்திலிருத்த அதிற் சிறிது அருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, இறைவர் சடையிலிருந்த ஒரு கங்கையிற் சிறிது சிறிது வாங்கி மூவர்கையிலும் நல்கி உடன்

செல்லப் பணித்தனர். எம்பெருமானது விடைபெற்று இந்திரன் அமராவதி நகருக்கும், பிரமன் மனோவதி பட்டணத்திற்கும், விஷ்ணு வைகுந்த பதவிக்குங் கங்கையைக் கொண்டு சேர்ந்தனர்.

தேவியாரது திருவிரல் வியர்வினாலுண்டாகிய கங்கை உலகத்தை யழிக்கும் படி இரைந்து வருகையில், அதன்வீறு குன்ற விமலர் தமது வேணியிலணிந்த காரணத்தினால் ஐயனுக்குக் கங்காதர மூர்த்தி யென்பதோர் அபிதானமெய்தியது.

**திருவாசகம்.**

"*மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி*
*சலமுகத்தா ல்வன்றலையிற் பாயுமது வென்னேடி*
*சலமுகத்தா லவன்றலையிற் பாய்ந்திலளேற் றரணியெல்லாம்*
*பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ.*"

**கங்காதரமூர்த்தயே நம:**

## கங்காவிஸர்ஜந மூர்த்தி.



பத்தொன்பதாவது

# கங்காவிஸர்ஜந மூர்த்தி.

அயோத்தி நகரை யரசுபுரிந்த சகரன் என்னுஞ் சக்ரவர்த்தி விடுத்த அசுவமேதப்புரவியை அமரேசன்கண்டு மனம் பொறானாகித் தன் வாழ்வுக் கீனம் வந்ததேயென்று சிந்தை நைந்து வஞ்சனையாற் பற்றி, பாதலத்திற் கடுந்தவம்புரியுங் கபில முநிவர் பக்கலிற் கட்டிப் போயினன். அம்மன்னவன் மக்கள் அறுபதினாயி ரவரும் தந்தை கட்டளைப்படி தரணி முழுதுந்தேடிக் காணாது, பாரைத்தோண்டிப் பாதலமடைந்து அரியதவசியாகிய கபிலர் பக்கலிற்கட்டிய பரியைக்கண்டு இக்கள்வனே நமது புரவியைக்கவர்ந்து காவலன் யாகத்தைப்போக்கக் கருதியவனெ ன்று கனன்று அவர் துன்புறவைத்தனர். அதனால் முநிவர் முனிந்து விழிக்க, விழித்தீயினாற் சகரபுத்திரர் அறுபதினாயிரவருஞ் சாம்பரா யழிந்தனர். அச்செய்தி யவருடன் போந்த தூதுவர் சொல்லத் தெரிந்த அரசன் தன் பௌத்திரனாகிய அஞ்சு மானை யழைத்து "என் புதல்வரிறப்பினும் எடுத்த யாகத்தை விடலாமோ?" என அஞ்சுமான் பாதலஞ்சென்று கபிலர்முன்னுள்ள சாம்பர் மலையைக் கண்ணுற்று நடுங்கி, முனிவர் முன்வந்து குதிரையைக் கேட்க, முனிவர் மனமகிழ்வுற்றுப் புரவி யைக் கொடுக்கப்பெற்று, பூவுலகடைந்து பிதாமகன்பால் விடுத்து அவ்யாகத்தை முடிப்பித்தான். அவன் சந்ததியி லொருவனான பகீரதன் பண்டைக்காலத்தில் தன் மூதாதையர் முனிவன் முனிவால் முடிந்து சாம்பராய் நரகத்தில் மூழ்கியுள்ளா ரென்று தெரிந்து, அவர்களைச் சுவர்க்கமடைவிக்கக்கருதிப் பதுமனை நோக்கிப் பதினாயிரவருடந் தவம்புரிந்தனன். பகீரதன் பண்ணிய பெருந்தவத்திற்குக் களித்த பிரமன் பிரசன்னனாகி "ஆகாயகங்கை அவர்கள் அஸ்தியிற்பட்டாற் சுவர்க்கமடை வர். அஃது அவனிமேல்வரில் அதன் வேகத்தை யாற்றுதல் அரனுக்கு அமையுமன்றி ஏனையோருக்கேலாதாகலின், சிவபிரானை நோக்கித் தவஞ்செய்க" எனச் சாற்றி மறைய, புகீரதன் பதினாயிரவருடந் தவம்புரிந்து பரமனருள் பெற்று, கங்கையைக் கருதி ஐயாயிரவருடம் அருந்தவம்புரிகையிற் கங்கை பெண்வடிவாக வந்து "என்வேக மதிகமாதலின் என்னைத் தாங்கும்படி ஈசனை நோக்கி இன்னுந் தவஞ்செய்க" என்றிசைப்ப, இறைவனை நோக்கி இரண்டாயிரத்தைஞ்னூறு வருடம் மீண்டுந் தவஞ்செய்தலும் எம்பிரான் காட்சிதர, கங்கை பெண் வடிவாக வந்து கூறியதை விண்ணப்பித்து "காக்கிறேன்" என்று கண்ணுதல் கொடுத்த வரத்தைப் பெற்று, திரும்பவுங் கங்கையைக் கருதி இரண்டாயிரத் தைஞ்னூறுவருடந் தவமிழைத்தனன் . கங்கை அப்பொழுது திரிலோகமும் அச்சமுற்று அலறும்படி ஆரவாரித்துக்கொண்டு வந்து தோன்றினள். அவ்வாறுவந்த கங்கையைச் சிந்தாழற் சிவபெருமான் சடைநுணியி லணிந்தனர்.

பகீரதன் கங்கையைக் காணாமற் கலங்கி நிற்பதுகண்டு, கருணாமூர்த்தி “நமது சடையிலிருக்கின் றனள்; அஞ்சற்க" என்று திருவாய்மலர்ந்து சிறு திவலைவிட, கங்கை நாதன்சடையிலிருந்து நதியுருநண்ணி நானிலத் திறங்கினள். இவ்வாறு வந்த கங்கை முன் பகீரதன் படர்கையில் இறந்தோரைக் கதியிற்சேர்க்க விரைந்து செல்லுங் கங்கையின் வேகத்தால், ஐந்து முறிவர் வேள்விச்சாலை யழிய

அவர்கோபித்து அந்நீரை உள்ளங்கையி லேற்றுட்கொண்டனர். அரசன் கங்கையைக் காணாமல் ஐந்து நிவரைப் பணிந்து முன் நடந்தவற்றைமொழிய அவர் மனமிரங்கிச் செவிவழி விட்டமையால் ஜாந்நவியெனப் பெயர்பெற்று, இறந்து கிடைந்த சகரர்கநடலுதிர்ந்த சாம்பரிற்படிய அவர்கள் நற்கதியடைந்தனர்.

பகீரதனாற் கொண்டுவரப் படுதலின் கங்கைக்குப் பாகீரதியெனவும் ஒருபெயர் வழங்காநிற்கும். மேற் கங்காதரத்திற் கூறிய வண்ணம் சிவப்பிரசாதத்தினாற் பிரமன் தனது மனோவதி நகரிற்குக்கொண்டுபோன கங்கை பகீரதன் வேண்டுகோளால் பூமியில் வந்தபொழுது, உலகமழியாமற் சிவபிரான் தமது சடையிலேற்று, அவன் பிரார்த்தனைக் கிரங்கி அதிலோர் துளிவிடுத்தனர். ஆதலின் கங்காவிஸர்ஜநமூர்த்தி யென நாமமெய்தினர்.

**இராமாயணம்.**

*கங்காயா꞉பதநராஜப்ருதிலீநஸஹிஷ்யதே*
*தாம்வைதாரயிதும்வீரநாந்பஸ்யாமிஸூலிந꞉*
*ரக்ஷஸர்வாநிமாந்லோகாநலோகாந்கர்துமர்ஹஹி*
*தேவாநாம்சவச꞉ஸ்ருத்வாஸர்வலோகமஹேஸ்வர꞉*
*ஸஔமித்யப்ரவீத்ஸர்வாந்புநஸ்சேதமுவாசஹ.*

**நவமஸ்கந்தம்.**

*கஸ்கதாரயிதாவேகம்பதிஷ்யௌமிமஹீதலே-பகீரத꞉*
*தாரயிஷ்யதிதேவேகம்ருதரஸ்த்வாத்மாஸரீரிணாம்*
*யஸ்மிந்ததமிதம்ப்ரோதம்விஸ்வம்ஸாடீவதந்துஷு.*

**விஷ்ணுபுராணம்.**

*ஸ0போர்ஜடாகலாபாத்ஸாவிநிஷ்க்ராந்தாஸ்திஸர்கராந்*
*ப்லாவயித்வாதிவம்நிந்யேயாபாபாந்ஸகராத்மஜாந்.*

**ஸ்காந்தபுராணம் தக்ஷகாண்டம்.**

*இயம்கர்வபராக்ராந்தா꞉ஸே꞉ஸஸிரிமௌலிகா*
*ஜடாகோடீரநிலயாசக்ரேஸாசவிஸர்ஜிதா.*

**கந்தபுராணம்.**

"*அந்நதி மூன்று தன்னி லயனகர் புகுந்த கங்கை*
*தன்னருந் திறலின் மிக்க பகீரதன் தவத்தான் மீளப்*
*பின்னரு மிமையா முக்கட் பெருந்தகை முடிமேற் றாங்கி*
*யிந்நில வரைப்பிற் செல்ல விறையதில் விடுத்தல் செய்தான்.*"

**கங்காவிஸர்ஜநமூர்த்தயே நம꞉**

## த்ரிபுராந்தக மூர்த்தி.



### இருபதாவது

# த்ரிபுராந்தக மூர்த்தி.

தாரகாசுரன் பெற்ற தனயராகிய தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்யுன்மாலி யென்னு மூவரும், பிரமனை நோக்கிப் பெருங்காலந் தவம்புரிகையில், பதுமன் அவர்கட்குமுன் தோன்றக்கண்டு பணிந்துநின்று பலவகையாகத்துதித்து "அண்ணலே! அடியேங்கட்கழி'யாவர மருளவேண்டும்" என, மலரோன் "மைந்தரே! மடியாதிருப் போர் வையகத்திலில்லை; கற்பகாலங் கழியின் யானும் இந்திராதி தேவர்களும் இறப்போம். ஈசனே யிறவாதவன். ஆதலின் அது நீங்க மேம்பாடாவது மோக்ஷமாவது வேண்டிற் றருதும்' என, தானவர் பொன் - வெள்ளி - இரும்பினா லமைந்த மதில்கள் பொருந்திய முப்புரம் பூமி - அந்தர - சுவர்க்க மென்னும் மூவுலகங்களிலும் வேண்டும். அவை ஆயிரவருடத்திற் கொருமுறை விரும்பிய இடத்திற்குப் பெயரவேண்டும். அப்புரமூன்றும் ஒன்றுபட்டபொழுது சிவபெருமானே ஒருகணையா லழித்தாலன்றி வேறொருவராலு மழியா வரம் வேண்டும்" எனக் கேட்க, பிதாமகன் அவ்வாறே பிரசாதித்துத் தனதுலகுசார்ந்தனன்.

தாரகாக்ஷன் முதலாயினர் அளவில்லாத அவுணர் சேனையை யுடையவராய், மயன் என்னுந் தானவதச்சனை வருவித்துத் தங்கள் விருப்பின்படி பூமியி லிருப்பு மதிலும் . அந்தரத்தில் வெள்ளி மதிலும், சுவர்க்கத்திற் பொன்மதிலுமாக, பலவளப்பமு நிறைந்த முப்புரம் நிருமிக்கச்செய்து, தமக்கு வேண்டியதொன்றுமின்றி, சிவலிங்கபூசனை முதலியவற்றைக் குறைவறச்செய்து வாழ்ந்திருப்பினும், தமது அசுரகுலத் தியற்கை குன்றாதவராய் வைகுந்த முதலிய தேவநகரங்களையும், உலகிலுள்ள பல பதிகளையும், திரிபுரத்தோடு சென்று சிதைத்து வருதலாற் சினந்த இந்திரைகேள்வன் இந்திரன் முதலிய இமையவரை யுடன் கொண்டுபோ யெதிர்த்துத் துன்புற்றுச் சகியாமல், தேவர் குழுவுடன் திரும்பி மேருமலையின் வடபாலிற் பலகாலந் தவஞ்செய்ய, பரமபதி இடபாரூடராய்க் காட்சிதந்தனர். தேவர்கள் நமஸ்கரித்துத் திரிபுரத்தவர் தீமையை விண்ணப்பஞ்செய்ய, சிவபிரான் “அவர்கள் நமதடியராதலின், அவர்களைச்செகுத்தல் அடாது" என்றருளி அந்தர்த்தானமாயினர்.

விண்டு தேவர்களே அஞ்சாதீர்களென்று புத்தவடிவுகொண்டு, நாரதமுநிவர். சீடராக வுடன்வரத் திரிபுரமடைந்து பிடகாகமம் பிரசங்கித்து, அவரை மருட்டிப் பவுத்தராக்கினர். அம்மாயையிலகப்படாதார் மூவரேயாதலின் திருமால் எனையோரைப் பார்த்து “நீங்கள் அம்மூவரையும் பாராதீர்கள். அவர்கள் இழிதொழில் பூண்டோர்” என்று கூறி, நாரதருடன் மேருமலையடைந்து தேவ கூட்டத்துடன் சிவபிரானைச் சிந்தித்துத் தவத்திருந்தனர். பெருமான் அஃதறிந்து அருள்வடிவாகிய திருநந்திதேவரை விளித்து “'தேவர்கள்பாற் சென்று திரிபுரத்தவரைச் செயிக்க இரதமுதலிய யுத்தகருவிகளைச் சித்தஞ்செய்யக் கட்டளையிடுக" என, நந்தியெம் பெருமான் மேருமலை சேர்ந்து அவ்வாறே அமரர்கட்கு ஆஞ்ஞாபித்துச் செல்ல, தேவர்கள் களிகூர்ந்தனர்.

மந்தரகேசரி மலைகள் அச்சாகவும், சந்திர சூரியர் சக்கிரமாகவும் இருதுக்கள் சந்தியாகவும், பதினான்கு லோகங்கள் பதினான்கு தட்டுகளாகவும், ஆகாயம் ஆதனமாகவும், உதயாஸ்தகிரிகள் கொடிஞ்சியாகவும், நதிகளும் நதங்களும் நாட்டுங்கொடியாகவும், நக்ஷத்திரங்கள் நல்ல விதானமாகவும், மோட்சலோகம் மேல்விரிவாகவும், மகங்கள் சட்டமாகவும், நாள் முதலிய காலத்திரயங்கள் (கடுப்பாகிய) எண்ணெயூற்றும் இடுக்குமரமாகவும், அஷ்டபர்வதங்கள் தூணாகவும், எட்டுத் திக்கஜங்கள் இடையிற் றாங்கவும், சத்தசமுத்திரம் திரைச்சீலையாகவும், ஞானேந்திய கன்மேந்தியங்கள் கலன்களாகவும், கலைகள் முளையாகவும், புராணம் - வேதாங்கம் - சாஸ்திரம் - மநுக்கள் மணியாகவும், மருத்துக்கள் படியாகவு மமைந்த திவ்வியமான ஒரு தேரைச்செய்து, வேதங்கள் நான்கையும் நான்கு குதிரைகளாய்ப் பூட்டி, பிரமனைத் தேர்சாரதியாய் நிறுத்தி, ப்ரணவமே குதிரை தூண்டுங் கோலாய்க்கொண்டு, கங்கை அதிதிமுதலிய தேவநங்கையர் நாற்புறமுஞ் சாமரை விரட்டவும், தும்புகுகாரதரிசைபாடவு மமைத்து, அரம்பை முதலிய கணிகையர் நடிக்கவுஞ் சமைத்து, மேருமலையை வில்லாகவும், வாசுகியை நாணியாகவும் நியமித்து, திருமால் பாணமும், சரச்சுவதி வில்லிற்கட்டிய மணியும், அக்கினிதேவன் அம்பின்கூர்வாயும், வாயு அம்மிற்கட்டிய இறகுமா யேற்படுத்தித் திருக்கயிலாயகிரியை யடைந்து திருநந்தி தேவரைப் பணிந்து "அமரர் அமரர்க் கருவிகளை யமைத்துக் கொண்டடைந்தன ரென்று அருள்வள்ளல் சந்நிதியில் அறிவிக்க வேண்டும்" எனப் பிரார்த்தனை செய்தனர்.

அவர் சென்று விண்ணப்பிக்க, இறைவர் தேவியாருடன் இடபாரூடராய் இரதத்தை யடைந்து இமையவர் எண்ணத்தின்படி அதிற் காலூன்ற அதன் அச்சு முரிந்தது. அச்சுதன் அக்கணமே விடை வடிவாகி எம்பிரானை யேற்றுத் தாங்க மாட்டாமல் தரை மேல்விழ, சிவபெருமான் திருவருண்மே லீட்டாலிறங்கினர். பிரமன் ஸ்ரீ விநாயகக்கடவுளைப் பூசித்தனன். அவரருளால் அவ்விரதம் முன்போலாக அதன்மேற் பெருமான் அம்மையாருடன் ஆரோகணித்தனர். மூத்த பிள்ளையார் - இளையபிள்ளையார் - திருமால் - இந்திரன் முதலான தேவர்கள் தத்தம் வாகனங்களிலேறிவரவும், முப்பத்து முக்கோடி தேவர்களும் எப்பக்கத்திலுஞ் சூழ்ந்துவரவும், ஸப்தருஷிக ளாசீர்வதிக்கவும், திருநந்திதேவர் பொற்பிரம்பு கொண்டு முன் செல்லவும், பாநுகம்பன் - வாணன் - சங்குகன்னன் முதலிய சிவகண நாதர்கள் வாச்சிய மிசைக்கவும் சிவபெருமான் இரதாரூடராய்த் திரிபுரத்தைச் சரத்கால சந்த்ரபுஷ்ய நக்ஷத்திரத்திற் சமீபித்தனர்.

அமரர்கள் அப்பொழுது ஐயனைப் பணிந்து "அண்ணலே! வில்லைவளைத்துக் கணைவிடவேண்டும்" என்று பிரார்த்திக்க, சிவபெருமான் தமது திருக்கரத்தேந்திய மேருமலையாகிய வில்லையெடுத்து வளைத்து, வாசுகியாகிய நாணேற்றினர். [அதில் அம்புபூட்டித் திரிபுரத்தை யழிப்பின், அந்தரர் அந்தமில்லாத அகந்தையுறுவராதலின், அவ்வாறின்றி] இடப்பால் வீற்றிருக்கும் இமயவல்லியைக் கடைக்கணிந்து, பிறகு புன்னகை செய்யப் புரமூன்றுந் தீப்பற்றிச் சாம்பராயின, பெருந்தவராயிருந்து சிவனடியே சிந்தித்துவந்த மூவரும், யாதொரு தீமையுமின்றிப் பெருமான் பால்வந்து பணிய கண்ணுதல் அவர்களைத் துவாரபாலகராக அருளி, தேவர்களை அவரவரிடத்திற் கனுப்பித் திருக்கைலைமலைக் கெழுந்தருளினர். அமரர்துயர்

தீரும்படி முப்புரத்தைச் சிரித்தெரித்தலின், சிவபிரான் த்ரிபுராந்தக மூர்த்தியெனத் திருநாமமுற்றனர்.

**யஜுஸ்ஸம்ஹிதை-ஶ்ருதி.**

தேஷாமஸுராணாந்திஸ்ர:புர ஆஸந்நய ஸ்மையவ மாதரஜதாதஹரிணீதா தேவாஜேதும் நாஶக் நுவந்தா உபஸதைவாஜி கீஷந்தஸ் மாதா ஹுர்யஶ்சைவம் வேதயஶ்சநோபஸதாவை மஹாபுரம் ஜயந்தீதிஸஇஷுக்ஸமஸ்குர்வதாக்நி மநீகக்ஸோமக்ஶல்யம் விஷ்ணும் தேயநந்தேப்ருவந்க இமாமஶிஷ்யதீதி ருத்ர இத்யப்ருவந் ருத்ரோவைக்ரூர:ஸோஸ்யத்விதி.

**மஹிம்நஸ்துதி.**

*திதக்ஷோஸ்தேகாயம்த்ரிபுரத்ருணமாடம்பரவிதிர்விதேயை:*
*க்ரீடம்த்யோநகலுபலதந்த்ரா:ப்ரபுதிய:.*

**ந்ருஸிம்ஹபுராணம்.**

*ரத:க்ஷமாசக்ரகௌஸூர்யசந்த்ரௌதுரங்கமா:*
*வே:தா:ஸூதோவிரிஞ்சிஶ்சஜ்யாஶேஷோதநுரத்ரிராட்*
*ஶீதாஸ்த்ரமிந்திராதீஶஇத்யாடம்பரபூர்வகம்*
*த்ருணவத்ஸம்ஹ்ருதாநீஶபுராணித்ரிணிலீலயா.*

**த்ரிபுராந்தகமூர்த்தயே நம:**

### இருபத்தொன்றாவது

# கல்யாணஸுந்தர மூர்த்தி.

திருக்கைலாயகிரியிற் சகலதேவர்களும் நிறைந்திருக்கும்படி நவரத்தின மண்டபத்திற் சிவபெருமான் திருவோலக்கங் கொண்டெழுந்தருளியிருக்கையில், எம்மன்னையார் சிங்காதனத்தை விட்டு துணுக்குற்றெழுந்திருந்து இறைவரது இருசரணாரவிந்தங்களையும் பணிந்து கைகூப்பிநின்று "தேவரீரைப்பணியாத தக்கன் மகளென்பதனாலாய தாக்ஷாயணியென்று சாற்றும் பெயரை மாற்றத்தயை செய்ய வேண்டும்" எனப் பிரார்த்திக்க, அரவாபரணர் 'மாதே! மலையரயன் உன்னை மகளாகப்பெறத் தவஞ் செய்கின்றான். அவன்பாற் குழந்தையாகுக. உன்னை யாம் வந்து மணப்போம்" என, அம்மையார் அவ்வாறே இமாசலத்திலுள்ள தாமரைத் தடாகத்தில் மலர்த்தவிசின்கண், மூவாண்டுள்ள மதலைவடிவேற்று நிற்ப, மலை மன்னன் கண்டு மகிழ்ந்தெடுத்துப்போய் மனைவியாகிய மேனைகையிற் கொடுப்ப, அவள் பாலூட்டி வளர்த்தனள். அம்மையார் ஐந்து வயதடைந்து அருள் மேலீட்டால் அத்தனாகிய பர்வதராஜனுக் கறிவித்து அவனநுமதி பெற்று மலைச்சாரலிற் பர்ணசாலை செய்வித்துச் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருந்தனர்.

அக்காலத்திற் சிவபிரான் தம்மிடஞ்சேர்ந்து மனமொடுங்கும் வண்ணம் வினாவிய ஸநகன் - ஸநந்தனன் - ஸநாதனன் - ஸநற்குமாரன் என்னும் நால்வருக்கும், பதி பசு பாச லக்ஷணங்களைப் போதிக்க, அவர்கள் "அடியேங்கள் மனம் விரிந்திருப்பது அகலும் வகை யருள்புரிக" என, "அப்பொருள் இவ்வாறிருப்பது" என்று ஒன்று முரையாது முநிவர் போல் யோகத்திலிருந்தனராகலின், உலகமுழுவ தும் மாதர் முயக்கற்றுப் பிரமன் படைப்புத் தவறுற்றது கண்ட தேவர் அதனை விலக்குவான் கருதி, மன்மதனை விடுத்து மலர்க்கணை செலுத்தி யோகினை யழிக்கச்செய்ய, நின்மலர் நெற்றி விழியைத் திறப்ப, மதனன் சாம்பராயினன். அருகிருந்த இரதி பரமனைப் பார்த்துப் புலம்பி வேண்ட, பெருமான் "உமையை மணந்தபின் உன் கணவனை யுதவுவோம் " என இரதி இமாசலமுற்றிருந்தனள்.

சிவபெருமான் முநிவர்கட்கருளி, இமயமலை யடைந்து எம்மன்னையாரது கடுந்தவத்தைக் கண்டுகளித்து வேதியவடிவுகொண்டு "யாது கருதித்தவஞ்செய்கின் றனை?" என, உமையம்மை "சங்கரன் என்னை மணஞ்செய்யத் தவஞ்செய்கின்றேன்" என, "பெண்ணே! என்னை மணஞ்செய்து கொள்"' என, இறைவி கோபித்து "கொடியோனே! அகன்று போக, என்று கூற , விமலர் விடையேறிக்காட்சிதர, அம்பிகை அண்ணலைக்கண்டு அச்சத்துடன் கை கூப்பி "தேவரீரை அறியாமற்கூறிய அபசாரத்தை மன்னிக்கவேண்டும்" என, ஐயர் "அவை யெம்மைத் துதித்தனவாகக் கொண்டோம்; தவமொழிக. விரைவில் மணம்புரிதும்" என மறுமாற்றங்கூறி மறைந்தருளினர். பார்வதியார் நிகழ்ந்தது கூற பர்வதராஜன் கேட்டுக்களிப்புற்றிருந் தான். சங்கரர் கயிலை சார்ந்து ஸப்த ருஷிகளை வருவித்து "மலையரயன் மகளை மணம் பேசுக" என, மாதவர் இமோற்கிரியுற்று மன்னனைக்கண்டு மகாதேவன் மனக்கருத்திசைப்ப, அவனங்கீகரிக்க அதனை அரன்பாலறைந்து அவரவரிடஞ்

சேர்ந்தனர். இமோற்கிரிராஜன் விச்சவகன்மனால் நகர் புனைவித்து விசேஷாலங் காரஞ்செய்து "பங்குனியுத்திரத்தினம் உத்தமத்தினமாதலின், உமையை மணஞ் செய்க" என விண்ணப்பித்தனன். பெருமான் திருநந்திதேவரை விளித்து "தேவர்கள் முதலானாரைத் தருக" என, நந்திதேவர் சிந்தித்தவளவில், கோடி யுருத்திரர்கள் - நூற்றுவருருத்திரர்கள் - கீழண்ட கடாகத்துள்ள காலாக்கினி யுருத்திரர் - கூர்மாண்டர் - ஆடகேசுரர் - திருமால் - பிரமன் - இந்திரன் முதலிய திக்குப்பாலர்கள் நவக்கிரகங்கள் - நவசித்தர்கள் - அஷ்டவசுக்கள் - ஸப்தருஷிகள் - யக்ஷ கிந்நர கருட காந்தருவர் முதலிய கணங்கள் - வேதாகமசாஸ்திரங்கள் - யுகாதி கால பேதங்கள் முதலிய யாவருங் குழுமிவந்து திருவாயிலடைந்து நந்தியெம் பெருமானைப் பணிந்தனர். பிரமன் பலரத்நாபரணங்களை முன் வைத்து அணியும்படி வேண்ட, பெருமான் 'அணிந்தாம்' என்று அவற்றைப் பரிசித்து அராக்கலனே பொற்பணியாகத் தோற்றுவித்து இடபவாகனத்தி லாரோகணித்துத் தேவர்கள் மலர்மாரி பெய்யவும், ஸ்ரீகணேஶர் - ஸ்கந்தர் - வீரபத்திரர் - வயிரவர் தத்தம் வாகனங்களில் வரவும், ஸப்தருஷிக ளாசீர்வதிக்கவும், பாநுகம்பன் ஆயிரம் வாய்களாற் சங்கத்தொனி செய்யவும், வாணாசுரன் சிவார்ச்சனை செய்த ஆயிரங்கரங்களாற் குடமுழவடிக்கவும், கணத்தலைவர்கள் பலவாத்தியங்களை முழக்கவும், திருநந்திதேவர் பொற்பிரம்பேந்தித் தேவமுநிவர்கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன் செல்லவும், இந்திரன் களாஞ்சியேந்தவும், ஈசானன் அடப்பை தாங்கவும், வாயு ஆலவட்டம் பணிமாறவும், அக்கினி தூபமேந்தவும், வருணன் பூரணகும்பமெடுக்கவும், நிருதி தர்ப்பணமேந்தவும், குபேரன் நவநிதிகள் சிந்தவும், யமன் கஞ்சுகத்தொழில்புரியவும், நாகராஜர்கள் மாணிக்கத்தீபமேந்தவும், வேதங்கள் திருவடியைச் சுமக்கவும், கங்கை காவிரி முதலிய நதிக்கன்னியர் சாமரையிரட்ட வும், குண்டோதரன் குடைபிடிக்கவும், பிரமவிஷ்ணுக்கள் இருபுரம் கைகுவித்து வரவும், ஸ்ரீசுந்தரேசப்பெருமான் திருவெண்ணீற்றுப் பெட்டகமுந் திருப்பள்ளித் தாமமு மெடுத்துக்காட்டவுமமைந்த சர்வாலங்காரத்துடன் இமாசலமடைந்து, திருவீதியிற் கண்ட மாதர்கள் காதல் கொள்ளும்படி திருவுலாப்போந்து, பர்வதராஜன் மனையையடைந்து, திருமால் கைலாகு கொடுக்க இடபவா கனத்தினின் றவரோகணித்தனர்.

பர்வதராஜன் பாரியாகிய மேனை அநேக மாங்கல்யமாதர் புடைசூழ ஆவின்பால்கொணர்ந்து ஐயனது திருவடித்தாமரையை விளக்கி நாணத்துடன் உட்சென்றனள். மன்றற் சடங்குகளை மலரோன்செய்தனன். சிவபெருமான் இரத்ன சிங்காதளத்தில் வீற்றிருந்தனர், அவரவர் தங்கட்குத் தக்க ஆதனத்திருந்தனர்.

[அப்பொழுது யாவரும் ஆண்டுக் கூடிநின்றதால், வடதிசை தாழ்ந்தது கண்டு, அத்தன் அகஸ்திய முனிவரை நோக்கி "நீர் ஒருவரே எமக்கொத்தவர்; நீர் தென்றிசையிலிருப்பின் உலகஞ் சமனாயிருக்கும்; உமக்குத் திருமணக்கோலங் காட்டுதும்" என, அகஸ்தியர் ஆணையைக் கடவாராய் இமாசலமகன்று வழியில் மாயை செய்த க்ரௌஞ்சனைச் சபித்து, வழிவிடாது நின்ற விந்தத்தை யடக்கி, வாதாவி வில்வலரைமாய்த்து, குற்றாலத்துள்ள திருமாலைப் பெருமான் வடிவாக்கிப் பொதியமலை சேர்ந்து சிவத்தியானத்திருந்து பின்னொருகாலத்தில்

திருமணக்கோலத்தைத் திருவருளால் தரிசித்தனர். இதுநிற்க. அகஸ்திய ரகன்றபின் உலகு உயர்வு தாழ்வின்றி யிருந்தது.]

அம்மையார் பலவகையாகிய ஆடையாபரணங்களை யலங்கரிக்கப் பெற்றவராய் அநேகர் தோழியர் புடைசூழ, புராரியை வந்து பணிய மாதேவன் "மாதே! பக்கலிரு" என, இருவரும் ஏகாசனத்திருந்தனர். மேனை யருகிருக்கப் பர்வதராஜன் பரமன் பாதத்தைப் பூசித்து, பார்ப்பதி கையைப் பரமேச்சுரன் திருக்கரத் திற்கொடுத்தனன். சிவபெருமான் திருமாங்கல்யந்தரித்து மணவினை முடித்தனர். இரதி தன் கணவனைப்பெற அது ததியிற் கண்ணுதலைப் பணிய, அண்ணல் தமதெண்ணத்தில், காமனைக் கருத, அவன் முன் தோன்றினன். முன்னோன் "உன் மனைவிக்கு மட்டும் உருக்கொண்டு அகிலத்திற்கெல்லாம் அரூபியாயிருத்தி" என்றருளிச்செய்து அங்கிருந்து தேவியாருடன் திருக்கயிலாயகிரியை யடைந்து தேவர்களை விடைகொடுத்தனுப்பி வீற்றிருந்தனர்.

பார்ப்பதியாரை மணஞ்செய்ய, சிவபெருமான் எழுந்தருளிய திருக்கோலமே கல்யாணஸுந்தரமெனப்படும்.

**கல்யாணஸுந்தரமூர்த்தயே நம:**

---

## அர்த்தநாரீசுவர மூர்த்தி.



### இருபத்திரண்டாவது

# அர்த்தநாரீசுவர மூர்த்தி.

திருக்கயிலாயகிரியிற் பக்தாநுக்ரஹ காரணமாகச் சிவபிரான் திருவோலக்க முற்றிருந்தனர். திருமால் - பிரமன் - இந்திராதி திக்குப்பாலகர் - அஷ்டவசுக்கள் ஸப்தருஷிகள் - நவசித்தர்கள் கிந்நர கிம்புருஷ யக்ஷ வித்யாதராதி அஷ்டாதசகணங்கள் - துவாதசாதித்தர்முதலிய கிரகங்கள் - இன்னும் இமையவர் யாவரும் சிவபிரானைத் தரிசிக்கும்படி திருக்கயிலாயகிரியை யடைந்து, ஆங்கு முதற்பெருங்காவலாயுள்ள திருநந்திதேவரைப்பணிந்து, அவர் திருவருள் பெற்றவராய் முறைமுறையே அவர் விடுப்ப மகாசந்நிதானத்தினுட் சென்று இருகண்களார எம்பெருமானையும் இறைவியாரையுந் தரிசித்து அஷ்டாங்க பஞ்சாங்கமாகப்பணிந்து இருவரையும் பிரதக்ஷிணஞ்செய்து தமது குறைகளைச் சொல்லி யாசித்து, அவ்விருவராலும் அநுக்கிரகித்த வரங்களைப் பெற்று வருகையில், ருஷிசிரேஷ்டர்களி லொருவராகிய ப்ருங்கிருஷியானவர் பார்வதி தேவியாரைப் பணியாமற் சிவபெருமானை மாத்திரம் பணிந்து பலவகையாகப் பாடிப்புகழ்ந்து நிற்பதுகண்ட இமையவல்லி, இம்முலிவன்யாவன்? எம்மைச்சிறிதும் மதித்திலன்? என்று முனிந்து, சக்தியாகிய தனது கூறாகவுள்ள உதிரமாம்சங்களை அவருடலிற் சிறிதுமின்றி ஆக்ராணித்துக்கொள்ள, அவர் சிவகூறாகவுள்ள என்பையும் நரம்பையுமே உட்கொண்ட தோற்பதுமை போலத் தள்ளாடி நின்று தம்மைப் பிரார்த்தித்தது கண்ட தாணு மனந்தரியாராகி ஓர்காலையுதவ, ப்ருங்கிமுநி களித்து மூன்றுகாலுடன் முன்னின்று கூத்தாடிப் பல வகையாகப் பாடிச்சென்றனர்.

கவுரியம்மையார், கனவருத்தமுற்றுக் கடுகியெழுந்து கணவராகிய கண்ணுதலை நமஸ்கரித்து "எம்பெருமானே! எளியேன் தவமிழைக்க எண்ணினேன். ஏழையேற்கு இன்னருள்புரிய வேண்டும்" என்று விண்ணப்பித்து விடைபெற்றுத் திருக்கயிலையை நீங்கி ஐங்கரக்கடவுள் அறுமுகக்கடவுள் ஸப்தமாதர் முதலானோர் தம்மைப்புடைசூழ்ந்துநிற்க, ஓர் மலைச்சாரலில், எழுத்தூணின் மேல் நின்று எண்ணற்கு மருந்தவத்தை எண்ணில்லாக்கால மியற்றினர்.

சிவபெருமான் உமாதேவியார் தவத்திற்கிரங்கித் திருவருள் புரியத் திருவுளங் கொண்டு இடபவாகனரூடராய், சமஸ்த தேவர்களுந் தம்மைப் புடைசூழ்ந்து வரவும், சர்வவாத்தியங்களு மொலிக்கவும், வேதங்கள் கோஷிக்கவும், மலைச்சாரலை யடைந்து எமதன்னையாகிய ஈசுவரியின் தவச்செயலைக் கண்டு சந்தோஷித்துக் காட்சி தர, தேவியார் திருக்கண்களாற் றரிசித்து விழியினின்றும் ஆனந்த பாஷ்பஞ் சிந்த அடியற்ற மரம் போலச் சாஷ்டாங்கமாகத் தரைமேல் விழுந்து பணிந்தனர். மாதேவர் மனக்களிப்புமிக்கவராய் "மாதே! யாது வரம் வேண்டும்?' என வினாவ, மலைமகள் மணவாளனை வணங்கி "வள்ளலே! தேவரீர்வேறும் அடியேன் வேறுமாகவிருப்பதில் விருப்பற்றேன். வாமபாகத்தில் அடியாள் கலந்திருக்க வேண்டும்" என சிவபெருமான் அவ்வாறே தமது திருமேனியில் வாமபாகத்தை அம்மையாருக்கருள் செய்து இடபாரூடராகித் தேவியாருடன் திருக்கயிலாயகிரியை

யடைந்தனர். பாதிசரீரம் பாதிசரீரம் வாமபாகத்திற் பார்வதியாரும், பாதிசரீரம் வலப்பாகத்திற் சிவபெருமானுமாக வீற்றிருக்குந் திருக்கோலமே அர்த்தநாரீசுவர மெனப்படும்.

**காஞ்சிபுராணம்.**

"*உமையுந் தானும் வேறன்மை யுருவி னிடத்துத் தெளிப்பான்போல்*
*இமைய மயிலை யொருபாதி வடிவி னிறுவி நாற்கரத்து*
*மமைய வனசந் திரிசூல மபய வரத மிவைதாங்கி*
*நமையு முய்யக் கொண்டருளு நாரி பாகன் றிருவுருவம்.*"

**அர்த்தநாரீஸ்வரமூர்த்தயே நம:**

---

### இருபத்து மூன்றாவது

# கஜயுத்த மூர்த்தி.

காளமேகம் போன்ற கரிய சரீரத்தையுடைய கயாசுரனென்னும் யானை வடிவேற்ற . அசுரன் மேருபர்வதத்தின் மேல், பிரமதேவனை நோக்கி அருமையாகிய பெருந்தவம் அநேககாலஞ்செய்தனன் . கயாசுரன் செய்த கடுந்தவத்திற்களி கூர்ந்த கமலயோனி அவன் கண்கட்குப் பிரத்தியட்சமாகி "அசுரேச! நீயவாவியவரம் யாது? அறைக" என, அசுரன் அருந்தவ நீங்கி அடிமலர்பரவி "ஐயனே! இறப்பில்லாத் தீர்க்காயுவும் வல்லமையும் வெற்றியும் அடையும்படி அடியேனுக்கு அனுக்கிரகிக்க வேண்டும்" என வேண்ட, பிரமன் சிறுநகை செய்து "விரும்பியவாறே வரமீந்தேனாயினும், அந்திவண்ணனை யெதிர்ப்பாயாகில் அப்பொழுதே நீபெற்ற பேறழியும் " என்றருளி அந்தர்த்தானமாயினன்.

கயாசுரன் களிகொண்டு, சதுமுகன் தனக்குத் தந்தவரத்தைச் சிந்தனை செய்து, சிவன் பேரிற் செருச்செயச் செல்லாமல் மற்றைய வானவரை வஞ்சித்து வம்பிழுத்து வலிய போர்புரிந்து உலகத்துள்ளாரை ஒழிப்போமென் றுறுதி கொண்டு உடனே துண்ணெனச் சென்று உம்பருலகுற்று, மகபதியை யெதிர்த்து யுத்தஞ்செய்து வருத்தினன். புலோமசைகணவன் போர்புரியவாற்றானாய்ப் புறமுதுகிட்டோட, அவன் வாகனமாகிய ஐராவதத்தின்வாலைப்பற்றிப் பன்முறை சுழற்றி யெறிந்து, காமதேனு கற்பக விருட்சம் சங்கநிதி பதுமநிதி முதலிய வளங்களையுடைய அமராவதி நகரையழித்து, அக்கினி யமன் நிருதி முதலிய அட்டதிக்குப்பாலகரைச் செயித்து, தனது குலத்தவர்களாயுள்ள தானவர்களையுஞ் சாடி, இராக்கதரை ஹிம்சித்து, மண்ணுலகெங்கும் வதிந்து மானவர்களை மாய்த்து விஷம் போல விளங்கக்கண்ட அருந்தவர் சிலர் அம்பிகாபதி யமர்ந்த அவிமுக்தமாகிய காசியை யடைந்தனர். கயாசுரன் கடுஞ் சினங்கொண்டு தொடர்ந்து பின்வர, சங்கரா சம்போவென்னுஞ் சிவத்தியானத்துடன், மகாதேவனே யாணென்று மணிகன்னிகை யாகிய அருகிருக்கும் ஆலயத்துளடைந்து அரன் முன்னின்று, "அருட்பெருங்கடலே! ஆபத்திற்புணையே! ஆநந்தவெள்ளமே! அடியேங்க ளடைக்கலம் யானை யுருவாக எய்தும் இராக்கத விறைவனால் இறவாவண்ணம் எங்களைக்காத்து இன்னருள் புரியவேண்டும்" என்றிரந்தனர். தான் துரத்திக் கொண்டு வந்த மாநுடர் மணிகன்னிகைச் சந்நிதியில் வருந்தி வாய்விண்டு வழுத்துவது கேட்டு, கயாசுரன் ஆலயத்திருவாயிலை யடைந்து அவர்களஞ்சும்படி இடிபோற்கர்ச்சித்துப் பயமுறுத்த, மாந்தர்கள் மணிகண்டரைத் தழுவிக்கொண்டனர். அரவாபரணர் "அஞ்சாதீர்கள்" என்றபயங்கூறி, அண்டகடாக முட்டும் முடியுடன் ஆயிரங்கோடி யருணோதய மாயினாற்போல, அமரருமுநிவரு மஞ்சிக் கண்பொத்த உக்கிரப்பெரு வடிவுற்றுக் கயாசுரன் முன்வர, கயன் தன்பால் வந்தவர் தாணுவென்றுணர்ந்தும் தனக்குள்ள விறுமாப்பாற் சதுமுகன் வரந்தரு கையிற் சாற்றிய வசனத்தை மறந்து எதிருறத் தலைப்பட்டனன்.

சங்கரன் வடவாமுகாக்கினியும் அஞ்சத்தக்க தீப்பொறியை விழிவழிசிதறி, திருவடியா லுதைத்துத்தள்ள, கயாசுரன் கவிழ்ந்து பதைத்துப் பார்மேல் விழ, திருவடி மற்றொன்றாற் சிரத்தை மிதித்துத் தொடையிலூன்றித் திருநகங்களாற் பிளந்து நான்கு கால்களும் இருபக்கங்களிற் பொருந்தவும், உதிரஞ்சிந்தவும், ஒலமிட்டழவும், அசுரர்குலத் துதித்த யானை வடிவாகிய கயாசுரன் தோலை உமையம்மையு மஞ்சும்படி உரித்திழுக்க, ஈச்சுரனது இணையிலாத சோதியுருவைத் தரிசித்த சுரர் முதலானார் கண்ணொளிமழுங்கித் துன்புற்றனர். கண்ணுதல் கருணை செய்யும்படி களிற்றுரியை உடலின் மேல் உத்தரியமாகப் போர்த்தனர். அமரர் களித்து ஆனந்தக்கூத்தாடி மலர்மாரி வருஷித்தனர். சிவபெருமான் மணிகன்னிகை யடைந்தனர். கயாசுரனுக்கஞ்சிய பரிசனர் களித்துப் புறம்போந்தனர். காசிவாணர் முதலான காசினியோர் கடவுட்பூசை காலம் வழாதியற்றிக் களித்து வாழ்ந்தனர்.

கயாசுரனாகிய யானையைத் தேவமானவர் துயர் தீர்த்தற் பொருட்டுப் போர்புரிந்து சங்கரித்தமையால், கருணாநிதிக்குக் கஜயுத்தமூர்த்தி யென்பதோர் பெயர் வழங்குகின்றது.

**கந்தபுராணம் - ததீசியுத்தரப்படலம்.**

"*மதித்து வேழமாந் தானவன் வருதலும் வடவை*
*யுதித்த வன்னியு மச்சுற வெரிவிழித் தொருதன்*
*கதித்த தாள்கொடு தள்ளவே கயாசுரன் கவிழ்ந்து*
*பதைத்து வீழ்தலு மிதித்தனன் சிரத்தையோர் பதத்தால்.*

*ஒருப தத்தினைக் கவானுறு திருக்கரத் துகிரால்*
*வெரிநி டைப்பிளந் தீரிரு தாள்புடை மேவக்*
*குருதி கக்கியே யோலிட வவுணர்தங் குலத்துக்*
*கரியு ரித்தனன் கண்டுநின் றம்மையுங் கலங்க.*

*ஐயன் மிக்க தன் கதிரினைக் குருதி நீரறாத*
*மையல் யானை வன் றோலைமேற் கொண்டனன் மறைத்தான்*
*செய்ய கோளொடு கரியகோ ளிருவருஞ் செறிந்து*
*வெய்ய பானுவி னடுவுறக் கவர்ந்துமே வியபோல்.*"

**கஜயுத்தமூர்த்தயே நம:**

### இருபத்து நான்காவது

# ஜ்வராபக்த மூர்த்தி.

சிவப்பிரசாதம் பெற்ற மாபெலிச் சக்கிரவர்த்தியின் மகனாகிய ஆயிரங்கை களையுடைய வாணாசுரன் சுப்பிரதீபிகை யென்பவளை மணந்து நருமதை நதிக்கரையிற் சிவலிங்கக்குறிகள் நாளொன்றிற் காயிரமாக அருச்சனை செய்து வருகையில் ஒருநாள் சிவபெருமான் பிரத்யக்ஷமாகி "என்ன வரம் வேண்டும்" என்று வினாவ, வாணன் மகிழ்ந்து, "அடிகளே! அக்கிநி மதிலும், அவனிமுழுவதும் அரசு புரியும் ஆற்றலும், அழியாமையும், தேவரீரது அடித்தாமரையில் அன்பும் அவாவினேன்" என, அரவாபரணர் அவ்வாறே அநுக்கிரகித்து அந்தர்த்தானமாயினர். வாணாசுரன் வையகமுழுதுங் கையகப்படுத்தி சோணிதபுரியில் அரசுசெய்து வாழ்ந்து வருகையில், ஒருநாள் கருணாநிதியைத் தரிசிக்கக் கயிலாயமடைந்தனன். அது சமயம் அருள்வள்ளல் நடிக்குத் ததியாயிருத்தலின், தனது ஆயிரங்கைகளாலுங் குடமுழவு வாசிக்க, மாது பங்கன் களித்து "யாது வரம்வேண்டும் ஓதுக" என, அசுரன் அண்ணலே! அடியேன் திருக்கயிலாயகிரியில் வந்து திருநந்திதேவர் பிரம்படிபட்டுச் சலியாமல், கஜமுக ஷண்முக பார்வதி சமேதராய்த் தேவரீர் அநவரதம் அடியேன் மாளிகையிற் காட்சி கொடுத்து வீற்றிருக்க வேண்டும்" எனக் கழற, பெருமான் "அவ்வாறே யாகுக" வென்று சோணிதபுரமுற்று வாணன் மாளிகையில் வாழ்ந்திருந்தனர்.

இவ்வாறிருக்கிறபொழுது வாணன், இந்திரன் முதலிய வெண்டிசைக் கிறைவர் - திசைமுகன் - திருமால் முதலிய தேவர் குழுவுடன் எதிர்த்துப் போர்செய, ஒருவரு மாற்றாமல் ஓடிப்போனமையால் மமதை மிக்கவனாய் மகாதேவனை நண்ணி "அண்ணலே! அடியேனுடன் அமர்செய்வோர் அகி லத்தில்லாமையால், தோள்கள் தினவுற்றன. சிறிது செருச்செய்யத் திருவுள்ளங் கொள்ள வேண்டும்" என சிவபிரான் புன்சிரிப்பு கொண்டு, சிறிது மஞ்சாமல் இவ்வாறு கூறியதை யெண்ணி "கண்ணன் துவாரகையி லிருந்து வந்து உன் தோள் தினவு தீர்த்து அவற்றை விரைவிற் சங்கரிப்பான்" என, வாணன் "இருபதுதரம் எதிர்த்தோடிய இக்கிருஷ்ணனா என்னைச் செயிக்க வல்லவன்?" என, உலகநாதன் "உனக்குத் தோற்றபின் உபமந்யுமுநிவனிடம் தீக்ஷை பெற்று இடைவிடாது எம்மை யருச்சித்து உன்னை விட மேலாகிய உரைத்தற்கரிய வலி பெற்றுள்ளான்" என, "அச்சமர் எப்பொழுது வரும்' என, மகள் மேல் பழிவரும்; உன் மயூரத்துவஜம் துணியும்; அதுவே போரெய்துங்காலம்" என்றறைய, வாணன் தன் மாளிகை சேர்ந்து வசித்திருந்தான்.

ஒருநாள் வாணன் மகள் உஷை யென்பவள் துயிலுகையில், கண்ணன் பௌத்திரனாகிய அநிருத்தன் கலந்ததாகக் கனவுகண்டு கண்விழித்துக் காணாமல் மோகாக்கிர சித்தமுடையவளாய், சித்திரலேகை யென்னுந் தோழி எழுதிக்காட்டிய சித்திரப்படங்களால் அம்மன்னவனைக் குறிப்பித்து அத்தோழியால் துவாரகையிற் சயனித்திருந்த அதிருத்தனை மஞ்சத்துடன் வருவித்து நெஞ்சங்களித்து இன்பம் நுகர்ந்திருந்தாள். உஷை சிறிது நாளிற் கருப்பங்கொண்டனள். தோழியரா

லஃதுணர்ந்த வாணன் அநிருத்தனைச் சிறையிட்டான். அதற்காக உஷை மனம் வருந்தினாள். வாணன் மாளிகையிலுள்ள மயூரத்துவஜம் அன்று ஒடிந்தது. அவற்றையெல்லாம் அறிந்த நாரதமுநிவர் துவாரகை சென்று கண்ணனுடன் கூறினர். மனவருத்தமுற்ற கண்ணன் எண்ணிலாதசேனையை இமைப்பொழுதிற் கூட்டிக்கொண்டு போர்க்கோலமாய்ச் சோணிதபுரத்தை யடைந்தனன்.

முதல் வாயிலில் மூத்தபிள்ளையார் வீற்றிருக்கக்கண்டு கனிவர்க்கம் - பாலுணவு - பலகாரவகைகள் இவற்றை நிவேதித்து ஐங்கரக்குரிசிலை அகமகிழச் செய்து, இரண்டாம் வாயிலில் இளைய பிள்ளையார் எழுந்தருளி யிருக்கக்கண்டு பலவகையாகப் பூசித்து விடைபெற்று, மூன்றாவதில் வசித்திருக்கும் உமாதேவியாரைக் கண்டுபணிந்து உட்செல்லுகையில், சிவபெருமான் முன்னொரு காலத்தில் மைநாககிரியில் தவஞ்செய்து கொண்டிருந்த திருமாலுக்கு "யானே எதிர்த்தாலும் நீ ஜெயிக்கக் கடவாய்' என்று கொடுத்தவரத்தைப் பாதுகாக்கும்படி தனது பிநாகமாகிய வில்லை ஏந்தி நிற்கக்கண்டு சிவகாமங்களைப்பாடி "எளியேனைக் காத்தருள வேண்டும்" என்று வணங்க, நிமலர் "நீயெம்மை வென்றன்றோ வாணனை யெதிர்க்கலாம்" என விநோதமாகக் கூறினர்.

சர்வாண்டங்களையும் க்ஷணத்திற் சாம்பலாக்கும் சங்கரா! புன்னகையாற் புரம் பொடித்த புண்ணியா! துரும்பொன்றால் தேவர் செருக்கைத் தொலைத்தோய்! கருப்புவில்லைக் கணமொன்றிற் காய்ந்த கண்ணுதலே! மறலியின் மமதைமாய்த்த மலரடியாய்! உந்தி வந்தோன் சிரங்கொய்த உகிருடையாய்! மச்சம் - கூர்மம் - வராகம் - நாரசிங்கம் - வாமனவடிவங்களாக வந்த எனது வலிமாய்த்து, கண் - ஓடு - கொம்பு - தோல் - என்பு இவற்றைக் கொண்ட இறைவா! தக்கனைத்தடிந்தோய்! சரணம் சரணம். உற்றுப்பார்த்தால் ஒழியும். எனக்கு ஓராயுதமும் எடுக்கவேண்டுமோ? அம்பும் - வாகனமும் - அடிமையும் - மனைவியுமாகவுள்ள என்னையும் எதிர்க்கலாகுமோ? என்று பலவகையாகத் தோத்திரஞ்செய்து பணிந்து பன்னகசயனைப் பரமன்பார்த்து "விண்டுவே! எம்மைக் கண்டு எட்டுணையு மஞ்சவேண்டாம். உனது வருகையை வாணனுக்கு முன்னரே உரைத்துள்ளோம். அவனைச்செயித்து வெற்றிமாலை தரிக்கக்கடவாய். நீயெம் மோடெதிர்த்தால் முருகன் விளையாட்டுப்போல நினைப்போம். தேவர்கள் வேடிக்கை பார்க்கும்படியா யிருவருஞ் சிறிது நேரம் செருச்செய்வோம். பகைமையாக யுத்தஞ்செய்யேம் : பயப்பட வேண்டாம்" என்று பலவகையாகத்தேற்றி, கண்ணுதல் கையிலேந்திய பிநாகம் என்னும் வில்லைவளைத்து நாணேற்ற, நாரணன் "நாதனே! நாயேனைக்காக்க" வென்று தனது சாரங்கம் என்னும் வில்லை நாணேற்றினன்.

பவளமலையுடன் நீலமலை யெதிர்த்தாற் போலநின்று இருவருஞ் செய்த நாணொலி திரிலோகத்திலிருந்த தேவர் - மானவர் - நாகர்களைச்செவிடுபடுத்தியது. உலக நடுங்கியது. தாமோதரன் சங்கரனை மீண்டும் வணங்கி, சம்பு என்று தியானித்து அருச்சனையாக ஓர் கணையை விடுத்தனன். இருவருஞ் சமர் தொடங்கிச் சொரிந்த அஸ்திரவருஷங்களை அளவிட்டுச் சொல்ல ஆயிரநாவையுடைய ஆதிசேடனுக்கும் ஆகாதென்றால், யானோ அதை அளவுபடுத்திச் சொல்ல வல்லவன். யுகாந்தகாலத்திற் சப்தமேகங்களும் ஒன்று கூடி

வருஷித்த தன்மையாயிருந்தது. இதுகண்ட இமையவர் எம் பெருமானது திருவுள்ளக்குறிப்பு இஃதென் றுணராமல், இறைவரே எதிர்த்தனர். இனியென்ன விபரீதங்க ளெய்துமோவென்றெண்ணித் திகைத்திருந்தனர். இத்தகைய கடும்போர் எண்ணில் காலஞ்செய்கையில், கண்ணன் கண்ணுதலைப்பணிந்து "அண்ணலே! அமர்புரிய இனி ஆற்றகில்லேன்" என்றடிபறடிபணிய, அடியார்க்கனுகூலராகிய அம்பிகாபதி அச்சமரில் அச்சுதனுக்குச் செயமளித்து * அப்பாற்பட்டனர்.

---

* அண்ணல் கண்ணனுடன் அமராக்குகையில் அஞ்சினார் போல அகன்றது அதிசயமன்று. " விஷவ்ருக்ஷோபி ஸம்வ்ருத் யஸ்வயம் தேசத்து மசாம்பிரதம்" என்றபடியே நச்சுமரமாயிருப்பினும் தன்கையால் வளர்த்துத் தானே சங்கரித்தல் தகாதெனக் கருதி, "தோள் தினவு தீரவேண்டும்" என்ற வாணனுக்கும் மைநாக மலையிற் றவஞ்செய்த விண்டுவுக்கும், திருவாய்மலர்ந்தருளியவற்றை நிறைவேற்ற லீலாமாத்திரையாய் அடியர் பக்திக் ககமகிழும் அருள் வள்ளலாதலின், அச்சுதன் ஜெயமுற நடித்துக்காட்டியதன்றி உள்ளபடியே ஓடியதன்று.

அவ்வாறு நடிக்காவிடில் விண்டு தன்னை நோக்கித் தவஞ்செய்த பொழுது மகுடாபிஷேகஞ் செய்வித்துத் தானேயெதிர்ப்பினுஞ் செயிக்கும்படி கொடுத்தவரம் அவலமாகும். அன்றியும் சிவப்பிரசாதமாகிய தனது வல்லமையைத் தற்செயலாகக்கருதி இறுமாந்த வாணன் கண்ணனையெதிர்க்க நேராது: அதனால் அவன் தோள்கள் சங்கரிக்கப்படா. இதுநிற்க.

அவதார கோலமல்லாத ஆதிவிஷ்ணுவே தன்னொடு சண்டை செய்தற்கஞ்சி, பிருகுமுநிவன் மனைவிபால் அடைக்கலம்புக்க அவுணரைக்கொல்ல ஸ்திரீஹத்தி தேடிக்கொண்டு முநிவர் முனிந்து சபிக்கப் பத்துப்பிறவிகள் அடைந்ததையும், சிவகணத்தலைவருள் ஒருவனாகிய ஸங்குகர்ணனுக்குத் திருமாலுக்கும் நிகழ்ந்த யத்தத்தில் "ஸங்குகர்ண கணேஸேந பிந்நஸ்தேகேஸஸ௦ஸய" என்னும் ஸ்காந்த புராணத்தின்படி, அவனாற் சிகையை யறுத்து விடப்பட்டதையும், ததீசிமுநிவருடன் சண்டை செய்கையிற் சக்கரத்தின் கூர்வாய் மழுங்கி அவருடலினின் றுதித்த அளவில்லா விஷ்ணு மூர்த்திகளைக்கண்டு மூர்ச்சித்தரெனக் கூறும் பாத்ம ஸ்காந்தபுராணங்களையும், அவர் மைந்தர்களிற் பிரமனைச் சிரங்கொய்கையிலும், மதனனைச் சாம்பராக்குகையிலும் என்ன செய்தன ரென்பதையும், தக்ஷயாகத்திற் சங்கடப்பட்டதையும், இந்திரன் செல்லுருக்கொண்டு அவரேந்தியவில்லின் நாணைக்கறிக்க விழுந்ததையும், எண்ணிப் பார்ப்போமாக. இத்தியாதி நியாயத்தால், பலவா றவமதிப் பூண்ட திருமாலின்' கரியரோமமாகிய கண்ணனுக்கஞ்சிச் சிவபிரான் ஓடினார் என்பதைப் பூர்வபக்ஷஞ் செய்து, அவ்வாறு நடித்துக் காட்டினாரென்று சித்தாந்தமாக்குக,

---

திருமால் சிவபெருமானது கருணையை வியந்து நிற்கையில், வாணன் கடுங்கோபங்கொண்டு ஆரவாரித்து ஆயுதங்களைத் தாங்கிய அநேகமாகிய அவுணர்

சேனையுடன் அமர்க்கோலங்கொண்டெதிர்க்க இருதிறத்தவருக்கும் பெரும்போர் நிகழ்ந்தது. இச்சமரில் கிருஷ்ணமூர்த்திக்குச் சிவா நுக்கிரக மேலீட்டால் வலிமிகுந்திருத்தலின் வாணன் புயங்களை ஒவ்வொன்றாகக் கண்டிக்கையில், நம்பர் “நம்மை யர்ச்சித்த இருகரங்களிருக்க" என, யாதவசிரேஷ்டன் மாதுபாகனால் வாய்மலர்ந்தருளியவண்ணம் ஏனையகரங்களை யிமைப்பிற் சங்கரித்தனன். பிறகு சிவபெருமான் "வாண! உன் தோளிலிருந்த தினவு நீங்கியதா! " என்று வினாவ, வாணன் “அடியேன் அறியாமையாலறைந்ததைப் பொறுத்தருளவேண்டும்” என வேண்டினன். சிவாக்கினைப்படி வாணன் தன்மகள் உஷையை அநிருத்தனுக்கு மணம்புணர்த்திக் கண்ணனோடு துவாரகாபுரிக்கனுப்பிவிட்டு, சிவப்பிரசாதத்தாற் பழையபடி ஆயிரம் அத்தங்களும் அமையப்பெற்றுத் திருக்கயிலாயகிரியிற் குடமுழா வெடுக்கும் பாக்கியம் பெற்றனன்.

சிவபிரானுந் திருமாலும் வாணன் மாளிகையில் விநோதாயுத்தஞ் செய்கையில் "படர் குறிப்பொடு வெம்பிணி படைத்தெதிர் விடுப்பார்" என்றபடி சிவபிரான் பேரில் கண்ணன் பிரயோகித்த சீதளசுரத்தைத் தணிக்கும்படி "மூன்று சிரங்கர நாலு கொடுங்கனல் முதிர்விழி யொன்பதுடன் - றோன்றி யடும்படை பூத பசாசுகள்சுற்றியுறக்கடுவே - கான்று கொளும்புகை யோடனல் வீசிய காலுற வேயுலக - மீன்றவன் முன்னுல கெங்கு “நடுங்க வெழுந்தது பரசு பதம்" என்றபடியே சிவபெருமான் ஏவிய உஷ்ணசுரமானது மூன்றுசிரம் - நான்கு கரம் - ஒன்பது விழி - மூன்று கால்களுடன் சென்று கண்ணன் விடுத்த சீதள சுரத்தைக் கணத்தில் மாய்த்தது. தீராச்சுரமுற்றோர் அத்திருவுருவத்தைப் பணியின், சூரியன் முன்பனி போல விலகிச்சுகமுறுவர். விஷ்ணுவிடுத்தசுரத்தின் வீறு போக்கினமையால் சிவபிரான் ஜ்வராபக்க மூர்த்தியெனப்பெயருற்றனர்.

**பாகவதம் - தாமஸ்கந்தம்.**

*தோஸ்ஸஹஸ்ரமத்வயாதத்தம் வரம்பாராயமேபவத்*
*த்ரைலோக்யம்ப்ரதியோத்தாரம் நலேபேத்வத்ருதேஸமம்,*
*கண்டுத்யநிர்வ்ருதைர்தோர்பிர் யுயுத்ஸுர்திக்கஜாகஹ*
*அப்யயாசூர்ணயந்நர்த்ரீந்பீதாஸ்தேவிப்ரதுருவ:*
*தச்ச்ருத்வாபகவாந்ருத்த: கேதுஸ்தேபஜ்யதேயதா,*
*த்வத்தர்பக்நோபவேந்மூட ஸம்யுகேமத்ஸ்மேந்தே*
*இத்யுக்த: குமதிர்ஹ்ருஷ்ட: ஸ்வக்ருஹம்ப்ராவிபார்க்ருப -*
*சித்சேதபகவான்பாஹூந்ஶாகா இவ்வநஸ்பதே:*
*பாணோபிப்ரதிபத்யாத மைத்ரேயாஹத்ரிலோசனம்*
*தேவபாஹுஸஹஸ்ரேண நிர்விண்ணோஸ்ம்யாஹவம்விநா*
*கஶ்சிந்மமைஷோபாஹூநாம் ஸாபல்யஜாசாரண:*
*பவிஷ்யதிவிநாயுத்தம் பாராயமமகிம்புஜை:*
*ஶங்கர:-மயூரத்வஜபங்கஸ்தே யதாபாணபவிஷ்யதி*
*பிஶிதாஶிஜநாநந்தம் ப்ராப்ஸ்யஸேத்வம்ததாரணம்.*

**உமாஸம்ஹிதை.**

*ஸ்ரீதேவி - த்வத்தோவிஸிஷ்டபாவஸ்து விஷ்ணோஸம்ப்ரதிபத்யதே*
*தமேதத்தயாந்தோ க்ருபயாவதஸுவ்ரத்*
*ஶ்ருணுதேவிப்ரவக்ஷ்யாமி விஷ்ணோராதிக்யதாம்ப்ரதி*
*புராகதாசித்தேவேரி பரமாநந்தகாநநே*
*க்ரீடாஸக்தேமவிபுரா விஶ்வமேததநாயகம்,*
*உபத்ருஷ்டம்ஸதாதுஷ்டைர்வேதவாதபஹிஷ்க்ருதை:*
*ஸ்வாஹாஸ்வதாவஷட்கார ரஹிதேகர்மவர்ஜிதே*
*ப்ரஹ்மணஜ்ஞாதவ்ருத்தாந்த: கார்யஶேஷமசிந்தயத் .*
*சக்ரபாணிஸெமாஹூய ரத்நஸிம்ஹாஸநேஶுபே*
*அபிஷேச்யவரந்தத்வா ப்ரணாமம்கரவம்பிரியே*
*ஸ்ருஷ்டிஸ்திதிவிநாஶநாம் கர்த்ருத்வமகுதோபயம்*
*ஸர்வஜ்ஞதாதிஸித்திஞ்ச தத்தவாநஸ்மிவிஷ்ணவே*
*மத்தோதிகோபவாந்ராஜா பவவிஷ்ணோமஹரப்ரபோ*
*இதிதத்தவர:பூர்வம் வாரணஸ்யாம்ஹரி:புரா*
*இதிஜ்ஞாத்வாகவிப்ராஹ மேநிரேப்யதிகம்ஹரிம்.*

**ஜ்வராபக்நமூர்த்தயே நம:**

### இருபத்தைந்தாவது

# சார்த்தூலஹர மூர்த்தி.

சமஸ்தலோக காரணபூதராகிய பரமேசுவரன் கட்டளைப்படி திருமால் மோகினியுருவேற்றுத் தாருவதமுநிவர் தவத்தை யழித்தும் பெருமானே பிக்ஷாடநத் திருவுருக்கொண்டு அம்முநிபத்தினிகளின் கற்பை யொழித்தும் நகரிற் புறம்போந்த போது, பெருமான்பக்கலிற்சேர்ந்த திருமால் பெண்ணுரு நீங்கினர். அப்பொழுது அயன் முதலிய அமரர் ஆண்டடைந்து வணங்கினர். அவற்றையெல்லாம் நன்குணர்ந்துள்ள தாருவநமுநிவர் ஓர் வேள்வி செய்தரனை யழிப்போமென்று அபிசாரஹோமமியற்ற, அவ்வக்கினியில் நினைத்தற்கு மரியவுருவும் இடிமுழக் கனைய வெடிபடு தொனியும், பெரியவாயும், வளைவாகிய பற்களும், கூர்மை வாய்ந்த நகமும், தீப்பொறிசிந்துஞ் சிவந்தவிழியும் அஞ்சாமையுமுடைய புலி யொன்று அதிகரித்த கோபத்துடன் தோன்றியது. முநிவர் வல்லியத்தை நோக்கி முக்கணானை முடிக்க என விடுக்க, அது விடையூர்தியைத்தேடி விரைந்து வருகையில் உலகினர் அச்சுறவோடி வரும் உழுவையை உம்பர்பெருமான் எதிர்சென்று பற்றிச் சங்கரித்துத் தமதருமைத் திருமேனியில் அதன் சருமத்தை யாடையாக வணிந்தனர்.

வல்லியம் வலியிழந்து வஸ்திரமானபின், எவற்றையுமழிக்கும் இணையில் லாக் கணிச்சியொன்று, எரியிலிருந்து பிறக்க, அந்தணர் ஐயன்மேல் விடுப்ப, அ்.து எதிர்வர, சங்கரன் றனது கெங்கையிற் பற்றி இங்கொரு படையாயிருவென விசைத்தனன், மீண்டும் ஓர் மான் உற்பவித்தது. அதனை மகாதேவன் மேற்போக்க அதுசராசரமெல்லாமழியும்படி இரைச்சலிட்டு அந்தரமார்க்கமா யெழுந்துவரக்கண்ட அரன் அதெனொலியால் உயிர்கள் வருந்தாது கிருபை புரிந்து இடக்கரத் தேற்று "ஈண்டிருந்தினி திரைக ” எனப் பணித்தனர். அதன்மேல் சர்ப்பங்கள் பிறந்தன. அவற்றைச் செலுத்த, சம்புசரீரத்திற் பணியாக அப்பணிகளை யணிந்தனர். பூதவெள்ளம் தோன்றின. ஆதிநாதன்மேல் ஏவினர். மாதுபாகர் வருகென விளித்து "நமது சேனையாய் நாளுமிருத்திர் " என நன்கருளினர். ஒரு வெண்டலை உலகழியச் சிரித்துத் தோன்றக்கண்டு சிவபிரான் மேற் பிரயோகிக்க, சிவபிரான் திருக்கரத்தாற்பற்றிச் சிரமீதணிந்தனர். இவற்றைக்கண்டமுநிவர் முனிவுற்று, முன்னவன் மேல் மந்திரங்களைவிட அவை துடியுருவேற்று இடியென முழங்கி யெதிர்வர, எம்பிரான் கரத்திற்பற்றி என் கன்னத்தில் முழங்குக" எனக்கட்டளை யிட்டனர். தாருவநத்தோர் தரியாக் கோபத்தழலால் மீண்டும் யாகஞ்செய்ய முயலகன் பிறந்தான். முநிவர் முயலகனையும் ஹோமாக்கினியையும் "உமை கேள்வனை யுயிர்செகுக்க" என வோதி யனுப்பினர். நேர்வரக்கண்ட நின்மலர் கெருப்பைக் கையிற்றாங்கி, நிசாசரனாகிய முயலகனை நிலத்தில்வீழக் காலாற்றள்ளி யவன் முதுகின்மேல் தமது முண்டகத்தாளூன்றி நின்றனர். வேறொன்றுஞ் செய்யமாட்டாத வேதியர் பல சாபமிட அவை தாணுவினிடஞ் செல்லாமைகண்டு தடுமாறிநின்றனர். முயலகன் முதுகை யசைக்க முக்கணர்

நடிக்கக்கண்ட நான்முகன் முதலானார் "அரகர சங்கர சம்பு" எனத் தொழுவாருந் துதிப்பாருங் களிப்பாருங் கைகுவிப்பாரும் பாடுவாரும் ஆடுவாருமாயினர்.

சிவபெருமான் தம்மைப் பணியாத தாருவநமுநிவருக்கு ஞாநத்தை யநுக்கிரகித்தனர். அதனால் அந்தணர் அறிவுகூர்ந்து "ஐயனே! அடியேங்க ளறியாமையாற் பலவகையாகத் தேவரீரை யவமதித்தோம். அவற்றை மன்னிக்கவேண்டும் அருட்பெருங்கடலே" என்று பலமுறை பணிந்து உடல் நடுங்க உரைகுழற உரோமம் புளகிப்ப உள்ளமுருக ஆநந்த வெள்ளம் பெருக வேண்டினர். சிவபெருமான் "முநிவரே! சைவநெறியைக் கைக்கொண்டு நற்றவம்புரிந்து நானிலத் திருத்திர்" என நிறுவியருளி, திருக்கைலையையடைந்து திருமால் பிரமன் முதலானாரைத் தத்தமிடஞ் செல்ல விடுத்தனர். இதன் முற்பட்ட சரிதத்தைப் பிக்ஷாடகமூர்த்தத்திற் காண்க.

ஈண்டுத் தாருவந முநிவர்செய்த அபிசார வேள்வியில் தோன்றி அவர்கள் ஏவலின்படி வந்த புலியைச்சங்கரித்து உடையாகப் போர்த்த கோலமே சார்த்தூலஹரமூர்த்த மெனப்படும்.

**கந்தபுராணச் சுருக்கம்.**

*"தீதில் மாதர்கள் கற்ப ழித்தவ னைச்செ குத்திடுவோமெனா*
*மாத ழுற்கொண் மகம்பு ரிந்ததின் வந்து வந்துபி றந்திடுங்*
*காது வெம்புலி பரசு நவ்வி கடும்ப ணித்திரள் பூதர்கண்*
*மோது வெண்டலை திண்டி றற்றுடி மூபல கன்றனை யேவினார்.*

*வேங்கை தன்னையு ரித்து டுத்தனன் மிக்க சாரதர் தானையாய்ப்*
*பாங்கு றும்படி யோதி னானொரு பாத வண்கழ லத்தினா*
*லேங்கு றும்படி முயல கன்றனை யீடி னோடுமித்தித்தனன்*
*வாங்க ருங்கவி னுற்ற மேனியின் மற்றை யாவு மணிந்தனன்."*

**சார்த்தூலஹரமூர்த்தயே நம:**

### இருபத்தாறாவது

# பாசுபத மூர்த்தி

சந்திர வமிசத்து மன்னரில், பாண்டு புத்திரரான பஞ்சவர்கட்கும், திரிதராட்டிரன் மக்கள் நூற்றுவர்க்குந் தொடர்ந்த பாரதயுத்தத்தில், பதின்மூன்றாந் தினப்போரில் பல்லாயிரவரான சஞ்சத்தவர்களைப் பார்த்தன் கொன்று திரும்புமுன், அநேக அரசருடன் அமர் செய்து அவர்களை அபஜெயப்படுத்திவரும் அபிமக்யுவென் னும் அருச்சுனன் சுதனைச் சயத்திரதன் சங்கரித்தனன். அதனைப் பாடி வீடுசேர்ந்த றிந்த பற்குனன் பதைத்துத் துடித்து வேர்த்துக்களைத்துக்கோபித்துப் பற்களைக் கடித்து மீசை துடிக்கத் தோளைப்புடைத்து "என்மகனைக் கொன்றவனை நாளைச் சமரில் நாசஞ்செய்யேனாகில் நான் எரியில் வீழ்ந்திறப்பேன்" எனச் சபதஞ் செய்தனன்.

அப்பொழுது அருச்சுனனுக்குச் சாரதியாயும் அருந்துணையாயும் மைத்துனனா யுமுள்ள கண்ணன் அவனைப் புறத்தேகொண்டு போய்த்தேற்றி "காலையிலிருந்து கடும்பசியாக விருத்தலின் ஈண்டுள்ள கனிகளையேனும் புசித்துக் களையாறுக" என; அருச்சுனன் “அடியேன் அரனை அருச்சித்தன் அருந்தேன்” என, கிருஷ்ணன் "என்னையே பெருமானாக எண்ணி யருச்சிக்க" என இயைந்து, அவ்வநத்திலிருந்த அநேக மலர்களைக் கொண் டருச்சித்து அங்குக் கிடைத்த பழவர்க்கங்களாற் பசியையாற்றி, அன்றெல்லாம் அயர்ந்திருத்தலின் அவ்வரண்யத்திலேயே கண்ணுற ங்கினன். கண்ணன் அவனுடலைப்பாதுகாக்க அமரர் சிலரை ஆண்டமைத்துப் புத்திர சோகத்தாலே துயிலுஞ் சவ்வியசாசியின் கனவில் தோன்றினன். நரன் நாரணனை நமஸ்கரித்தனன். மதுசூதனன் "மைத்துனா! துரோணர் முதலானார் காப்பினும் நாளைப்போரிற் சிந்து மன்னனைச் சிரமழிக்கும்படி திருக்கயிலை சென்று சிவபிரான் திருவருள் பெற்றுத் தினகரன் உதிக்கு முன்னர்த் திரும்புதும்” என, அருச்சுனனுங் கனவிலேயே சம்மதித்தெழுந்தனன்.

கண்ணன் அருச்சுனனென்னும் இரண்டு கருமலைகள், கயிலையாகிய வெண்மலையை நண்ணி, பார்வதியாகிய பஞ்சை மலையைப் பாகமாகக் கொண்ட பரமேஸ்வரனென்னும் பவளமலையைக்கண்டு பணியும்படி அப் பருப்பதமடைந்து முதற்பெருங்காவலாகிய நந்தியெம்பெருமானது நளின சரணங்களை நமஸ்கரித்து அவர நுஞை பெற்றுத் திருச்சந்நிதியினுட்சேர்ந்து தேவமுநிகணங்கட்கிடையே சிங்காதனத்திற் சிலையரசபுத்திரியாருடன் வீற்றிருக்குஞ் சிவபெருமானைத் தரிசித்து, பன்முறை நிலமேற் பணிந்து நின்று கைகூப்பி,

"*நித்தனே நிமலனே நிகழ்நின் னாமனே*
*அத்தனே யடியவர்க் கெளிய வண்ணலே*
*பித்தனே யாதியந் தங்கள் பேசொணா*
*முத்தனே யுயிர்தொறு முலாயமுன்பனே*"

எனப் பலவாறாகத் துதித்துக் கண்களில் ஆரந்தபாஷ்பஞ் சொரியும் நரநாரணர் களை நோக்கி, நம்பர் இவ்விரவில் விரைவாகாண்டடைந்தது யாது காரணம்?" என வினாவ, கிருஷ்ணார்ச்சுனர் "தேவதேவா! தேவரீர் முன் திருவருள் செய்த பாசுபதத்தால் நிவாதகவசர்காலகேயர்களை வதைத்தோம். அதன் முஷ்டிநிலை தலைப்பட அநுக்கிரகிக்கவேண்டும்" என வேண்ட, அமலர் அவ்வாறே தடாகத்திலிரு ந்த பாசுபதத்தை இருவராலெடுத்து வரச்செய்து, முஷ்டிநிலை (நனவிலும் மறவா வண்ணம்) முற்றுப்பெறவுணர்த்தினர். அருச்சுனன் அன்றிரவிற் கண்ணனை அருச்சித்த கடிமலர்யாவும் அண்ணல்மேனியி லமர்ந்திடக்கண்டு அநந்தபரவசனாய் வணங்கி நின்றனன். கண்ணன் கருதி வந்தது கை கூடியதென்று களித்துக் கைகூப்பி நின்றனன்.

கண்ணுதல் உளமகிழ்ச்சியுடன் "பாரதப்போரிற்செயமுண்டாகக்கடவது" என ஆசீர்வதித்து விடையளிக்க, விடையூர்தியின் திருவருள் பெற்ற இருவரும் இறைவரது திருவடியைப் பணிந்து அரிதிற்புறம் போந்து ஆலயத்தை வலம் வந்து திருக்கைலையை நீங்கித் தமதிருக்கைசார்ந்தனர். அருச்சுனன் இவ்வாறு சொப்பனங் கண்டு துண்ணெனவிழித்து அம்புறாத்தூணியில் அவ்வத்திரமிருத்தலின் உண்மை யெனத் தெளிந்து கொண்டனன். சுயோதனன் யுத்தியும், துரோணன்வல்லபமும், பலமன்னர் பராக்கிரமமும், மாயன் வஞ்சனையா லொழிந்தன . அருச்சுனன் தனக்குச்சிவபிரான் பிரசாதித்த பாசுபதக்கணையாற் சிந்துதேசாதிபதியாகிய செயத்திரதன் சிரசைக் கொய்து சபதத்தை நிறைவேற்றினன். கிருஷ்ணமூர்த்தியும் அருச்சுனனும் அவாவியவண்ணம் அவர்கட்கு அஸ்திரமருளிய அவசரம் பாசுபத மூர்த்தமெனப் பகரப்படும்.

**பாசுபதமூர்த்தயே நம:**

### இருபத்தேழாவது

# கங்காள மூர்த்தி.

ஒருநாள் சிவாலயத்துள்ள திருவிளக்கொன்று சுடர்மழுங்குகையில், சவபெருமான் தேவியாரைப்பார்த்து "பெண்ணே! இத்திருவிளக்கின் திரியைத் தூண்டுவோர் திரிலோகமும் அரசுசெய்வர்" என்றனர். அப்பொழுது ஒரெலி அத்தீபத்திலிருந்த நெய்யைக்குடித்ததால் அஃதசைந்து திரிதூண்டப்பெற்றது. இறைவி யார் எம்பெருமானை நோக்கி "இப்பொழுது இதனைத் தூண்டிய இவ்வெலிக்கு இன்னருள் புரிய வேண்டும்" என, அண்ணல் "அவ்வாறே அளித்தனம்" என்றருளினர்.

அது மாவலியென்னும் பெயருடன் அசுரகுலத்திற்றோன்றி, அவனிமுழுவ தையும் அரசுபுரிந்தது. தானவர்குழாம் வலிமிகுதல் கண்டு வானவர்கோன் மனம் பொறானாய் எண்ணில்லாச் சேனையுடனெதிர்த்துப் போர்செய்து புறமுதுகிட்டோடி, திருமால்பாற்கூறினன். அதுசமயத்தில் திதி யென்பவள் விண்டுவைவேண்டி "என் மைந்தனாக வரவேண்டும்" என வரங்கேட்க, அரவணை துயில்வோன் அவளுக்கு "அவ்வாறேயாகுக" வென்று வரமளித்து, அயிராணி கேள்வனை நோக்கி "அமரர்பெரும! அஞ்சற்க. அவனை அடர்ப்போம்" என்றருளிக் காசிபமுறிவருக்கும் திதிக்கும் மைந்தனாக வாமனாவதாரஞ்செய்தனர்.

மாவலி அசுரனாயிருப்பினும் யாககருமங்களைச் செய்தும், அவரவர் விரும்பிய தானங்களை அபரிமிதமாக அளித்தும், நற்செயலிலேயிருந்தனன். வாமனவடிவங்கொண்ட மாயவன் மாவலி மாளிகையையடைய நிருதநிருபன் கண்டு, எதிர்சென் றழைத்துச் சோடச உபசாரங்களுஞ்செய்து, தக்க ஆதனத்தமர்த்தி "வேதிய! யாது கருதிவந்தனை கூறுக" என, வாமனன் "மகவான் மலரான்மலர்தலை யுலகத்து மன்னர் முதலானார் மனங்களிக்க அளிக்கவல்ல வள்ளலாகாரென்று உள்ளத்திற்கொண் டுன்பாலுற்றேன்" என, மாவலி "மறையோனே! ரதம் - கஜம் - துரகம் - பொன் - பொருள் - பொக்கிஷம் முதலிய எதுவேண்டினும் இமைப்பிற் றருவேன். இயம்புக" என, அந்தணன் "அரசே! அவற்றையெல்லாம் அவாவினே னல்லேன். என தடியால் மூவடி மண் வேண்டினேன்" என, மாவலி "மூவடிமண் எற்றுக்குப்பயன்படும்" என, மாணி "தவஞ் செய்திருப்பேன்" என்றனர்.

அப்பொழுது அருகிருந்த அசுரகுருவாசிய சுக்கிரன் "அரசே! இவனோர் பார்ப்பனச் சிறுவனென்றெண்ணற்க. திருமாலாதலின் தீமைவிளையும்" எனச் செப்பினன். மாவலி "மாலேயென்பால் மறையவனாகி மூவடிமண் யாசித்தானென்று அரும்புக ழிருக்குமாதலின் அதனால் விளையுஞ் சஞ்சலம் பெரிதன்று" என்று சுக்கிரன் சொல்லைக் கடந்து மும்முறை நீர் சொரிந்து தாரைவார்த்தனன். அதுபெற்ற அச்சுதன் அக்ஷணமே திரிவிக்கிரமாவதாரங்கொண்டு அண்டகடாக மூடுருவநின்று ஓரடியால் பூலோகத்தையும் மற்றோரடியால் தேவலோகத்தையும் அளந்து மூன்றாவது அடிக்கு இடமின்மையால் மாவலியின் சிரமேலூன்றி

அவனைப் பாதலலோகத்தமிழ்த்தி அதனால் அகந்தை கொண்டு ஆர்ப்பரித்து அமனிமாக்களை அழிக்க முயன்றனர்.

அதுகண்ட அமரர் அரைக்கணமுந்தாழாது, அதிவிரைவாகச் சென்று, அம்பிகைபாகர் வீற்றிருக்கும் வெள்ளிமலையை யடைந்து. நந்திபகவான் நளின பாதங்களைப்போற்றி உள்ளே செல்ல உத்தரவு பெற்று, சந்நிதானத்தைச் சார்ந்து சாஷ்டாங்கமாகப்பணிந்து கைகளைச் சிரமேற்குவித்து "சம்பு! சங்கரா! சச்சிதாநந்தா! ஜகத்ரக்ஷகா! சரணம்! சரணம்!!" என்று பேரிரைச்சலாய்த் தோத்திரஞ் செய்ய, எல்லாமறிந்த எம்பெருமான் ஓர் விளையாடலாக ஒன்ற மறியார்போன்று "உம்பர்களே! உங்களுக்குற்ற துயர் யாது? ஓதுமின்' எனத் திருவாய்மலர்ந்தருளினர். வானவர் "மகாதேவா! மாகவிபால் மாயவன் வாமனவடிவாய்ச் சென்று மண்யாசித்து வானுற்றோங்கி மாவலியைமாய்த்து, மமதையால் வையகத்தை வதைக்கின்றனன். அவனை விரைவிலடக்காவிடில் அமரர் அந்தணர் முதலானார் அரைக்கணத்தில் அழிவது சரதம்" என முறையிட அருள்வள்ளல் அகிலத்திலுள்ள அனைவர்க்குமுற்ற ஆபத்தை அகற்றும்படி அக்கணமே அவ்வாமனன் முன்னரடைந்து, மயக்க மொழிய வார்த்தைகள் சில வாய்மலர்ந்தருளியும் * பிருகுமுனிவன்சாபப்படி விண்டு கருப்பாசயமுற்ற பாசவீக்க முதிர்ச்சியால், கேளாமல், இறுமாந்திருப்பது நோக்கி, இறைவர் இணையில்லாச் சினங்கொண்டு வச்சிரதண்டமொன்று திருக்கையிலேற்று வாமனன் மார்பிலடித்தனர். வாயுவேகத்தாற் சாய்ந்த மேருமலை போல வாமனன் தரைமேற்சாய்ந்தனன். அப்பொழுது அவனது தோலை யுரித்துக் கஞ்சுகமாகத்தரித்து, முதுகென்பைப்பிடுங்கித் தண்டாகக்கையிற்கொண்டு கடவுளர் துயரொழித்துக் கயிலையடைந்தனர்.

அச்சுதன் அகந்தையகன்று, பண்டைய உணர்வெய்திப் பரமனைப்பரவி, தேவமுநிவர்கட்கு வாமனபுராணமோதி வைகுந்தஞ் சேர்ந்தனன். மாவலி நற்கதி பெற்றனன். சிவபிரான் வாமனனது முதுகென்பைக்கொண்ட கோலமே கங்காள மூர்த்த மெனப்படும்.

[வாமனன் வானை யளந்தபொழுது மேலண்டகடாகம் பிளவுற்று: ஆகாய கங்கையொழுகி, அது மாளவதேசவழியாய்ச் சமுத்திரசங்கமமாயிற்று. அதன் விருத்தாந்தத்தையறியார் சிலர் அக்கங்கை நீரைச் சிவபிரான் அணிந்தனரெனக் குழறுவர். அஃதபத்த மென்க.]

* ஆதியில் அமரருக்கும் அசுரருக்கும் நிகழ்ந்த அமரில் அண்டர்கள் ஆற்ற கில்லாராய் விண்டுவைவேண்டியது கண்டு திருமால் செருக்களஞ்சேர்ந்து திகிரியைச் செலுத்தித் தீயோர் பலரைச் செகுத்தனர். போனவரொழியத் தானவர் சிலர் தமதுயிர்தப்பிப் பிழைக்கச் சமர்துறந்தோடிப் பெருந்தவஞ்செய்யும் பிருகு முனிவர் பர்ணசாலையடைந்து அவர் பன்னியாகிய கியாதியென்னும்மாதினை யடைக்கலம்புக, அவ்வம்மை "அஞ்சேல்" என்றபயமளித்து ஆச்சிரமத்தில்வைத்துக் காத்தனள். சீற்றமிகுந்து தீச்சொரி விழியொடுஞ் சக்கரப்படையைத் தாங்கிய கையொடுஞ் சீதரன் பாதசாரியாக வருதல் கண்ட கியாதிவணங்கிநிற்க, மாதவன் சினந்து மாதின் சிரத்தைக்கொய்து தானவர் குழாத்தைச் சங்கரித்தொழித்தனன்.

பிருகு முநிவர் தன்பெண்சாதியைக் கொன்ற பின்னை கேள்வன்மேற் பெருங் கோபங்கொண்டு “கேசவா!. ஈசனையன்றி யெவரையும் பணியோம். சைவசமயமே தரணியிற்சிறந்ததென் றெண்ணியாமிருப்ப துண்மையாயின், இழிந்த பிறவிக ளீரைந்தெய்தி வருந்தியழிக” வென வசைமொழியிசைத்து "நின்னடியார்கள் நெறியில்லாவழி தீக்கை பெற்றுச் சிவநிந்தை செய்து தீநரகடைக" எனக் கோபமே லீட்டாற்கூறி சுக்கிரனா லுயிர்த்தெழுந்த தோகையோடு களித்து வாழ்ந்தனர். திருமால் தனக்குற்ற பிருகுவின் சாபம் பிரியவகை யாதெனப் பெரிது மாலோசித்துத் திரிபுரதகனன் சேவடிவணங்கிப் பெருமுசெபித்த பிறப்பொரு பத்தும் ஒழிப்பலென்று தன்னுள்ளத்தெண்ணிச் சிவலிங்கக் குறியொன்று பிரதிட்டை செய்து பாசுபதவிரதம் பூண்டு உடலெங்குந் திருவெண்ணீறு சண்ணித்துத் திரிபுண்டரந்தரித்து உருத்திராக்கம், பூண்டு உருத்திரசமக மகாமந்திரஞ் சபித்துக்கொண்டு, சருகு - நீர் - பழம் - காற்று முதலியவற்றைப் பக்ஷித்து ஒரேமனதாய் உமாபதியை உள்ளத் திருத்தி, பஞ்சாக்கினிமத்தியிற் பலகாலநின்று தவஞ்செய்தனர். அவர் தவத்திற் களித்த அடியவர் சகாயர் அம்பிகைசமேதராய் இடபவாகனமிவர்ந்து தரிசனந்தர, கமலை கேள்வன் கண்கள் களிக்கக்கண்டு, அரகரவென்று சிவநாமங்களாற்றுதித்து அஷ்டாங்க பஞ்சாங்க நமஸ்காரம் பலமுறை செய்து பணிந்துநிற்க, பரமன்களித்து "மாதவ! யாதுவேண்டினை" எனத் திருவாய்மலர்ந்தருள, சார்ங்கன் “சங்கர! பிருகுமுரிவன் சாபத்தை விலக்கி யருளவேண்டும்" என்றிரப்ப, பெருமான் "எமதடியவர் இசைத்த மொழிகள் என்றுந் தவருறா . மாநிலத்துள்ள மன்பதைக் குதவியாய்ப் பிறவி பத்தும் நீபெறுதலே திண்ணம். ஆயினும் நம்மடி யருச்சனைப் பலனால் ஐந்தினி லருளுமற்றைந்தினிற் றண்டமுமடைதி" என்றருளக் கேட்டு களித்து "தேவரீரே அடியேனைத் தண்டிக்கவும் காக்கவும் நாயேன் பெருவாழ்வுற்றது என்ன பாக்கியம்" என்று வணங்கச் சிவபெருமான் அந்தர்த்தானமாயினர். அவற்றுள் முற்பட்ட ஐந்தில் தண்டமும், பிற்பட்ட ஐந்திற் சிவார்ச்சனை செய்யும் பெரும் புண்ணியமும் பெருமான் திருவருளாற்பெற்றனர் என்பது. சிவபிரானே சர்வதேவர் கட்குஞ் சிக்ஷகர் என்றறிக.

**இலிங்கபுராணம்.**

*விஷ்ணும்ப்ரஹ்மணமிந்த்ரஞ்ச யமமந்யாஸ்ஸுராநபி*
*யதோநிக்ருஹயஹரதே ஹ்ரஇத்யுச்யதேபுதை:*

**ஸ்கரந்தம்-விஷ்ணுவாக்கியம்.**

*த்வம் விஶ்வகர்த்தாதவநாஸ்திகர்த்தா*
*த்வம் விஶ்வபர்த்தாதவநாஸ்திபார்த்தா*
*த்வம்விஶ்வஹர்த்தாதவநாஸ்திஹர்த்தா*
*த்வம்விஶ்வநாதாதவநாஸ்திநாத:*

**ஆதித்ய புராணம்.**

"*கல்பாந்தேஶமிதத்ரிவிக்ரமமஹாகங்காளபத்தஸ்புரச்*
*சேஷ:ஸூத்ரமதோக்ருஸிஂஹநகரப்ரோதாதிகோலாமிஷம்*
*விஶ்வைகார்ணவஸம்விஹாரமுதிதௌயௌமத்ஸ்யகூர்மாவுபௌ*
*கர்ஷத்தீவரதாங்கதோஸ்யதுஸதாம்மோஹம்மஹாபைரவம்.*"

**உபதேசகாண்டம்.**

"*பற்றினன்வயிரத்தண்டம்பகிரண்டமதிரவோச்சிச்*
*சுற்றினனுருமுக்காலத்தொழித்தனன்றுளவமார்பி*
*னெற்றினனெற்றலோடுமெறிபடுசண்டவாயு*
*முற்றுறவிற்றுவீழுமுரிவெங்கிரியிற்சாய்ந்தான்.*

*கருநிறக்கமஞ்சூன்மேகக்காரதளுரித்துவாங்கித்*
*திருநிறத்தமையக்காளகஞ்சுகமென்னச்சேர்த்தி*
*வெரிநுறப்பிடுங்குமென்புதண்டெனவெடுத்துக்கொண்டான்*
*மருமலர்த்துளவமாயோனாணவமயக்கந்தீர்ந்தான்.*"

**காஞ்சிபுராணம்.**

"*குறளாயணுகிமூவடிமண்கொண்டுநெடுகிமூவுலகுந்*
*திறலானளந்துமாவலியைச்சிறையிற்படுத்து வியந்தானை*
*யிறவேசவட்டிவெரிநெலும்பையெழிற்கங்காளப்படையென்ன*
*வறவோர்வழுத்தக்கைக் கொண்டவங்கணாளன்றிருவுருவம்.*"

**கங்காளமூர்த்தயே நம:**

இருபத்தெட்டாவது

# கேசவார்த்த மூர்த்தி.

திருமால் முன்னொருகாலத்திற் சிவபிரானை நோக்கிக் கடுந்தவஞ்செய்தனர். அரவாபரணர் அச்சுதன் செய்யும் அருந்தவத்திற்கு அகமகிழ்ந்து அவருக்குப் பிரசன்னமாய் "விண்டுவே! தேவாசுரர்களாலே தீர்த்தற்கரிய வல்லமையும், எத்தகையினரா யிருப்பினும் அவர்கள் யாவரையும் மயக்கத்தக்க மாயையும் உனக்குக்கடாக்ஷித்தோம் மாயன் என்றினியுன்பெயர்வழங்குக. நீயே எனது இடப் புறமாவாய்." எனத் திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினர்.

**திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.**

"*எரியலாலுருவமில்லையேறலாலேறலில்லைக்*
*கரியலாற்போர்வையில்லைக்காண்டகுசோதியார்க்குப்*
*பிரிவிலாவமரர்கூடிப்பெருந்தகைப்பிரானென்றேத்தும்*
*அரியலாற்றேவியில்லைஐயனையாறனார்க்கே*"- எனவும்,

**இரட்டைப்புலவர்.**

“*வருக்கைத்தடம்பொழிலாமாதையையர்க்குமாசொன்றில்லா*
*முருக்கொத்தமேனியழகியநாதர்க்குமூச்சரவத்*
*திருக்கைக்கமலஅரனார்க்கரிதிருத்தேவியன்றேல்*
*அரிக்குப்பொருளுரையீர்கெடுவீர்நும்மறிவின்மையே.*”- எனவும்,

**காசிகண்டம்.**

"*ஆற்றல்வடிவாட்டடங்கையவுணராலுமகல்விசும்புதனிபுரக்குமமரராலு, மாற்றரிதாயெவ்வுயிர்க்கு மயக்கஞ்செய்யுமாயை நினக்களித்தனமெம்மிடப்பானீயே, யூற்றிருந்து நறவொழுகுந் துளவத்தாரோயுனையிகழ்ந்தோ ரெமையிகழ்ந்தோ ரென்னவோதி, யேற்றையிருக்கொடியுயர்த்த செக்கர் வேணி யிறைவனுயர் தடங்கயிலை யெய்தினானே*"-

எனவும், வரும் பிரமாணங்களாற் சிவசத்திகளுள்ளே விஷ்ணுமூர்த்தியும் ஒன்றென் பது பெறப்பட்டது.

அத்தகைய பேற்றினையடைந்த அச்சுதன் சிவபிரானாரது திருவுள்ளக் குறிப்பின்படி பராசத்தியேயாவன்; பாரியாகையிற் பார்வதியும் ஆணுருவாகையில் விஷ்ணுவும் குரோதமுற்றாற் காளியும் யுத்தமுனையிலே துர்க்கையுமாக விளங்குவன்.

**ஆகம ஶாஸ்த்ரம்.**

*ஏகைவஶக்தி:பரமேஶ்வரஸ்ய ப்ரயோஜநார்த்தாயசதுர்விதாபூத்*
*போகேபவாநீபுருஷேஷுவிஷ்ணு:க்ரோதேசகாளீஸமரேசதுர்கா.*

ஒருகாலத்தில் உமையம்மையார் சிவபெருமானை நோக்கி விரதங்களுட் சிறந்த சோமவாரவிரதத்தை ஆச்சிரயித்து வசிஷ்டராதி முநிவர்கட்கு அன்னமளிக் கையில், இறைவியாரது 'தவச்செயலைக் காணவிரும்பிய எம்பெருமான், விஷ்ணுமூர்த்தி பாரியாகிப் பின்வர, தாம் விருத்தவேதிய வடிவேற்று எழுந்தருளி, விமலையின் விரதத்தைச் சோதித்து, பெருமான் தமது நிஜவடிவும், திருமால் முதலிற் பார்ப்பதி யுருவும் பின்னர்த் தனது நிஜவடிவுங்காட்டத் தரிசித்துக் களித்தன ரெனவும் ஓர் சரிதமுளது.

**ஶைவபுராணம்.**

*போபோகிரீந்த்ரதநயே பத்ந்யாஸார்தம்தவாஜிரம்*
*ப்ராப்தமந்நார்திநம்மாம்வை வித்திப்ராஹ்மணபுங்கவம்.*
*அதாலோக்யமஹாதேவ விஸ்மயோத்புல்லலோசநா.*
*கிமிதந்தேவிலஸதாம் ஸேயமித்யாஹபார்வதீ*
*அதேங்கிதஜ்ஞோதைத்யாரிர் நாரிரூபம்விஹாயதத்*
*ஸ்வரூபம் தர்ஶயாமாஸ பார்வத்யா:ஸந்நிதௌஹரி:*
*நீலநீரதஸம்காஶ: புண்டரீகதளேக்ஷண:*

அம்பிகை போன்ற அத்தகைய அழகியவுருவை அச்சுதர் எவ்வாறடைந்தன ரென்று பரியாலோசிக்கும்பக்ஷத்தில், அகிலலோகத்திலுஞ்சிறந்த திரிபுரஸுந்தரி என்னுங் காரணப்பெயர் வாய்ந்த எமது தாயாகிய கவுரியைக் கருதிக் காலம் பல கடுந்தவஞ்செய்து கைகூப்பிப் பணிந்து ஈச்சுவரியாரைப்போன்ற திவ்யவடிவை அவ்வம்மையார் திருவருளினாலே யடைந்தனர் எனக் கொள்க.

**ஆநந்தலஹரி.**

*ஹரிஸ்த்வாமாராத்யப்ரணதஜநஸௌபாக்யஜநநீம்*
*புராநாரீபூத்வாபுரரிபுமபிக்ஷோபமநயத்-ஸ்மரோபித்வாம்நத்வா.*

**ஸௌந்தர்யலஹரி.**

*ஸமுத்பூதஸ்தூலஸ்தநபரமுரஶ்சாருஹஸிதம்*
*கடாக்ஷேகந்தர்பா:கதிசநகடம்பத்யுதிவபு:*
*ஹரஸ்யத்வத்ப்ராந்திம்ஜநநிவிஜயநம்தஸ்ஸமதுலே*
*பவத்யாயேபக்தா:பரிணதிரமீஷாமியமுமே.*

ஈண்டெடுத்துக் காட்டிய இவ்வகைய பலஹேதுக்களால், திருமால் சிவசத்தியே யென்பது பெறப்பட்டது. புருஷபாகம் வலப்புறமெனவும் பெண்பாக மிடப்புறமெனவுங் கூறப்படும் நியாயத்தால், சிவபிரானது வாமபாகத்தைத் திருமால் சிவார்ச்சனை செய்து பெற்றுக்கொண்டனர். அச் சிவகேசவரிருவரும் ஒருவடிவாய் (அர்த்தசாரீசுவரர்போல) வலப்புறம் செந்நிறமாய் மழு அபயமும், இடப்புறம். பசுமையாய்ச் சக்ரவரதமுந் தாங்கி ஒரு திருமேனியுடன் ஏகபீடத்திற் சமானமாக எழுந்தருளியிருப்பர். அத் திரு.'வுருவத்தைச் சங்கரநாராயணரெனச் சற்றும் பேதமின்றி ஒருமூர்த்தியாய் உபாசனார்ச்சனைகள் புரிந்து நற்கதியுற்றோராகிய கண்ணுவராதி முநிவரர்கட்கு எண்ணில்லை. இத்தகைய இலக்கணமாகக் கேசவனைப் பாதியாக வுடைத்தாயிருத்தலின் பெருமான் கேசவார்த்தமூர்த்தியெனத் திருநாம மெய்தினர்.

இத்திருவுருவம் ஹரிஹரம் என்னும் க்ஷேத்திரத்திற் பிரசித்தமாக விளங்கும்.

**ந்ருஸம்ஹோத்தர புராணம்.**

*ஹரிஸங்கரயோர்நாஸ்தி யுவயோர்பேதஈஸ்வர*
*யேபேதபுத்யாபஸ்யந்தி தேதூராயுவயோர்ஹர-இத்யாதி*
*நிவாரிதும்மஹாரம்ஹௌ ஹரிஸங்கரரூபிணௌ*
*யுவாமேகாக்ருதிம்ப்ராப்யஸூரலோசநகோசரௌ*
*ஸ்தாதவ்யமசிராதத்ரை வைகதைவவரம்மம*
*இதிதஸ்யவச:ஸ்ருத்வா கர்தும்தஸ்யமநோரதம்*
*பஸ்யதாம்ஸர்வதேவாநாம் தாவேகாக்ருதிமாபது:*
*தஸ்மாத்தரிஹரக்ஷேத்ர மிதிதத்ப்ரதிதம்புவி.*

**பதினோராந் திருமுறை.**

"*இடமால்வலந்தானிடப்பாறுழாய்வலப்பாலொண்கொன்றை*
*வடமாலிடந்துகிறோல்வலமாழியிடம்வலமா*
*னிடமால்கரித்தால்வலஞ்சோதிவனுக்கெழினலஞ்சேர்*
*குடமாலிடம்வலங்கொக்கரையாமெங்கள் கூத்தனுக்கே.*"

**கேசவார்த்தமூர்த்தயே நம:**

## பிக்ஷாடந மூர்த்தி.



### இருபத்தொன்பதாவது

# பிக்ஷாடந மூர்த்தி.

தேவதாருவர் முநிவர் சிவபக்தியில்லாராகி, யாகமே முத்தி பயக்கவல்ல நற்கருமமென்று சிந்தித்து விழைவுடன் எண்ணில்லா வேள்வி புரிவாராயினர். பரந்தவுலகில் நிகழும் பலவற்றையுமறிந்த பரமபதி அதனையுணர்ந்து, திருமாலைத் தம்பால்வரத் திருவுள்ளஞ் செய்ய, கமலைகேள்வன் கண்ணு தல்கருத்தறிந்து கயிலையங்கிரியை யடைந்து, திருநந்திதேவர் விடைபெற்றத் திருச்சந்நிதானத்தி னுட்சென்று சிவபெருமானைப் பணிந்துதிற்க, விடையூர்தி விருப்புடன் விண்டுவைக் கைப்பற்றியெழுந்து வெள்ளிமலையை விலகி வெளிவந்து "மாதவ! முன்னெருகால் நீகொண்ட மோகினி யுருவை யீண்டெய்துக." என, பன்னக்சயனன் பணிமேற்கொண் டணியிழையா யப்பொழுதேயாயினன். மாவென்னும் பெயருக் கேற்பத் தமது திருவுருவைக்கண்டு மாலெய்தும்படி அம்பிகாபதியும் அவ்வரிவைக்கேற்ற ஆடவசிரேஷ்டாய் வடிவேற்று, கபாலமுஞ்சூலமுங் கையிற்பற்றித் திகம்பராய்ப் பிக்ஷாடநத் திருக்கோலங்கொண்டு, முநிவர்வாசமாகிய தாருவனத்தை மோகினிப் பெண்ணுடன் நண்ணினர்.

அச்சமயத் தருந்தவத்திருந்த அந்தணர்குழாம் அரிவையைக் கண்டு அறிவழிந்து தவநெறி தவறி அவசெறிகொண்டு காமவிருப்பமேலீட்டாற் பின்றொடர் ந்து. விளக்கைக்கண்ட விட்டில்போலத்துன்புறுவாராயினர். இத்தகைய மாயை யியற்றும் வலிதந்து மாயனாகிய மோகினியை மகாதேவன் பிரிந்து, கையிற் கொண்ட பரிகலத்தி லையமேற்பார்போல முநிவரர் வீதியிற்சென்று பண்ணோசை யோடு உள்ளாளக்கீதம்பாட முலிபன்னியர் கேட்டு, அவ்வினியவோசையுடன் பாடுவோனைக் காணவிரும்பி வீதிவாயிலில் வந்து பெருமானது பிக்ஷாடாத் திருக்கோலத்தைத் தரிசித்துக் காமத்துயரிற்கட்டுண்டு வருந்தினர். அரிவையர் சிலர் ஐயனையணையும்படி பிரார்த்தித்தனர்; பெண்கள் சிலர் பிச்சையிட்டனர்; கன்னியர் சிலர் காமநோயாற் கலையவிழ்ந்தனர்; மாதர்கள் சிலர் வளைகழன்றனர்; நங்கையர் சிலர் நாணமழித்தனர்; எம்பெருமானது திருவிளையாடலால் மாமாயா சாலவித்தைபோல் அம்மாதரிடம் நாற்பத்தெண்ணாயிரம் புதல்வர் அக்காலத் துதித்தனர்.

அப்பிள்ளைகள் பிக்ஷாடநமூர்த்தியைப்பணிய, புராரி "நீவிர் எம்மை நோக்கித் தவஞ்செய்க' எனவிடுத்து, நகரின் புறம்போந்தனர். முநிவரை மோகிக்கச்செய்த மோகினி முதல்வனையடைய பின் வந்த பெருந்தவத்தினர் தத்தம் பெண்டிரை யவாவிச்சென்று கண்டு நம்மனைவிமாரும் இத்திகம்பரனால் நான் வளை முதலியவற்றைக் கழிந்தனர்போலுமென்று கருதி "நாமொரு பெண்ணாற் றவமழிந்து காமபாசத்தாற் கட்டுண்டோம். நம்பன்னியர் ஒருவன் மாயத்தாற் கற்பிழந்தனர்." என்று பேசிக் கிலேசித்து, தமது தவநிலையை மாயனால் மாய்த்ததும், தம்பன்னியர் கற்பையழித்ததும், சங்கரனேயென்று தமது ஞானத்தாலுணர்ந்து 'பெருந்தவமழியி னும் பிராயச்சித்தஞ் செய்யலாம்: கற்பழிந்ததே; கற்பகாலமுங்காசினியோர்

நிந்திப்பரே!" எனக் கழறி, பிக்ஷாடநர் பின்செல்லும் பெண்டிரைக்கூவி, "யாவர்பின் செல்கின்றீர்? கற்பழிந்தவர் கடுந்தழல்மூழ்கிக் காயத்தை யொழித்தல்கடன், அன்றேல் உமதூரையடைமின்" என்றனர். காரிகைமார் கணவர் கழறிய மாற்றத் தைக் கருத்துட்கொண்டு கண்ணுதலைப்பிரியக் காலெழாது பின்றொடருகையில், கருணாமூர்த்தியின் திருவருளால், ஒருவாறு மனந்திரும்பி உம்பர் பெருமானுருவை யுட்கொண்டு ஊர்சேர்ந்தனர்.

சிவபெருமான் திருத்தெளிச்சேரி யென்னும் நகரினீங்கினர். முநிவர் சிவபிரானைக் கொல்லவேண்டுமென் றுட்கொண்டு அபிசாரவேள்வி செய்து அதனிற்றோன்றிய புலி நாகம் முயலகன் முதலியவற்றைப்பிரயோகிக்க அத்தன் அவற்றைச் சங்கரித்தும் உடை முதலியவாகத் திருமேனியிலணிந்துந் துன்புறாது திருமாலுடன் கயிலைசார்ந்து கமலைகேள்வனை விடைகொடுத்தனுப்பி எழுந்தருளி விருந்தனர். (அவர்கள் செய்த அபிசார வேள்வியைப்பற்றிய விவரங்களைச் சார்த்தூலஹரமூர்த்தத்திற் காண்க.)

தாருவந முநிவர் தவத்தையும், அவர் மனைவியர் கற்பையும் அழிக்கும்படி பெருமான் திகம்பரராய்ப் பிரமகபாலந்தாங்கிப் பலியேற்கச்சென்ற கோலமே பிக்ஷாடகமூர்த்தமெனப் பெயர்பெறும்.

**தாருவநக்[3]டாவிலாசம்.**
**காஸிஷ்டலைங்கம்.**
**வஸிஷ்டரை நோக்கி ஈஸ்வரவாக்கியம்.**

*விஷ்ணுஸ்சமாயயாப்ரஹ்மந் பார்யாபூந்நமமஸுந்தரீ*
*தயாஸஹமஹாக்ரீடாந் க்ருத்வாவேஷ₀திகம்பரம்.*

**காஞ்சிபுராணம்.**

"*அடியிற் றொடுத்த பாதுகையு மசைந்த நடையு மிசைமிடறும்*
*வடியிற் சிறப்ப நடந்தரும் மூழை யேந்தி மருங்கணைந்த*
*தொடியிற் பொலிதோண் முனிமகளிர் சுரமங் கையரை மயல்பூட்டிப்*
*படியிட் டெழுதாப் பேரழகாற் பலிதேர் பகவன் றிருவுருவம்.*"

**பிக்ஷாடநமூர்த்தயே நம:**

### முப்பதாவது

# ஸிம்ஹக்ந மூர்த்தி.

ஹிரண்யகசிபனென்று மியற்பெயருடைய ஒருவன் அசுரகுலத்திற்றோன்றி, தமது குலகுருவாகிய வெள்ளியை விளித்து "ஆசிரியனே! யாரை வணங்கித் தவஞ்செய்தால் அடைதற்கரிய வரம்பெற்று, வரம்பில்காக்காலம் வலிமிகுந்து வாழலாம்" என வினவ, சுக்கிரன் “அரசர் அரவாபரணனையன்றி யத்தகையவரத்தை யளிப்போர் யாவர்" என்று, அப்பரமனைப்பணியும் பலமுறையையும் பயிற்றி தனதுலகுசார, ஹிரண்யகசிபு சிவபிரானது திருவடிகளை இதயத்திலிருத்தி எண்ணில்லாக் காலமியற்றிய தவத்திற்கிறைவர் மகிழ்ந்து “யாது வேண்டுவது?" என, அசுரன் அண்ணலே! பிருதிவி முதலிய ஐம்பூதங்கள் - ஆயுதக்கருவிகள் - வானவர் - மாநுடர் -பறவை - விலங்கு முதலிய பிராணிகள் இவையொன்றனாலும் இரவிலும் பகலிலும் இறவாவரம் வேண்டும்' என்றேற்ப, எம்பிரான் “அவ்வாறே யாகுக," என வரமருளினர்.

தான்பெற்ற வரத்தினாற் றருக்கெய்திய தானவன், நால்வகை சேனையையுங் கடல்போற்கூட்டிக் காசினி முழுதினுக்குங் காவலனானான். தேவரம்பையர் சித்தமாதர் இயக்க ஸ்திரீகள் முதலானாரைச் சாமரையிரட்டப்பணித்து, இந்திரன் முதலிய வெண்டிசைக்காவலர் வந்து நாடொறும் வணங்கிப் பணிப்பனபுரிய வமைத்து, பிரமன் தன்பெயரைக் கேட்கும் தொறு நடுங்கும்படி, கருடர் - காந்தருவர் - சித்தர் வித்தியாதரர் முதலானார் சித்தந்திகைக்கச் செங்கோல் செலுத்தினன். அக்காலத்தில் அவனாக்கினையா லனைவரும் (ஹிரண்யாயநம:) எனக் கூறவேண்டுவதேயன்றி வேறொருவரையுஞ் சொல்லப்படாது. இதனைப்பொறாத இமையவர் விண்டுமூர்த்தியைக் கண்டு விளம்ப, சார்ங்கன் தனதொருகூற்றை அவனது தவப்புதல்வனாக ஜநிப்பித்தனன். அப்புதல்வன் ஐந்து வயதடையப் பள்ளியில் விட்டுப்படிப்பிக்க எத்தனிக்கையில், உத்திரவின்படி உபாத்தியாயர் (ஹிரண்யாய நம:) என்று போதிக்க , சிறுவனாகிய பிரஹலாதன் (ஸ்ரீநாராயணாய நம:) என, ஐயர் அரசனுக்கு அறிவிக்க, அசுரன் பலவகைத்தண்டஞ்செய்தும் பயனுறாமையால் "நீ கூறுகின்ற பரம்பொருள் யாண்டுளது." எனக் கேட்க, பிதாவை நோக்கிப் பிரஹலாதன் “இறைவனெங்குமுளன்" எனக்கூறினன்.

**பாகவத புராணம்.**

"*சாணிலு முளனோர் பெற்றி யணுவினைச் சதக்கூ றிட்ட*
*கோணிலு முளன்மா மேருக் குன்றிலு முளனிந் நின்ற*
*தூணிலு முளனீ சொன்ன சொல்லினு முளனிச் செய்தி*
*காணுதி விரைவி னென்றா னன்றெனக் கநகன் சொன்னான்.*"

கேட்ட ஹிரண்யகசிபு கோபங்கொள்கையில், நாராயணன் கரவடிவுஞ் சிங்கவடிவுங் கூடிய நரசிங்கமாகத் தூணைப்பிளந்து கொண்டு வெளிவந்து

அவனுடனரும்போராற்றி, அத்தானவத் தலைவனைத் தன்மடியிலிருத்தி, நகங்களால் மார்பைப்பிசந்து குடரைப் பிடுங்கி மாலையாயணிந்து இராப்பகலுக்கி டையாகிய சாயுங்காலப்பொழுதில் மேலிட்டு, ஒரு துளி யுதிரமுங் கீழ்விழாமற் கையிலேற்றும் வாய்வைத்தும் பருகி உயிர்மாய்த்தனர். (அவனைச் சங்கரித்த காலத்தையே இரணியவேளையென்பர் ) திருமகள் கொழுநன் அசுரனுதிரமருந்திய வெறியால் அவனிமாக்களை வாரி வாயிற்பெய்து, செருக்குற்ற செயல்கண்டஞ்சிய தேவர் ஒருநொடியி லுலகமழியுமென வுட்கொண் டோடிச்சென்று, திருக்கைலையை யடைந்து திருநந்திதேவராற் சிவபிரானுக்குரைப்ப, பரமசிவன் "பயப்படாதீர்கள்" என்று பகர்ந்து, இருசிரமும் இணையில்லாச்சிறகும் கூரிய நகமுமுடைய எட்டுக்காலும் நெடியவாலும் பேரிரைச்சலும் கடுங்கோபமுங் கொண்ட சரபத்திருவுருவுடன் நரசிங்கத்தை நண்ணி இடி முழக்கு போலிரைந்து உதிரவெள்ள மூற்றெடுத்தோடச் சிங்கச்சிரசையும் கைகளையுங் கறித்துத்தள்ளி மேலுட்கார்ந்து சிங்கத்தின் சருமத்தை யுரித்துத் திருமேனிபோற் போர்வையாகக் கொண்டு வெள்ளிமலையையடைந்தனர். விண்டு பண்டையவுணர்வு தோன்ற, பரமனைப் பூசித்து நரசிங்கபுராண மோதி வைகுந்தமுற்.றனர்.

நரசிங்கத்தின் சிரத்தை யறுத்துத் தலைமாலையிலணிந்ததாகவும் சரிதமுளது. இரணியகசிபனைச்சங்கரித்த நரசிங்கத்தின் இருமாப்பைச் சரபரூபமேற்று நாசஞ்செய்தமையாற் சிவபெருமான் ஸிம்ஹக்நமூர்த்தியெனப் பெயருற்றனர்.

ருக்வேதம்.- அஹம்ம்ருணா:ஶரபாயருஷிபந்தவே.

**ஶ்ருதி-தைத்திரீயகம்.**

ஹரிக்₀ஹரந்தமநுயந்திதேவா:விஶ்வஸ்யேஶாந₀ருஷபம்மதீநாம்.

**ஸ்காந்தபுராணம்.**

*ஹரிம்ஹரந்த₀ஶரம்பம்விஶ்வஸ்யேஶாநமீஶ்வரம்*
*அநுயாந்திஸூராஸ்ஸர்வே நமோவாக்யைஸ்ஸஹாத்ருதம்.*

**காஶிகாண்டம்.**

*புராஹிரண்யகஶிபு₀புதைத்யராஜம்மஹாபலம்*
*ஹத்வாதத்ருதிராபாந ப்ரமத்தம்யாசித:ஸுரை:*
*ருத்ர:ஶரபரூபேண நரஸிம்ஹமபீடயத்.*

**ந்ருஸிம்ஹோத்தரபுராணம்.**

*ததோந்ருஹிம்ஹமாலோக்யசங்க்ரம்யகநஸாஹஸ:*
*தந்ந் ஹிம்ஹஶிரோயாவந் நகைஶ்சேத்தும்ஸமுத்யத:!இத்யாதி*

*ஏவம்ஸஶூலசக்ரௌதௌ மஹாரணஸமுத்தருதௌ*
*விலோக்யவிபுதாஸ்ஸர்வே மஹாபயமுபாயய:! இத்யாதி!*
*ந்ருஹிம்ஹஶரபௌத்ருஷ்ட்வா ததோப்ரஹமஸுரைஸ்ஸஹ*
*துஷ்டாரிபரமப்ரீத: கரௌக்ருதாம்ஜலிஂதத:*

**ஸ்காந்தபுராணம்.**

*ஶூலாயுதாயஸுரப்ருந்தகமௌளிமாயா*
*லீலாயமாநசரணாம்புஜபல்லவாய*
*ஹேலாவலேப்பரிபூதக்ருஹிம்ஹரம்ஹௌ*
*லீலாபராயஶரபாக்ருதயேநமோஸ்து.*

**ப்ரஹமாண்ட புராணம்.**

*ருஷய:- கதம்தேவ: ஸர்வஜகத் ஸ்ருஷ்டிஸ்தித்யஂதகார:*
*ஶரபாக்யம்மஹாகோரம்விக்ருதம்ரூபமாஸ்தித:*
*ஸூத:- ஶ்ருண்வந்துருஷயஸ்ஸர்வே - இத்யாதி*
*ஏதாவதுக்த்வாபகவாந்ஸவ்ரீடம் நரகேஸரீ -*
*அபாரமேககரணை: ஸமாப்யாத்யம் திகம்ஹரி*
*தத்ஸேஂத்யக்தவாந்விஷ்ணுர்ஜீவிதம்ஸ்வாபராதத:*
*தத்வக்த்ரம்தஸ்யக்குத்தியஞ்சஹ்ருத்வாஶரபவிக்ரஹ:*
*அதேந்த்ரியத்வமகமத்வீரபத்ரகூணாத்தவ:*

**காஞ்சிப்புராணம்.**

*"நன்னா லிரண்டு திருவடியு நனிகின் வாலு முகமிரண்டுங்*
*கொன்னார்சிறகு முருத்திரமுங் கொடும்பேரார்ப்பு மெதிர்த்தோற்றச்*
*செந்நீர் பருகிச் செருக்குநர மடங்க லாவி செகுத்துரிகொண்*
*டொன்னார்குலங்கண் முழுதழித்த வுடையான்சரபத் திருவுருவம்."*

**ஸிம்ஹக்நமூர்த்தயே நம:**

## சண்டேசாநுக்ரஹ மூர்த்தி.



முப்பத்தொன்றாவது

# சண்டேசாநுக்ரஹ மூர்த்தி.

சோழவள நாட்டிலே, பூர்வம் குமாரக்கடவுள் சூரபன்மனைச் சங்கரிக்குநிமித் தந் தென்றிசைநோக்கிச் செல்லுகையில், பரமபதியாகிய சிவபெருமானை யருச்சித்த தலங்களுளொன்றும், ஆசாரிய சுவாமிகளின் தேவாரத் திருப்பதிகம் பெற்றுள்ளது மான திருச்சேய்ஞலூரில் வேதியர் குலத்திற் காசிபகோத்திரத்தில் ஜனித்த யஜ்ஞதத்தன் என்றொருவனுளன். அவன் மனைவிபெயர் பத்திரை. அவ்விருவருக் குஞ் சற்புத்திரராக விசாரசருமர் என்பார் திருவவதாரஞ் செய்தனர். அவர்க்கு ஜந்மாந்தர அறிவுத் தொடர்ச்சியால் வேதவேதாகமங்களை யாவர்பாலு மோதா துணருமறிவு ஜனித்தது. தாய்தந்தையர் அவருக்கு ஏழுவயதிலேயே உபாயனஞ் செய்வித்து, தக்க ஆசிரியரைக்கொண்டு வேதமுதலியகலைகளைக் கற்பிக்குமுன் தாமே யறியுந் திறமுடையோரா யிருத்தல்கண்டு வியப்புற்றனர்.

அவ்விசாரசருமர் அளவில்லாத வேதாகமங்களிற் கூறப்படும் உண்மைப் பொருனெல்லாம் சர்வலோகசரண்யராகிய சிவபெருமானது திருவடிகளே என்றும், சிருட்டி - திதி - சங்காரம் - திரோபவம் - அநுக்ரஹமென்னும் பஞ்சகிருத்திய காரணமாக ஆநந்தத்தாண்டவம் புரியும் எம்பெருமானே நம்மை யாளாக வுடையாரென்றும் உண்மையறிவு தோன்றுவதால், சர்வான்மாக்களிடத்தும் அன்பின் வழியொழுகிவருங்காலத்தில், ஒருநாள் அவர் தம்மோடு வேதாத்தியயனஞ் செய்யும் அந்தணச்சிறுவரோடு அவ்வூரார் பசுநிரைகளுடன் கூடிச் செல்லுகையில், ஓரீற்றுப் பசுவொன்று அதனை மேய்ப்பானைக் குத்தப்போக, அவ்வாயன் சிறிதும் அஞ்சாமற் கோலினால் அதனை நன்றாய்ப்புடைத்தான். அதுகண்ட விசாரசருமர் சாஸ்திரங்களிற் கூறிய விஷயங்களை ஐயம்- திரிபு- அறியாமையாகிய முக்குற்றங்களு நீங்கத்தெளிந்தோராதலின் மனம் பொறாராகி அவ்விடையன் பாற்சென்று பசுக்கள் சமஸ்ததேவர்களும் முநிவர்களும் கணங்களும் பிரியாது சூழ்ந்திருக்கும் உறுப்புக்களை யுடையனவென்றும், சிவபெருமானுக்குத் திருமஞ்சனத்திற்குரிய பஞ்சகவ்வியங்களைக் கொடுப்பவையென்றும், சிவசாதனமா கிய திருவெண்ணீற்றுக்கு மூலம் அவற்றின் சாணமென்றுங்கூறி அப்பசுக்களைத் தாமே மேய்க்க விரும்பி, அவ்வாயனை நோக்கி “நீயிப்பசுநிரையை இனி மேய்க்க வேண்டாம், யானே மேய்ப்பேன்" என்றார். ஆயன் அஞ்சி வணங்கிச்செல்ல, விசாரசருமர் அவ்வப்பசுக்களை உரியா ரநுமதிபெற்று, சமீபத்திலுள்ள மன்னியா ற்றங்கரையிலும் நிறைவாகிய புல்லுள்ள விடங்களிலும் மேய்த்து, நீர்காட்டி, வெயில்வேளையில் நிழலிலிருக்கச்செய்து, அருணன் அஸ்தமனமாகுமுன் அவரவர் வீட்டிற்கனுப்பித் தம் வீடு சேருவர். இதனால் பசுக்கள் அழகோடு பெருகி மிகுதியாகப் பால் பொழிந்தன. பசுக்கட்குரியார் முன்னிலும் அதிகங் கறத்தல் கண்டு களித்தனர். அவை விசாரசருமரைச் சிறிதேனும் பிரியமாட்டாதனவாயும் அவரைக் கண்டவுடன் மடி சுரந்து பால் பொழிவனவாயு மிருந்தன.

அப்பசும்பால், சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாகுந் தகுதியுடைமையைக் கருதி, அப்பெரியார்க்குச் சிவார்ச்சனையில் அத்தியந்த ஆசை தலைப்பட்டது. உடனே மண்ணியாற்றங் கரையிலுள்ள ஓர் மணற்றிட்டையில் ஆத்திமரத்தின் கீழ் மணலினாலோர் சிவலிங்க நியமித்து, கோயில் - கோபுரம் - மதில் முதலியவை வகுத்து, பலவகைப் பத்திரபுட்பங்களைக் கொய்து சிவார்ச்சனை செய்து, புதுக் குடங்களைக் கொண்டுபோய்ப் பசுக்கள் மடியைத் தீண்ட அவைகனைத்துப்பால் பொழியும், அதனை யபிடேகஞ்செய்வார், தனக்குக் கிடையாத பூஜாவுபகரணங்களை மாநஸீகமாகச் செய்து முடிப்பார், இப்பூசையைப் பெருமான் அவ்விலிங்கத்தினின் றன்போ டங்கிகரிப்பர், பசுக்கள் இதனால் குறையாமல் முன்போலவே வீட்டுக்கும் பால் கொடுத்து வந்தன. இதனைப்போலவே விசாரசருமர் நெடு நாள் சிவார்ச்சனை செய்து வருகையில் ஒருவன் பார்த்து ஊராருடன் சொல்ல. அவர்கள் சபையாருக் கறிவிக்க, சபையார் யஜ்ஞதத்தனை வருவித்து "உன் பிள்ளை பாலைக் கறந்து வீணேமணலிற் சொரிந்து விளையாடுகின்றானாம்" என, யஜ்ஞதத்தன் "நான் அறியேன், இனி அவ்வாறு நடந்தால் அக்குற்றம் எனதே" என்று வீடு சென்று, மறு நாள் உதயத்திலதைச் சோதிக்கவெண்ணி, விசாரசருமர் பசு மேய்க்கச் செல்லுகையில், அவன் அவர் அறியாமல் பின்றொடர்ந்து சென்று, அவர் மண்ணியாற்றின் மணற்றிட்டிற் போனதுகண்டு அருகிருந்த குராமரத்திலேறி யொளித்திருந்தான்.

விசாரசருமர் வழக்கம்போல ஸ்நானஞ்செய்து, சிவலிங்கமுதலியன வகுத்து, திருப்பள்ளித் தாமஞ்சேகரித்துவைத்து பசுக்களிடங்குடங்கொண்டு சென்று, அவைசொரிந்த பாலைக்குடத்தோடு வைத்து, சிவார்ச்சனை முடித்து, பாற்குடங்களை யபிடேகஞ் செய்தனர். குராமரத்திலிருந்த யஜ்ஞதத்தன் அதுகண்டிறங்கி விறைந்தோடிவந்து பலகொடுஞ்சொற்கள் கூறி விசாரசருமர் முதுகிலடித்தனன். அவர் மனம் சிவார்ச்சனையி லழுந்தியிருந்ததால் அவருக்குப் புலப்படவில்லை. யஜ்ஞதத்தன் தான் பலமுறையடித்தும் அவருணராமை சிவார்ச்சனை யா லென்றறியானாகி, மிகக்கோபித்துப் பாற்குடங்களைக் காலாலிடறிச்சிந்த, உடனே விசாரசருமர் அது கண்டு செய்தவன் பிதா - குரு - பிராமணன் என்பதறிந்தும், அவன் செய்தது சிவபராதமாதலின், அவன் காலைத் துணிக்கக்கருதி அருகிருந்த ஓர் கோலையெடுக்க. அது மழுவாக, அதனாற் கால்களை வெட்டிச் சிவபூசையின் சேடத்தையுமுடித்தனர் சிவபெருமான் இடபாரூடராய் உமாதேவியுடன் தோன்றினர். விசாரசருமர் பேராநந்தமுட்டதும்பி இருவிழிவழியாய் ஆநந்த நீரருவிவார்தர மெய்ம் மறந்து பணிந்தனர். பெருமான் திருக்கரங்களாலெடுத்து "நம்முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனாக்கி நாம் ஏற்றுக்கொண்ட அமுதும் பரிவட்டமும் புஷ்பமும் உனக்கே தந் தோம்" என்று தமது சடையிலணிந்திருந்த கொன்றைமாலையை அவருக்குச்சூட்டிச் சண்டேசுர பதவிதந்தருளினர். அவரால் தண்டிக்கப்பட்ட யஜ்ஞதத்தனும் சிவபதமடைந்தனன்.

விசாரசருமருக்குச் சண்டேசுர பதவியை அநுக்ரஹித்த அவசரமே சண்டேசா நுக்ரஹ மூர்த்தமெனச் சாற்றப்படும்.

## திருத்தொண்டர் புராணம்.

*"தொடுத்த விதழிசூழ் சடையார்துணைத்தா ணிழற்கீழ் விழுந்தவரை*
*யெடுத்து நோக்கி நம்பொருட்டா லீன்ற தாதை விழவெறிந்தா*
*யடுத்ததாதை யினியுனக்கு நாமென்றருள் செய்தணைத்தருளி*
*மடுத்தகருணை யாற்ற விழுயுச்சி மோந்து மகிழ்ந்தருள.*

*அண்டர்பிரானுந் தொண்டர் தமக்கதிபனாக்கி யணைத்துநா*
*முண்டகலமு முடுப்பனவுஞ் சூடுவனவு முனக்காகச்*
*சண்டேசனு மாம்பதந்தந்தோ மென்றங்கவர் பொற்றடமுடிக்குத்*
*துண்டமதிசேர் சடைக்கொன்றை மாலைவாங்கிச் சூட்டினார்."*

**சண்டேசாநுக்ரஹமூர்த்தயே நம:**

---

முப்பத்திரண்டாவது

# தக்ஷிணாமூர்த்தி.

சிவபெருமான் ஸ்ரீகயிலையங்கிரியிற் சகலதேவர்களும் நிறைந்து தங்கடங்கள் இஷ்டகாமியங்களை விரும்பி யாங்குப் பெறும்படி திருவோலக்கங் கொண் டெழுந்தருளியிருக்கையில், இறைவியார் எழுந்து ஈசனை யிணையடி பணிந்து "எம்பெருமானே! எனக்குற்ற தாக்ஷாயணியென்னும் பெயரும், தேவரீரைப்பணியாத அத்தக்ஷனாற் போஷித்துவந்த வுடலும் மாறும் வண்ணம் வரம் வழக்குக" என விண்ணப்பிக்க, மஹாதேவர் மகிழ்ச்சியுற்று "மாதே! மலைமன்னன் நின்னை மகளாகப் பெறக்கருதி நெடுநாளாய் விடாத் தவம் புரிகின்றனன்; நீ அவன்பாலுற்று வளர்க்க யாம் வந்து மணஞ் செய்வோம் என்றருளிச் செய்தனர்.

அம்மையார் அரவாபரணரது அடித்தாமரையைப் பணிந்து கட்டளையைச் சிரமேலேற்று, விடைபெற்று இமயமலையை யடைந்து அவ்வாறே அருந்தவ மாற்றும் அசல மன்னன் அவாநிரம்ப ஓர் தடாகத்தில், தாமரைத்தவிசின்மேற் குழந்தை வடிவுகொண் டிருந்தனர். பர்வதராசன் பார்த்து மகிழ்ச்சியுற்றுத் தவப்பலன் கை கூடியதென்றுட்கொண்டு, அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு, மனையை யடைந்து மனைவியாகிய மேனையினிடத்துக் கொடுத்து வரலாற்றைக்கூற, மேனை போஷித்து வந்தாள். அம்மையார் ஐந்து வயது முதல் தவச்செயலிலிருந்து சங்கரனை மணந்தனர். (வித்தாரம் கல்யாணசுந்தரத்திற் காண்க.) இது நிற்க:

எமதன்னையா ரிவ்வாறு தவத்திருக்கையில், பிரமபுத்திரர்களாகிய ஸநகன் - ஸநந்தனன் - ஸாதனன் - ஸநத்குமாரன் என்னும் முநிவர் நால்வரும் வேதவராய்ச்சி செய்து முடித்து, பலவகைத் தவங்களையாற்றி, மீண்டும் வெள்ளி மலையையணுகி ஆண்டு முதற்பெருங்காவலாகவுள்ள திருநந்திதேவரைப் பணிந்து விடைபெற்றுத் திருச்சன்னதியுட்சென்று, கண்களாரக்கண்ணு தலைத் தரிசித்துச் சாஷ்டாங்கமாகத் தண்டஞ் செய்து, கரமிரண்டையுஞ் சிரமிசைச்சேர்த்து, “அருட்கடலே! அநந்தவகையாகிய ஆரணப்பொருளை ஆராய்ச்சி செய்தும் அடியேம், அகங்கள் அலைந்துகொண்டிருக்கின்றன, அவையடங்கியாங்கள் கடைத்தேறும்படி அவ்வேதத்தின் உட்கிடையாக வுள்ள பொருளை உபதேசித் தருளவேண்டும்" எனப் பிரார்த்தித்தனர். அங்கவர்க்கிசைந்த சங்கரர் “இங்கிருத்தீர்" என்றியம்ப, அவர்கள் அண்ணலாரது பங்கயப்பதத்தின் கீழ்த் தங்கியிருந்தனர்.

அப்பொழுது அரவாபரணர் நந்திபகவானை விளித்து “எம்மைத்தரிசிக்க எத்தகைய தேவர் முதலானாரெய்தினும் சந்நிதானத்துள் விடவேண்டாம். மதனன் வரில் வரவிடுக " என வாய் மலர்ந்து வாயிலிற்செல்ல விடையளித்தனுப்பி, விடையூந்தி முநிவர் விருப்பின்படி சிவாகமங்களிற் கூறப்பட்ட திரிபதார்த்தங்களாகிய பதி - பசு - பாச லட்சணங்களை விளக்கி வெளியிட்டனர். ஸநகனாதியர் “சங்கரா! எங்கள் மனம் விரிந்திருப்பதால் அவை யொடுங்கும்

அடைவாக ஞானோபதேசஞ் செய்யவேண்டும்" என விண்ணப்பித்தனர். தரியலர்புறங்கள் எரிபடப்பொடித்த பரசிவன் குறுநகை கோட்டிக் கூறுவதொன்று மிலராய், அப்பொருள் இவ்வாறிருக்கும்" என்று, சடாடவிதாங்கிய முனிவர்களுக்குச் சாற்றவேண்டி, திருக்கர மொன்றனைத் திருமார்பிற்சேர்த்து சிந்முத்திரைகாட்டி முனிவர்போல ஓர் க்ஷணப்பொழுது நிஷ்டைகூடிநின்றனர். அதனால் அவர்கள் நால்வரும் மனமொடுங்கி ஞானநிலை யுணர்ந்து, பேரின்பப்பெருக்கிலழுதி, தங்கள் செயலொன்று மில்லாதிருந்தனர். (அதுகாலையில் அமரர் மன்மதனையனுப்ப அவன் ஐயன்மேல் மலர்க்கணை தூய்ச் சாம்பராய் மாய்ந்தனன். வித்தாரம் காமதகனத்திற் காண்க.)

சிவபெருமான் யோகுங்கி "முனிவர்காள்! நீங்கள் முன்னிய வகையே நிஷ்டை யநுஷ்டித்து நீடூழிவாழுதிர்" என்று தமதிச்சையின்படி யேக விடுத்தனர். இறைவர் தக்ஷிண திசையை நோக்கி ஸநகனாதி நான்குமஹருஷிகளுக்கும் உபதேசித்த அவசரம் தக்ஷிணாமூர்த்தமெனச் சாற்றப்படும்.

**கந்தபுராணம்.**

*"இருவரு முணரா வண்ண லேனவெள் ளெயிறி யாமை*
*சிரநிரை யநந்த கோடி திளைத்திடு முரத்திற் சீர்கொள்*
*கரதல மொன்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி*
*யொருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான்.*
*இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு*
*சனகனே முதலா வுள்ளோர் தவலரு ஞான போதம்*
*பனுவலி னளவன் றென்னும் பான்மையைத் தெரிந்து முக்கட்*
*புனிதன தருளாற் றத்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார்.*
*தற்பர னினைய வாற்றாற் றாபத ருணருந் தன்மை*
*யற்புத ஞான போத மளித்திடுங் கணம தொன்றின்*
*முற்படு கமலப் புத்தேண் முதலிய வமரர்க் கெல்லாம்*
*பற்பல யுகங்கள் சென்ற பிறர்க்கினிப் பகர்வ தென்னோ."*

**தக்ஷிணாமூர்த்தயே நம:**

## யோகதக்ஷிணா மூர்த்தி.



முப்பத்து மூன்றாவது

# யோகதக்ஷிணா மூர்த்தி.

சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தமாக ஸநகன் - ஸநந்தனன் - ஸநாதனன் - ஸநத்குமாரனென்னும் மகருஷிகள் நால்வர்க்கும், பதி - பசு - பாசலக்கணங்களை யுபதேசித்த ஞான்று, அம்முநிவர் "அடிகளே! அடியேங்கள் அகமகன்றிருத்தலி னவையொடுங்கும் வண்ணம் திருவருள்புரிக" என்று விண்ணப்பிக்க, அருளாளர் "அந்தணரே! உடல் முதலிய யாவும் அழிபொருளெனவும் ஆன்மா ஒன்றே அழியாப் பொருளெனவுமறிந்து, ஞானத்தைக்கிரகிக்க வேண்டுவோர் மோட்சசாதனமாகிய சாஸ்திரங்களைக் கேட்டலும், சிந்தித்தலும், அவ்விஷயங்களைத் தெளிதலும், அஷ்டாங்க யோகங்களைச்செய்தலும் வேண்டும். சிலர் யோகமாவது ஞானேந்திய கன்மேந்தியங்கள் ஒன்றோடொன்று கலத்தலெனவும், மற்றுஞ் சிலர் ஆன்மாவுடன் கூடுதலெனவும், வேறு சிலர் பிராணவாயுவும் அபானவாயுவுஞ் சேருதலெனவுஞ் செப்புவர். ஈண்டெடுத்து விவகரித்த இவையெல்லாம் முடிவில்லாத யோகசாதன மாகமாட்டா; ஆனால் சீவான்மாவும் பரமான்மாவும் இரண்டறக்கலத்திலே யோகம் அஃதெவ்வாறெனில், புறக்கரணங்களை அந்தக்காணங்களிலொடுக்கி மனத்தை ஆன்மாவிலொடுக்கி உத்தமமாகிய ஆன்மாவைப் பரத்திற் சேர்ப்பிப்பதாம். யோகப்பயிற்சி யொன்றனாலன்றிப் பரம்பொருளைக் காணமுடியாது. பிராணன் - அபானன் - சமானன் - உதானன் - வியானன் - நாகன் - - கூர்மன் - கிருகரன் - தேவதத்தன் - தனஞ்சயனென்னும் ⁕ தசவாயுக்களைப் பந்தித்தாலன்றி மனம் ஒருநில்லாது.

---

⁕ தசவாயுக்களில், பிராணன் - இதயத்தியங்குவதும், அபானன் - உச்சர்க்கத் தலத்திடைநிற்பதும், சமானன் - கந்தரசக்குழியிற் சந்திடை நிற்பதும், உதானன் - நாபியினிற்பதும், வியானன் - சரீரமுழுதும் வியாபிப்பதும், நாகன் - நீட்டலும் முடக்கலும் கிளக்கலும், கூர்மன் - உரோமம் புளகித்திமைப்பதும், கிருகரன் - முகத் திடைநின்று தும்மலும் சினமும் வெம்மையும் விளைப்பதும், தேவதத்தன் - ஓட்டம் இளைப்பு வெயர்ப்பு விளைப்பதும், தனஞ்சயன் - உயிர் நீங்கினும் நீங்காதுடலினை வீக்கித் தலைகிழித்த கால்வதுமாகிய இயற்கையனவென்பர்.

---

சடங்கயோக சாதனத்தாலன்றிச் சத்தியத்தை யுணர்தலருமை. ஆதலின் அத்தகைய யோகத்தைச் சாற்றுவோம் கேட்பீராக: -

இயமம் - நியமம் - ஆதனம் - பிராணாயாமம் - பிரத்தியாகாரம் - தாரணை - தியானம் - சமாதி என அஃதெண் வகைத்து. அவற்றுள்,

இயமம் - கொல்லாமை - சத்திய வசனம் - கள்ளாமை - பிறர் பொருளிச்சி யாமை - பஞ்சேந்தியமடக்கல்.

நியமம் - தவம் - பரிசுத்தம் - தத்துவ நூலாராய்ச்சி - மனமுவந்திருத்தல் - கடவுள் வழிபாடு.

ஆதனம் எண்வகைத்து. அவையாவன: - தொடைக்கும் முழக்காலுக்கும் நடுவே யிரண்டுள்ளங்காலையுஞ் சேர்த்து இறுமாந்திருத்தலாகிய சுவத்திகம் - சகநப் பக்கத்திலிருகாற் பரட்டையு மாற வைத்து அவ்விருகாற் பெருவிரலையுங் கை பிடித்திருத்தலாகிய கோமுகம் - இருதொடை மேலும் இரண்டுள்ளங்காலையும் மாறித் தோன்றவைத்தலாகிய பதுமம் - வலத்தொடையில் இடக்காற்பரட்டைச் சேர்த்தி யிறுமாப்புற்றிருத்தலாகிய வீரம் - பீசத்தின்கீழ்ச் சீவனிடத்திற் பரட்டைவைத்திட முழங்கையை முழந்தாவில் வைத்து அவ்விருபதத்தையு மிருகையால் இறுகப்பிடித்து அசையாதிருத்தலாகிய பத்திரம் - இடக்காற்பரட்டாற் சீவனியையழுத்தி வலக்காற்பரடு அப்பரட்டின்கீழுந்த விருத்தலாகிய முத்தம் - முழங்கைகளிரண்டும் உந்திப்புறத்திலழுந்தப் புவியிற் கையூன்றிக் கால் நீட்டித் தலைநிமிர்ந்திருத்தலாகிய மயூரம் - எவ்வாறிருக்கின் சுகமுந்திடனும் எய்துமோ அவ்வாறிருத்தலாகிய சுகம் என்பனவாம்.

பிராணாயாமம் - பிராணவாயுவை இரேசக பூரக கும்பகஞ் செய்தல்.

பிரத்தியாகாரம் - உபாதியை நீக்கி உண்ணோக்குவது.

தாரனை - கண்டம் - இதயம்- நெற்றி - கபாலம் - நாபி இவற்றிலொன்றிற சந்ததஞ் சிந்தைவைப்பது.

தியானம் - ஐம்புலன்களை யடக்கி யோகஞ்செய்வது.

சமாதி - மேற்கூறிய இமயநியமாதிகளைப் பொருந்தி சுழுமுனை முதலாகிய நாடிகட்குக் காரணமாகிய நாபிக்குக்கீழுள்ளதாய் கிழங்கின் நடுவிலிருக்கும் எழுபத்தீராயிரம் நரம்புகளில், வலமும், இடமும் பிரிந்த இரண்டாகிய இடைகலை பிங்கலைகளைச் சுழுமுனையில் அடக்கி, அச்சுழுமுனையைக் கீழிருந்து தேகமத்தி யமாகிய கந்தஸ்தானம் வரையில் இருகிளையாகவும், அதற்குமேல் பிரமரந்திரம் வரையில் ஒருகிளையாகவும், மூலாதாரம் - சுவாதிட்டானம் - மணிபூரகம் - அநாகதம் - விசுத்தி - ஆஞ்ஞையாகிய ஆறாதார சக்கரங்களையும், அதின்மேல் நாலு சக்கரங்களையும் வியாபிக்கச்செய்து, பிரமரந்திரம்வரையில் ஆதாரதேவதைகளைச் சகளமாகவும், அப்பால் துவாத ஶாந்தத்தில் அசலராகியும் அமேயராகியும் அதுலராகியும் சூட்சுமராகியும் மஹானாகியும் ஞானக் கிரியாசத்தி சரீரியாகியும் வியாபகராகியும் சத்திமானாகியும் மலரஹிதராஹியுமுள்ள பரசிவமூர்த்தியை நிஷ்களமாகவும் தியானித்தலே சிவயோகமென்னுஞ் சமாதியாம்" என் றிவ்வகையாகத் திருவாய்மலர்ந்தருளி, இறைவர் அம்முநிசிரேஷ்டர்கள் அறிந்து கொள்ளும்படி திருவுள்ளங்கொண்டு தாமே சிறிது பொழுது அத்தகைய நிலையினின் றுணர்த்துவித்தனர்.

அதனால் உள்ளம் விரிவொழிந்து ஒடுங்கப்பெற்ற ஸநகன் - ஸநந்தனன் - ஸநாதனன் - ஸநத்குமார னென்னும் முநிவர் நால்வரும் முன்னோனது. முண்டகப்பதத்தை வணங்கி விடைபெற்றுத் தம் விருப்பின்படி சென்றனர். சிவபெருமான், பிரமபுத்திரர்களாகிய இருடியர் நால்வரும் எளிதிலுணரும் வகையாக யோக முறையைப் பயிற்றினமையால்; யோக தக்ஷிணாமூர்த்தி யென்பதோர் திருநாம மெய்தினர்.

**யோகதக்ஷிணாமூர்த்தயே நம:**

## வீணாதக்ஷிணா மூர்த்தி.



முப்பத்துநான்காவது

# விணாதக்ஷிணா மூர்த்தி.

சிவபெருமான் பக்தாநுக்ரஹ காரணமாகத் திருக்கயிலாய கிரியில், தக்ஷிணாமூர்த்தங் கொண்டெழுந்தருளி யிருக்கையில், தும்புருநாரதர் சுகர்முதலிய ருஷிசிரேஷ்டர்கள் இசைஞானத்தை நன்குணரவும், சாமவேதத்தை வீணையிலேற்றுப் பாடவும், தங்களுக்கருள்புரிய வேண்டும் என்னுங் கருத்துட் கொண்டோராய், கயிலை மலையையடைந்து கருணாமூர்த்தியைப் பணிந்து கைகூப்பிக் "கடவுணாயகா! அடியேங்கட்கு வீணாகானத்தை விளக்கி யருள வேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

அம்பிகாபதி "அந்தணரே! அவ்வாறே யாகுக இருத்தீர்" எனப் பின்வருமாறு அருளிச்செய்யத் தொடங்கினர்.

*"நீரிலே நிற்ற லழுகுதல் வேத னிலமயக்கும்*
*பாரிலே நிற்ற லடிவீழ்த னோய்மரப் பாற்படல்கோ*
*ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வுநிற்றல்*
*சேரினேர் பண்க ணிறைமயக்கப் படுஞ் சிற்றிடையே."* -

என்றபடியே மேற்கூறிய விலக்கத்தக்க மரங்கள் வீணாதண்டத்திற்காகா. அவற்றைக்கொண்டால் நால்வகை இசைக்குற்றத்தை யுண்டுசெய்யும். நால்வகைக் குற்றமாவன: -

*"செம்பகை யார்ப்புக் கூட மதிர்வு.*
*அவற்றுள்,*
*செம்பகை யென்பது பண்ணோ டுளரா*
*வின்பவி லோசை யென்மனார் புலவர்.*

*ஆர்ப்பெனப் படுவ தளவிறந் திசைக்கும்*
*கூட மென்பது குறிவுற விளம்பின்*
*வாய்வதின் வாராது மழுங்கியிசைப் பதுவே.*

*அதிர்வெனப் படுவ திழுமென லின்றிச்*
*சிதறி யுரைக்குந ருச்சரிப் பிசையே."* எனப்பெறும்.

**பஞ்சபாரதீயம்.**

*"இன்னிசை வழிய தன்றி யிசைத்தல்செம் பகைய தாகும்*
*சொன்னமாத் திரையி னோங்க விசைத்திடுஞ் சுருதி யார்ப்பே*
*மன்னிய விசைவராது மழுங்குதல் கூட மாகும்*

*நன்னுதால் சிதற வுந்த லதிர்வென நாட்டி னாரே."* -

ஆதலின் மேற்கூறிய குற்றங்களைப் பயக்கவல்லவாகிய விலக்குமரங்களை நீக்கி உத்தமமாகிய விதிக்கப்பட்ட மரங்களால் வீணா தண்டஞ் செய்யவேண்டும்.

*"சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு*
*நல்ல குமிழுந் தணக்குடனே - மெல்லியலா*
*யுத்தம மான மரங்க ளிவையென்றார்*
*வித்தக யாழோர் விதி."*

*"தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கு*
*முளதா யொருங் கூனமின்றி - யளவு*
*முதிரா திளகாது மூன்றாங்கூ றாய*
*துவாகில் வீணாதண் டாம்."*

*"பதுமங் கழல்குடந் தாடியொ டுள்ளிபண் பூண்டுநின்ற*
*விதியமர் தண்டு குடையே குடுமிமெய்க் கோட்டுறுபின்*
*மதியமர் போதிகை புட்டின் முகஞ்சுவர் மன்னெருத்தம்*
*விதியமர் பத்தர்க் குறுபென் றுரைத்தனர் மின்னிடையே."*_

என்றபடியே, நலமுடைய மரங்களைக்கொண்டு, நல்ல விலக்கண சம்பந்தமாகவே நால்வகைய யாழையுஞ் செய்ய வேண்டும். நால்வகை யாழாவன: - பேரியாழ் - மகரயாழ் - சகோடயாழ் - செங்கோட்டீயாழ் என்பனவாம்.

*"பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்*
*சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார் - தார்பொலிந்து*
*மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே*
*மின்னு முளவே பிற."*

என்றபடியே, நால்வகையாழுஞ் செய்கையில்; பேரியாழுக்கு நரம்பு இருபத்தொன் றும், மகரயாழுக்கு நரம்பு பதினேழும், சகோட யாழுக்கு நரம்பு பதினாறும், கெங்கோட்டியாழுக்கு நரம்பு ஏழுந்தொடுக்கவேண்டும்.

*"ஒன்று மிருபது மோரேழ்மேற் பத்துடனே*
*நின்றபதி னாறேழு நேடுங்காற் - குன்றாத*
*நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே*
*மேல்வகை நூலோர் விதி'*

என்னு மிலக்கணத்தின்படி யாழிற்கு நரம்பெண்ணித் தொடுக்கையில் "கொடும்புரி மயிர் தும்பு முறுக்கிவை நான் - நடுங்கா மரபிற் பகையென மொழிப்" எனக் கூறிய குற்றம் நீங்கி, நரம்புகளைத் தொடுத்து, பண்ணல் - பரிவட்டனை - ஆராய்தல் - தைவரல் - செலவு - விளையாட்டு - கையூழ் - குறும்போக்கு ஆகிய கலைத்தொழி

லெண்வகையா லிசையெழுப்பவேண்டும். அவையாவன: - பண்ணல் - பாடநினைத்த பண்ணுக்கு இணைகிளைபகை நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்குதல், பரிவட்டணை - அவ்வீக்கின நரம்பை விரல்களால் அகமும் புறமுங் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல், ஆராய்தல் - ஆரோகண அவரோகணவகையால் இசையைத்தெரிதல், தைவரல் - அநுசுருதியேற்றுதல், செலவு - ஆளத்திலே நிரம்பப்பாடுதல், விளையாட்டு - பாடநினைத்த வண்ணத்திற் சந்தத்தைவிடுதல், கையூழ் - பாடநினைத்த வண்ணத்திற்செய்த பாடலெல்லாம் இன்பமாகப் பாடுதல், குறும்போக்கு - குடகச்செலவுந் துள்ளற்செலவும் பாடுதல் என்பன.

மேற்கூறிய எண்வகைத்தாகிய கலைத்தொழிலால் இசையெழுப்பி, வார்தல் - வடித்தல் - உந்தல் - உறழ்தல் - உருட்டல் - தெருட்டல் - அள்ளல் - பட்டடை என்னும் எண்வகைப்பட்ட இசைக்கரணத்துடன் உடற்குற்ற முதலியவை நீங்கப் பண்பாடவேண்டும்.

வார்தல் முதலிய முறையே, வார்தல் - எடுத்தல், வடித்தல் - படுத்தல், உந்தல் - நலிதல், உறழ்தல் - கும்பித்தல், உருட்டல் - உருட்டு, தெருட்டல் - ஒலி, அள்ளல் - குடிலம், பட்டடை - தூக்கு எனப்பொருள்படும்.

உடற்குற்றங்களாவன: -

"*கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா*
*பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா - வெண்ணிலிவை*
*கள்ளார் நறுந்தெரியற் கை தவனே கந்தருவர்*
*உள்ளாளப் பாட லுணர்*" - என்றும்,

"*விரனான் கமைத்த வணிகுரல் வீங்காது*
*நான்மறை துள்ளும் வாய்பிள வாது*
*காட்டியுள் ளுணர்த்து நோக்கமா டாது*
*பிதிர்கனன் மணிசூழ் முடிநடுக் காது*
*வயிறுகுழி வாங்கி யழுமுகங் காட்டாது*" - என்றும்,

"*வயிறது குழிய வாங்க லழுமுகங் காட்டல் வாங்குஞ்*
*செயிரறு புருவ மேறல் சிரநடுக் குறல்கண் ணாடல்*
*பயிரறு மிடறு வீங்கல் பையென வாயங் காத்த*
*லெயிறது காட்டலின்ன வுடற்றொழிற் குற்றமென்ப*" -

என்றுங் கூறியபடியே உடற்குற்ற மொழியவும், பாடற் றொழித் குற்றமொழியவும், உள்ளாளப் பண்பாடவேண்டும்.

பாடற்றொழிற் குற்றமாவன: -

*"நாசி காகுளி வெடிகுரல் வெள்ளை*
*பேசாக் கீழிசை யொருபுற மோட்டல்*
*நெட்டுயிர்ப் பெறித லெறிந்துநின் றிரட்டல்*
*ஓசை யிழைத்தல் கழிபோக் கென்னப்*
*பேசுறு குற்ற மசைவொடு மாற்றி'*

என்றபடி, பாடற்செழிற் குற்றமொழிய உள்ளாளப் பண்பாட வேண்டும்.

உள்ளாளமாவது: -

*"உள்ளாளம் விந்துவுட னாத மொலியுருட்டுத்*
*தள்ளாத தூக்கெவித்த றான்படுத்தல் - மெள்ளக்*
*கருதி நலிதல்கம் பித்தல் குடிலம்*
*ஒருபதின்மே லொன்றென் றுரை" -*

என்றபடியே பாடுகவென்று, அவற்றின் உட்பிரிவுகளோடு நன்கு விளங்கத் திருவாய் மலர்ந்தருளி, யாழ்வாசிக்கும் முறையிலக்கணங்களை உபதேசித்ததற் கேற்ப, இலக்கியமாகத் தாமே தமது திருக்கரத்தில் யாழேந்தி, திருத்தோளில்ணைத்து நின்று இசையெழுப்பி வாசித்துக் காட்டினர். அதுகேட்ட முதிவர் உள்ளங் களிகூர்ந்த னர். தேவர் - மனிதர் - விலங்கு - புள் முதலிய பிராணிகளெல்லாம் இன்பமிக்கு வாழ்ந்தன. முநிவர் முன்னோனை வீணாகானத்தாற் சாமகீதம் பாடித் துதித்தனர்.

சிவ பெருமான் தம்மையடுத்த சுகர் முதலியோருக்கு வீணையினிலக்கணத் தை யுணர்த்தித் தமது திருக்கரத்து வீணையேந்தி வாசித்துக்காட்டிய திருக்கோலமே வீணாதக்ஷிணாமூர்த்த மெனப்படும்.

**வீணாதக்ஷிணாமூர்த்தயே நம:**

முப்பத்தைந்தாவது

# காலாந்தக மூர்த்தி.

மிருகண்டு முனிவர் என்பவர் முற்கலமுனிவர் தவப்புதல்வியாகிய மருத்துவதி யென்னுங் கன்னியை மணந்து, நெடுங்காலம் புத்திரரின்மையாற் காசிக்ஷேத்திரத் தை யடைந்து மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து சிவபெருமானை நோக்கிப் புத்திரப்பேற்றினையவாவித் தவஞ்செய்ய, பெருமான் பிரத்தியடிமாகி, "முநிவனே! தீக்குணம் - ஊமை - செவிடு குருடு - முடம் - தீராப்பிணி - அறிவின்மையாகிய இவற்றோடு கூடிய நூறுவயதுயிர்வாழும் புதல்வன் வேண்டுமா? அல்லது அழகு - நல்வடிவு - நோயின்மை - எமதன்பு முதலியவற்றைப்பெற்றுப் பதினாறு வயது சீவித்திருக்கும் மைந்தன் வேண்டுமா? சொல்க" என, முநிவன் "வயது குறைந்து வாழ்வானாயினுஞ் சற்புத்திரனையே விரும்பினேன்" என்று விண்ணப்பிக்க, அவ்வாறே வரமளித்து அந்தர்த்தானமாயினர். பிறகு சிறிது நாளில் அம்முநிவன் மனைவி கருப்பமுற்று நல்ல சுபமுகூர்த்தத்தி லோர் மைந்தனைத் தந்தனள். தேவர் புஷ்பமாரிபொழிந்தனர். தேவதுந்துபிமுதலிய முழங்கின. பிரமதேவன் அச்சிறுவனுக்கு மார்க்கண்டனென நாமகரணஞ்செய்தனன். உபநிஷ்டானம் - சந்திமிதித்தல் - அன்னப்பிராசன முதலியவற்றை முறைப்படி செய்து ஒரு வருடத்திற் றலைமயிர்களைந்து, இரண்டாம் வருடங் கர்ணவேதனமியற்றி, ஐந்து வயதில் உபநயனம் நடத்தி வித்தியாப்பியாசஞ் செய்வித்தனர். மார்க்கண்டேயர் வேதாகமமுதலிய நூல்களிற்றேர்ந்து சிவபெருமானே உண்மைப் பொருளென் றுணர்ந்து சிவபக்தியுஞ் சிவனடியாரிடத் தன்பு மதிகரித்தனர். அவ்வாறிருக்கையில் வயது பதினாறாகவே தாய்தந்தையர் இவரைப்பற்றி யெப்போதுந்துன்புற் றிருந்தனர். அதனையுணர்ந் தென்னெனக் கேட்க, உண்மை யுரையாராகிக் கடைசியிற் சிவபெருமான் தனக்களித்த வரத்தைத் தந்தை சொல்ல "எந்தையே! யான் சிவார்ச்சனை செய்து பெருமானது பேரருளால் இயமனைவென்று வருகிறேன் அஞ்ச வேண்டாம்." என்று கூறி விடைகொண்டு, காசிக்ஷேத்திரத்தில் மணிகர்ணிகைக்கருகே சிவலிங்கப்பிரதிட்டை செய்து பூசித்து எம்பெருமானால் "இயம பயம் நீங்குக" என்னும் வரம் பெற்று, மீண்டும் பூஜாகாலந்தவறாது பூசித்து வருகையில் மரணதசை குறுக, இயமனது கட்டளைப்படி ஓர் தூதன் வந்து அவரது பூசாபலத்தினாற் சமீபிக்கக் கூடாதவனாய்ச் சயமினி நகரஞ்சேர்ந்து தன் தலைவனுக்குச் சாற்ற, அவன் கோபித்துத் தன் கணிகராகிய சித்திரகுத்திரரை வரவழைத்து அவர் கணக்கை விசாரித்தறிந்து தன் மந்திரியாகிய காலனையனுப்ப, காலன் போய்ப்பார்த்துத் தன்னாலொன்றுஞ் சாயாதவனாய்த் திரும்பிவிட, இயமன் ஆலகாலம் போற் கொதித்துத் தன்மகிஷவாகனத்தை யழைப்பித்துத்தானே அதின் மீதேறி மழு - தண்டம் - பாசம் - சூலம் - இவற்றையேற்று, குடையுங்கொடியுந் தூதர் தாங்கிவர, மார்க்கண்டேயரைக் கிட்டியழைக்க, அவர் வராமையால் வெகுண்டு, நெருப்பெழச் சிரித்துப் பற்களைக்கடித்துச் சிரத்தையசைத்து, "பிரமாதி தேவர்களும் யானுமே ஒருகாலத்திறப் போமானால் நீயோவரமாட்டாதவன்" என்று கோபத்துடன் நீலமலைபோலநின்று கழுத்திற்பாசத்தை வீசியிழுக்க எத்தனிக்கையில், மார்க்கண்டேயர் பயந்து சிவலிங்கக்குறியைத் தழுவிகின்றனர்.

அப்பொழுது ஆபத்சகாயராகிய சிவபெருமான் "அஞ்சற்க" என்றருளிச்செய்து, அச்சிவலிங்கமூர்த்தத்தினின்றுந் தோன்றித் தமது இடது காலாலுதைக்க இமைப்பொழுதில் இயமன் உயிர்நீங்கினன். பின்னர்ப்பூமியில் மரணாவத்தையின் மையாற் பூதேவி சுமையாற்றாளாய்க் குறையிரப்ப, அருட்பெருங்கடல் மீண்டும் அவனை யெழுப்பினர். மிருகண்டுபுத்திரராகிய மார்க்கண்டேயரைச் சிரஞ்சீவியாக் கிக் காலனை யடக்கிய கோலமே காலாந்தக மூர்த்தமெனப் பெயர்பெறும்.

**கட்டளைக்கலித்துறை.**

"*பூமன் சிரங்கண்டி யந்தகன் கோவல் புரமதிகை*
*மாமன் பறியல் சலந்தர னிற்குடி மாப்பழுவூர்*
*காமன் கொறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியிற்*
*றேமன்னு கொன்றையுந் திங்களுஞ் சூடிதன் சேவகமே.*"

பிரஹ்ம சிரச்சேதம் திருக்கண்டியூரிலும், அந்தகாசுரவதம் திருக்கோவலூரி லும், திரிபுரதகனம் திருவதிகையிலும், தக்ஷசங்காரம் திருப்பறியலூரிலும், ஜலந்தரவதம் திருவிற்குடியிலும், கஜாசுரசம்ஹாரம் திருப்பழுவூரிலும், காமதஹநம் திருக்கொறுக்கையூரிலும், காலசம்ஹாரம் திருக்கடவூரிலும் நிகழ்ந்தனவெனக் கூறப்பட்டிருப்பதால், இயமனையுதைத்தது திருக்கடவூரெனக் கூறுநருமுளர்.

**கந்தபுராணம்.**

"*மதத்தான் மிகான் மற்றிவன் மைந்த னுயிர்வவ்வப்*
*பதைத்தா னென்னா வுன்னி வெகுண்டான் பதின்மூன்றுஞ்*
*சிதைத்தான் வாமச் சேவடி தன்னாற் சிறிதுந்தி*
*யுதைத்தான் கூற்றன்விண்முகில்போன் மண்ணுறவீழ்ந்தான்.*"

**காலாந்தகமூர்த்தயே நம:**

### முப்பத்தாறாவது

# காமதஹந மூர்த்தி.

சர்வாண்டங்களையும் பெற்ற தாயாகிய உமாபிராட்டியார் பர்வதராஜன் புத்திரியாகத் திருக்கோலங்கொண்டு இமோற்கிரியில் தவஞ்செய்து கொண்டிருக்கை யில், சிவபெருமான் ஸநகனாதிமுநிவர்கட்காகக் கணப்பொழுது யோகத்திருந்தனர். அப்பொழுது அவனிமாக்களுக்கும் அமரருக்கும் அநேக யுகங்களாயின. "அரசனெவ் வழி யவ்வழி யக்குடி" என்றாற்போலும், அவனசைந்திடிலுலகசைந்திடும்' என்றாற்போலும், எம்பெருமான் யோகத்திருத்தலால் எவ்வகையஜீவான்மாக்களும் ஞானத்திற் கூடிநின்றன. அது கண்ட அமரர்கள் "அரவாபரணன் அன்னையோடு கூடாது யோகத்துற்று முநிவர்போன் றிருத்தலின், எவரும் ஏந்திழையார் இணக்க மின்றி இறைவர்போலவே யிருக்கின்றனர். பிரமன் சிருட்டியும் பிறழ்ந்தது. அதுவுமன்றிச் சூரபன்மனால் துன்புற்றுச் சுவர்க்கலோகத்தைத் துறந்தோம்; என் செய்வோம்" என்று, திருக்கயிலையடைந்து எம்பெருமானைத் தரிசிக்கச் சமயமில் லையென்று திருநந்திதேவர் பணித்தமையாற் சிவத்தியானஞ்செய்து தவத்திருந்த னர். சிவபெருமான் இந்திரன் கனவிற்றோன்றி “வாசவ! வருந்தல்; விரைவில் பார்ப்பதியை மணந்து புத்திரனொருவனால் உங்கள் துயரை யொழிப்போம்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர்.

சிவபெருமான் நெடுநாள் யோகத்திருந்தமையால் வாசவன் பல தேவருடன் போய்ப் பதுமனுக்குக்கூற, பிரமன் யாவரையுங் கூட்டிக்கொண்டு விண்டுவைக் கண்டு விளம்ப, திருமால் "இறைவர் யோகம் நீங்கி இமாசலமன்னன் புதல்வியாக வந்த இறைவியை மணந்து ஒருமகனைப் பெறும்படி மன்மதனை விடுக" என மறுமாற்றக்கூற, மலரோன் மதனனை மனத்தில் நினைக்க, கருப்புவில்லி கணத்தில் வந்து கமலயோனியின் கழல்வணங்கி "என்னைச் சிந்தித்ததென்"? என, "கண்ணுதல் யோகு நீங்கிக் கவுரியை மணம்புரியும்படி மலர்க்கணைவிடுக” என. கேட்ட மதனன் “சிவசிவசிவசிவ" என்று செவியைக் கரத்தாற் பொத்திக்கொண்டு, எண்கணனை நோக்கி “இசையேன்" என மறுக்க சதுர்முகன் “தடுத்தாற்சபிப்பேன்" எனச்சாற்ற, அங்கசன் செங்கை குவித்துத் திசைமுகனை நோக்கி "உன்சாபத்தா லுயிரிழப்பதினும், பரமன்மேற் பாணப்பிரயோகஞ் செய்திறப்பது நலம் " எனக்கூறித் தனதுலகுசார்ந்து, தன்மனைவியாகிய இரதிதடுக்க, அவ்வேந்திழையைத் தேற்றி, அம்பறாத்தூணிகட்டி,சுப்பிரயோகம் - விப்பிரயோகம் - சோகம் - மோகம் - மரணமாகிய பஞ்சாவஸ்தைகளையுமுறையே உண்டு செய்யும் தாமரை - மா - அசோகு - முல்லை - நீலமென்னும் ஐந்து மலர்க்கணைகளும், சுருப்புநாண்பூட்டிய கருப்புவில்லும் மாந்தளிராகிய வாளும், எக்காளமாகிய குயிலும், முரசமாகிய கடலொலியும், மீனமாகிய கொடியும், சந்திரனாகிய குடையுங்கொண்டு கிளிகளாகிய குதிரைகள் பூட்டிய தென்றலாகிய தேரின்பேரில் இரதியுடனேறி. எண்ணில்லா மாதர்சேனை புடைசூழத் திருக்கயிலாயகிரியை யடைந்து பணிந்து, பரிசனங்களை நிறுத்தித் தேரினின்றிரதியுடனி றங்கி மலைவின்மேலேறி விலங்கு புள் முதலியனவு மோகங்கொள்ளத்தக்க வெவ்விய பாணங்களை விட, திருநந்திதேவர்

சீற்றத்தால் அவை அந்தரத்திலேயே வெந்தகன்றன. காமன் நந்தியெம்பிரான் கழல் பணிந்து "சந்நிதானத்தினுட்செல்ல விடைதரவேண்டும்" என வேண்டி, சிவபிரான் தமக்குமுன் கட்டளை செய்தவகையே "மேற்புறவாயிலாற் செல்க" என்ற மேலோனைப்பணிந்து, கொம்பனையுடன் குடவாயிலாற் பிரவேசித்துக் குழகன் யோகத்திருத்தல் கண்டு கண்கூசி நடுநடுங்கி மூர்ச்சித்து வீழ்ந்தனன். மனைவி உபசரித்தலால் மூர்ச்சை தெளிந்தெழுந்த மதனன் மாய மனந்துணிந்து, கறுப்புவில் லைவளைத்துச் சுருப்புநாண் ஏறிட்டுப்பஞ்சபாணங்களையும் பரமன்பேரிற் பிரயோகித்தனன். அம்மலர்க்கணை அமலரது அருமைத் திருமேனியிற்பட, ஐயர் நெற்றித் திருவிழியைத் திறப்ப, மதனன் நீறாயினன்.

இரதிபலவகையாகப்புலம்பிப் பெருமானைத்துதிக்க, உமாபதி "அம்பிகையை மணந்தபின்னர் உன்கணவனை யருள்வோம்" என, அவள் வணங்கி இமையமலை யிலிருந்தனள். தாணுசங்கரியின் தவத்தைச்சோதித்து ஸப்தருஷிகளால் மணம் பேசித் தேவியை மணந்தனர். அப்பொழுது இரதி அரனைவேண்ட ஐயர் உளத்திலெ ண்ணியவுடன் பண்டைய வடிவுகொண்டு காமன் பணிந்துநிற்க, எம்பெருமான் "இரதிக்கு மட்டும் உருவமாகவும், எனைய தேவமானுடர்க்கு அருவமாகவுமிருந்து உனது தொழிலைச் செய்யக்கடவாய்" எனத் திருவாய்மலர்ந்தருளினர். கந்தர்ப்பனை யெரித்தமையாற் காமதஹநமூர்த்தியெனக் கடவுளுக்குப் பெயராயது.

**இராமாயணம்.**

*அஶரீர:க்ருத:காம:க்ரோதாதேவேஶ்வரேணவா*
*அநங்க இதிவிக்யாதஸ்ததாப்ரப்ருதிராகவ*

**கந்தபுராணம்.**

"*எரிபுனை நமதுநோக்கா லிறந்தநின் னுடல நீறாய்*
*விரைவொடு போயிற் றன்றே வேண்டின ளிரதி யன்னாட்*
*குருவமா யிருத்தி யேனை யும்பரோ டிம்பர்க் கெல்லா*
*மருவினை யாகியுன்ற னரசியல் புரிதி யென்றான்.*"

**காமதஹநமூர்த்தயே நம:**

முப்பத்தேழாவது

# லகுளேசுவர மூர்த்தி.

இலகுளேஸ்வரர் வரலாற்றினை விளக்குவதற்கு முன்னர் அவரெழுந்தருளியிருக்கும் புவனத்தைக் கூறுதல் இன்றியமையாததாதலின், அவ்வுலகவளவைச் சிறிது கூறுகின்றேன். அது எட்டுக் கொண்டது திரிசரேணு ; அது எட்டுக்கொண்டது இலீகை; அது எட்டுக் கொண்டது யூகை; அது எட்டுக்கொண்டது யவை; அந்த யவை குறுக்காக எட்டுக்கொண்டது மாநாங்குலம். அது இருபத்துநான்குகொண்டது முழம்; அது நான்கு கொண்டது வில்; அது இரண்டுகொண்டது தண்டம்; அது இரண்டாயிரங்கொண்டது குரோசம்; அது இரண்டுகொண்டது கெவியூதி; அக்குரோசம் நான்கு கொண்டது யோசனை ; அந்த யோசனை நூறுகோடி கொண்டது பிருதிவி தத்துவத்திலுள்ள வோரண்டத்தின் விரிவு. உயரமும் அவ்வளவினதேயாகும்.

பிருதிவி தத்துவத்தில் ஆயிரகோடி அண்டங்களுண்டு. இதை கடந்த அப்புதத்துவம் பதின்மடங்கு விரிவுமுயர்ச்சியு மேற்றங் கொண்டிருக்கும். அப்பு தத்துவத்தைப்பற்ற, தேயுமுதற் பிரகிருதியீறாக அண்டங்கள் பதின்மடங்குவிரிவு முயர்ச்சியு மிகுந்திருக்கும், முன்னைய பிரகிருதியைப்பற்ற, இராகம் நூறுபாகம் விரிவுமுயர்ச்சியுமேற்றங்கொண்டிருக்கும். அவ்விராகத்தைப்பற்ற, வித்யாதத்துவம் நூறு மடங்குவிரிவு முயர்ச்சியுங் கொண்டிருக்கும். அவ்வித்தையைப்பற்ற நியதிதத்துவம் நூறுமடங்கு விரிவுமுயர்ச்சியுங் கொண்டிருக்கும். அந்நியதியைப் பற்ற, காலதத்துவம் நூறு மடங்கு விரிவுமுயர்ச்சியுங் கொண்டிருக்கும். முன்கூறிய காலத்தைப்பற்ற, கலாதத்துவம் நூற்றொருபதினாயிரம் விரிவுமுயர்ச்சியுங்கூடும். அதன்மேல் மாயை - சுத்தவித்தை - ஈச்சுரம் - சாதாக்யம் முதலிய தத்துவங்கள் ஒன்றற்கொன்று முறையே கோடி - கோடியே பதினாயிரம் - இலக்ஷம் - இரண்டிலக்ஷம் - மூன்றிலக்ஷ முதலிய பாகங்கள் அதிகப்பட்டு நிற்கும்.

இங்ஙன மிகுக்கு மண்டவிரிவில், பிருதிவிதத்துவமாகிய நிவர்த்திகலையின் ஒரு தட்டில், தேங்காய் விளங்காய் பரப்பினது போல ஆயிரக்கோடியண்டமுண்டு, அவை பொன்மயமாய் அருக்கர் பதினாயிரர் உதயமானாற்போல, குக்குடாண்டம் போலிருக்கிற அண்டகடாகப்புறம்பே இந்திரதிக்கு முதலிய பத்துத்திக்கிலுமுள்ள நூறு புவனத்தினும் நூறு உருத்திரரும், அவர்கள் புவனத்திற்குமேல், காலாக்கினியுருத்திரர் முதலியோர் புவனமாறும், அவற்றின்மேலிரண்டுமாக, அக்கலையில் நூற்றெட்டுப்புவனங்களுண்டு. அவை: - பத்திரகாளி - வீரபத்திர - த்ரிலோசன - விப்ஸுநப - விவாக - ஸம்வாஹத்ரிதசேச - த்ரியக்ஷ - கணாத்யக்ஷ - விபுசம்பு - தமஷ்ட்ரீ - வஜ்ர - பணீந்த்ர - உதும்பரேச - கிரஸந - மாருதாசந - குரோதந - அநந்த - விருஷதர - விருஷ - பலிப்பிரிய - பூதபால - ஜ்யேஷ்ட - சர்வ - சுரேச - வேதபாரக - ஞாநபுக் - சர்வஞ்ஞ -ஈஶ - வித்தியாதிப - ப்ரகாமத - பிரசாதக - சிரீத்ருக்கு - ரத்நத்ருக்கு - லஷ்மீத்ருக்கு - ஜடாதர - ஸௌம்யதேஹ - தந்யரூபவான் - நிதீதமேஹவாஹந - கபர்த்தி - பஞ்சசிக - பஞ்சாந்தக - க்ஷயாந்தக - தீக்ஷண -

சூக்ஷ்ம - வாயுவேக - லகு - சீக்கிர - ஸுநாத - மேஹநாத - ஜலாந்தக - தீர்க்கபாகு - ஜயபத்ர - ஸ்வேத - மஹாபல - பாசஹஸ்த - அதீபல - பல - தமஷ்ட்ரீ - லோஹித - தூம்ரக - விரூபாக்ஷ ஊர்த்துவசேப - பயாநக - க்ரூரத்ருஷ்டி - விக்ந - ந்ஹத்ரு - மாரண - ந்ருதி - தர்மபதி - தர்ம - வ்யோக்த்ரு - ஸம்யோக்த்ரு - கர்த்ரு - விதாத்ரு - தாத்ருஹாம் - ம்ருத்யு - யாம்ய - க்ஷயாந்தக - பஸ்மாந்தக - பப்ரு - தஹந - ஜ்வலந - ஹாகாதக - பிங்கள - ஸுதாசந - அக்நிருத்ர - திரிதசாதிப - பிநாகி - சாஸ்த்ரு - அவ்யய - விபூதி - பிரமரத்ந - வஜ்ரதேக - புத்த - அஜ - கபாலீச - ரௌத்ர - வைஷ்ணவ - பிராஹ்ம - ஹாடக - கூஷ்மாண்ட - காலாக்கினி முதலிய மேற்கூறிய புவனங்கள் ஏற்றெட்டனுள் முதலிற்கூறிய இரண்டு புவனங்களும் பிரமாண்டத்தின் மேலிருக்கும். அவையொழியப் பத்துப்புவனங்கள் பூமியின்மேலு யரவிருக்கும். அவையொழியப் பத்துப்புவனங்கள் பூமியின் அதோமுகத்திருக்கும். அவையொழியப் பத்துப்புவனங்கள் பூமியின் ஈஶாநத்திலிருக்கும். மற்றவை பூமியின் வடக்கிலும், வாயுமூலையிலும், மேற்கிலும், நிருதிதிக்கிலும், தெற்கிலும், அக்கினிதிக்கிலும், கிழக்கிலும், முறையே பப்பத்துப்புவனங்களும், ஒழிந்த ஆறுபுவனமும் காலாக்கினி தத்துவத்திலுமிருக்கும். இவை முறையே நிவர்த்தி கலையிலிருப்பனவாம்.

இதன்மேற் பிரதிஷ்டாகலையில், ஸ்ரீகண்ட - ஔம - கௌமார - வைஷ்ணவ - பிராஹ்ம பைரவ - கிருத - சுகிருத வென்கிற பிரகிருதியினுங் குணதத்துவத்தினு மிருக்கும் எட்டுப்புவனங்களுக்கும் ப்ராஹ்ம - ப்ராஜேச- சௌம்ய - ஐந்த்ர - காந்தர்வ - யக்ஷ - ராக்ஷச - பைசாச முதலிய புத்திதத்துவத்திலிருக்கும் எட்டுப் புவனங்களுக்கும், அகங்கார தத்துவத்திலிருக்கும் ஸ்துலேஸ்வர புவனத்திற்கும், மனஸ்தத்துவத்திலிருக்கும் ஸ்தலேம்வரபுவனத்திற்கும், ஞாநேந்திரியத்திலிருக்கும் ஶங்குகர்ந புவனத்திற்கும், கன்மேந்திரியத்திலிருக்கும் காளஞ்சரபுவனத்திற்கும், மண்டலேஸ்வர - மாகோட - த்விரண்ட சகலாண்ட முதலிய பூததன் மாத்திரையிலி ருக்கும் எட்டுப்புவனங்களுக்கும், ஸர்வணாக்ஷ - பத்திரகர்ண - கோகர்ண - மகாலய அவிமுக்த ருத்திரகோடீ வஸ்திரபாதமுதலிய ஆகாயதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவனங்களுக்கும், பீமேஶ்வர மகேந்த்ர அட்டாஹாஸ விமலேஶ்வர நகலாய நாகலாய குருக்ஷேத்திர கய முதலிய வாயுதத்துவத்திலிருக்கும் எட்டுப்புவனங்கட் கும், பைரவ சேதார மஹாகாள மத்தியமேச ஆம்ராதக ஜவபேச ஸ்ரீசைவ ஹரிச் சந்த்ர முதலிய தேஜஸ்தத்துவத்திலிருக்கும் எட்டுப்புவனங்கட்கும், இடையில் அப்புதத்துவத்தில் பாரபூத டிண்டி முண்டி ஆஷாட புஷ்கர நைமிச பிரபாச அமரேஸ்வர புவனங்களின் மத்தகத்தில் இலகுளேஶ்வரபுவனம் ஜோதிமயமுற்ற தாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும். அதில் அவர் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தின் யோசனை அநேக கோடி. அவர் திருமேனியின் பிரகாசயோசனை அநேக கோடி. சிங்காதனத்தின் யோசனை அநேக கோடி. அவர் வலப்புறம் மழு சூலமும், இடப்புறம் கலசமுமெடுத்த திருக்கரமுந்தாங்கி அப்புவனத்திலுள்ள ஆன்மாக்கட்குப் பாசநீக்கத் தின்பொருட்டு ஆணவாதி மும்மலங்களைப்போக்கி, நற்கதி அநுக்கிரகிக்க ஆசாரிய மூர்த்தியாய் வீற்றிருப்பர். இத்தகைய பெருமை கொண்டு ஒவ்வொருபுவனத்தும் ஒவ்வொரு மூர்த்தியா யெழுந்தருளியிருந்து ஆண்டுள்ள ஆன்மாக்களின் பரிபாகத்திற்குத் தக்கபடி யநுக்கிரகிப்பது போல லீண்டு எழுந்தருளியிருக்குஞ் சிவபேதமே இளகுளேஶ்வரமூர்த்தமெனப் பெயருறும்.

**காஞ்சிப்புராணம்.**

"*அடுத்தங்குடனாம்பரம்பொருளையன்றேவிரவவொட்டாமல்
தடுத்துமுக்கூற்றுயிருணர்வைத்தகையுமவிச்சைமுழுதிரிய
மடுத்தகருணைத்திருநோக்கின்மாணாக்கருக்குப்பொருளுரைப்ப
எடுத்தகரத்தான்வீற்றிருக்குமிலகுளேசன்றிருவுருவம்.*"

**இலகுளேஸ்வரமூர்த்தயே நம:**

---

முப்பத்தெட்டாவது

# பைரவ மூர்த்தி.

அமரர்கள் அஞ்சத்தக்க அந்தகன் போன்ற அந்தகன் என்னும் அசுரன் கரியமேகம் போன்ற பெரிய உடலும், சுருண்டு நெரிந்து செந்திறம்வாய்ந்த தலைமயிரும், யானைத்து திக்கை யனையகளும், தீயைச்சொரியுஞ் செவ்விய கண்களும், பிறைச்சந்திரன் போன்ற வக்ரதந்தங்களும், கண்டோரது கண் கூசத்தக்க காட்சியுமுள்ளவன். அவன் சிவபெருமானைத் தியானித்து, பஞ்சாக்கினிமத்தியிற் பலகாலங் கடுந்தவஞ்செய்தனன். அவ்வசுரனது அன்பின் முதிர்ச்சிக்கு அகமகிழ்ந்த அம்பிகைபாகர் இடபாரூடராய் இறைவியாருடன் காட்சியளித்து "யாது வரம்வேண்டும்? ஒதுக" எனத் திருவாய்மலர்ந்தருள, அசுரன் "அருள்வள்ளலே அரி அயன் முதலிய அமரர்களால் ஆவிசோராமையும், அகற்றவொண்ணாத ஆற்றலும் அடியேனுக்கு அருள வேண்டும்" என வரம் வேண்ட, பக்திவலையிற் படுவோராகிய பரமபதி "அவ்வாறே யாகுக" என அவனுக்குப் பிரசாதித்து அந்தர்த்தானமாயினர்.

கந்தரங்கறுத்த கண்ணுதலளித்த இந்தநல்வரத்தால் எவரையுமதியாது, அந்தமில்லாத அகந்தைபெற்ற அகந்தகாசுரன், அம்புயத்தவனையும், ஐம்படைக் கிறையையும், மகபதிமுதலிய வானவர்குழுவையும், அநவரதம் அல்லல்படுத்தி அமர்செய்து துன்புறுத்தி வந்தான். அத்தீயோனைச் செருச்செய்து செயித்தோர் தேவாசுரரி லொருவருமிலர். இவ்வசுரனால் இடையறாது எய்தும் இடருக்கு என்செய்வோமென் றேங்கி மனமிளைத்த வானவர் மானமற்று மாலை முன்செல்ல விடுத்து, தாம் யாவருங் குழுமிப் பின் சென்று அந்தகனையணுகி, "அரசே! உன்னை யன்றி உம்பரைப் பாப்போர் உலகத்தி லொருவருளரோ? இனி நீபணித்த கட்டளையைச் சிரமேற்கொண்டு நீ அறைந்தவண்ணமே தொழிலாற்றுவோம்; எங்களைக் காக்கவேண்டும்" எனக்கூறினர். அதுகேட்ட அந்தகாசுரன் தனது தலையையசைத்து, தடம்புயத்தை நோக்கி, புன்முறுவல் கண்ணிணையார் பண்ணவர்களைப்பார்த்து, "ஆகாயவாசிகளே! ஆர்ப்பரிக்கின்ற போர்ச்செயலில் ஆண்சிங்கத்தை யனையவன் யானொருவனே; ஆதலின் நீங்கள் இது முதல் நேரிழையாரை நிகரவடிவுற்றிருங்கள். கண்களில் மைதீட்டி, சேடியர்போலச் சேலை தரித்து, மாதர்கட்குரிய மணிபணியணிந்து, வாழ்நாள் கழிக்கக்கடவீர்; அவ்வாறன்றி உங்களில் யாவராயினும் ஆடவ டியாய் என் கண்முன் அகப்படின் அன்றேயழிந்து பெயரொழிவீர்; அதிதூரதேசத்திற் ககலுமின்" எனச்சொல்ல, அந்தரர் அந்தகன்பால் அத்தகைய உத்தரவு பெற்றதே சாலுமென்று அகமகிழ்ந்து நாணற்று நங்கையருரு வேற்றனர்.

வானவர் வனிதையர் வடிவமேற்றபின், மானமற்றவரென மதித்துமவர்களை, அல்லற்படுத்தும் அந்தகன் செயலுக்கு ஆற்றகில்லாது ஸ்ரீ மந்தரமலையை யடைந்து, மஹாதேவரைப் பணிந்து மால் - மலரோன் - மகபதி முதலிய யாவரும் மாதர்வடிவுடன் வளையணிந்த கையால் மலர்கொண்டு சிவலிங்கார்ச்சனை யியற்றினர். அவ்வந்தரத்தோரது அன்பின் மிகுதிக்கு அகங்களி துளும்பிய

அரவாபரணர் அறவிடையூர்ந்து அன்னையாருடன் காட்சி தந்தருளினர். அதுகண்ட அச்சுதன் - அலரோன் - அயிராணிகேள் வனாதி யமரர்கள் உள்ளத்திலானந்த வெள்ள முதித்து, "பரமபதியே! பாவியாகிய அந்தகன் படுத்திய பாட்டிற்குப் பதறிப் பரிதவித்திருந்தோம். பின்னொருதினத்தில் அன்னவற்பணிய, பண்ணவரே நீர் பாவையர் வடிவாயாவருமிருப்பின் இன்னல் செய்கிலேனென்றனன். அன்னது மேற்கொண் டரிவைய ருருவமாகியும், அநவரதம் அல்லல் புரிகின்றனன்; ஆதலின் அடியேங்களுயிர்க்கிரங்கி அவனது உயிரை யொழித்து, எங்கள் முதுகிலெய்திய புண்ணைப்போக்கி யருள்வேண்டும். அவ்வாறு தேவரீர் திருவுள்ளமிரங்காவிடின் யாக்கள் துன்பக்கடலினின்று கரையேறுத லில்லையாகும்" என்று பல்வகையாகப் பணிந்து துதித்தனர்.

சிவபெருமான் தம்மை யாசித்த தேவர்கட்குத் திருவருள்புரியத் திருவள்ளங்கொண்டு, 'இமையவரே! இனி நீங்கள் நண்ணிய பெண்ணுருவுடனே இமயவல்லியின் தோழியர்களாகிய கணங்களோடு வாழ்ந்திருங்கள். உங்களை எதிர்ப்பானாகில் ஓரிமைப்பொழுதில் அவனாற்றலைப்பாற்றுவதும்; அஞ்சன்மின்" என்றருளிச்செய்து அவர்கட்கருளுந் ததியிலிருந்தனர். அதனை யறியா அந்தகன் அவ்வானவரைப் பண்டுபோற் போர்செய்தொறுக்கும்படி வெள்ளமாகிய சேனையுடன் மேவித் துன்புறுத்தினன். அவன் துன்பிற்குச் சகியாத சேஷசயனன் முதலிய தேவர்கள் இமைப்பொழுதில் மந்தரமலையை யகன்று திருக்கைலாயகிரியை யடைந்து, திருச்சந்நிதானத்தின் திருவாயிலுட் பிரவேசித்துச் சிவத்தியானஞ்செய்து முறையிட்டனர். அருட்பெருங்கடலாகிய அண்ணல் தம்முன் நின்ற பைரவக் கடவுளுக்குத் தேவர் துயர் தீர்க்கும்படி அவ்வந்தகன துவலியையும், அவனை யுயிர்போக்கும் வழியையும், திருவாய்மலர்ந்தருளினர். இறைவரிசைத்தவற்றைச் செவிசாற்றிய எமது பைரவப்பெருமான் கோபாக்கிரசித்தமுடையவராய் வாள் போலும் பற்களையுடைய அந்தகாசுரனது ஆவியை யருந்தும்படி, நெருப்புப் பொறிளைச்சொரிந்து சுழல்கின்ற கண்களையுடைய கணங்களோடுங் கணமொன்றில் யுத்தசன்னத்தராய்ப் புறம்போந்தனர்.

தேவாசுரர்கட்குக்காலன் போன்ற கடியோன், அண்ணல் வருவதுகண்டு, அளவில்லாச் சினங்கொண்டு, கண்ணில் நெருப்பு விண்டு, கையிற்கொண்ட தண்டுடன் வலசாரி யிடசாரி சுற்றி எதிரேவா, இருவர் சேனையுஞ் செருவேற்றன. அமரரும் அசுரரும் அநந்தவகையாகப் போர்செய்தனர். அதில் அந்தகன் சேனை முறி பட்டது. தண்டு - சக்கிரம் - பிண்டி - பாலம் - வாள் - பல்லயம் - தோமரம் - ஈட்டி முதலிய எண்ணில்லா ஆயுதங்கள் பொடிப்பட்டன. மண்படுதூளி விண்ணிடையலவித் தினகரன் தேரிற்பூட்டிய எழு புரவி கண்களை மறைத்தன. கடலெனச்சோரி நீர்பரவியது. திசைகள் மயங்கின. நக்ஷத்திரங்களுதிர்ந்தன. உலக மதிர்ந்தது. அண்டகடாகம் பிளந்தது. இவ்வாறு பைரவக்கடவுளும் அந்தகனும் போர் புரிகையில், அசுரகுருவாகிய வெள்ளி செபித்த அமுத சஞ்சீவி மந்திரத்தால் அசுரச்சேனை ஆருயிர்பெற்று மீண்டும் வெகுளிகொண்டு சமர் செய்யத் தலை யெடுத்தது. அஃதுணர்ந்த சிவபெருமான் அவ்வெள்ளியை விழுங்கினர். கண்ணுதல் விடுத்த வயிரப்பெருமானது கணங்கள் கணமொன்றில் அந்தகன் சேனையை யழித்தன.

உலகிலுள்ள உயிர்களெல்லாம் நடுங்க, ஊழிக்காலத்தி லுதித்த ஸப்தசாகரம் போல இரைந்து வந்து, வடவாமுகாக்கினியைச்சிந்தும் வலியோனாகிய அந்தகாசுரனை ஐயன் தமது அருமைத் திருக்கரத்தேந்திய முத்தலைவேலின் முனையிற்குத்தி, மேலே தூக்கியெடுத்தனர். பத்தாயிரகோடி வருடமளவும் இரத்தவெள்ளமொழுகியது. பிறகு பைரவக்கடவுள் அந்தகனைக் கழுவேற்றியது போலச் சூலத்துடன் திருக்கரத்திற்றாங்கி, கருணாமூர்த்தியின் திருச்சந்நிதி யடைந்தனர். அந்தகன் அகந்தை நீங்கி, அநந்தவகையாகத் துதி புரிந்தனன்.

சோமசூரியாக்கினைகளையே திரி நேத்திரங்களாகவுடைய சயஞ்சோதி "யாது வேண்டும் என அந்தகனை வினாவ, அந்தகன் "பூதகணங்கட்கு நாதனாகவேண்டும்" என வேண்டினன். கருணாமூர்த்தியாதலின் பெருமான் அவனுக்கும் மனமிரங்கி. பைரவக்கடவுளது சூலப்படையினின் றிறக்கியருளி. பூதகணங்கட்கோர் தலைவனாக நியமித்தருளினர். பரமன் வயிற்றிலகப்பட்ட பார்க்கவன் சக்கிலத்துடன் தரணிமேற்றோன்றிச் சுக்கிரன் எனப் பெயரெய்தினன். தேவர்கள் தங்கட்குற்ற துயர்தொலைத்துச் சேயிழை வடிவையொழித்துத் தமது புத்திர மித்திரருடன் சகலசுகமும்பெற்று விழைந்தவகையே சிவார்ச்சனை முதலியன செய்து தத்தம் பதவிசார்ந்து குறைவின்றி வாழ்ந்திருந்தனர்.

ஹிரண்யாக்ஷன் குமாரனாகிய அந்தகாசுரனைச் சங்கரித்துத் தேவர் துன்பகற்ற எழுந்தருளிய அவசரம் பைரவமூர்த்தமெனப் பகரப்படும்.

**உபதேசகாண்டம்.**

*"பத்தா யிரகோடி யெனும்பரு வங்கடக்க*
*முத்தா ரையயிற் படைகொண்டனன் மொய்த்த சோரி*
*நெய்த்தா யுணங்கி யொழுக்குற நின்ற நீதி*
*பொய்த்தானை யுணக்கினன் பூதநாதன்.*
*முதலிக்கனை நெற்றி விழிக்கனன் மூட்டிவென்ற*
*குதலைக்கொடி பங்க னிடத்தெதிர் கொண்டு சென்றான்*
*விதலைப்படு வெந்திற லந்தக வெய்ய னைக்கார்க்*
*கதலிக்கொடியா மென முன்னரிற் காட்டினானால்.*
*கைகா லிடைதூங் குறவீங்கு கடற்கடுங்கார்*
*மைகான் மணிகண்டனை யந்தகன் வாய்வ ழுத்த*
*நெய்கா னெடுமுச் சிகைச்சூற்படை நீக்கிநோக்கி*
*யுய்கா ரணம்வேண்டுவ யாகொ லுரைத்தி யென்றான்.*
*மாதுக் கொருபங்கனை யங்கன் வணங்கி யைய*
*பூதர்க் கொருநா யகனாகுதல் போற்றி நின்றே*
*னீதக்க தெனப்பணி யென்று நிகழ்த்தி னானப்*
*போதத் தலைவன் னவற்காது புரிந்து நின்றான்.*

**பைரவமூர்த்தயே நம:**

## ஆபதோத்தாரண மூர்த்தி.



### முப்பத்தொன்பதாவது

# ஆபதோத்தாரண மூர்த்தி.

சர்வமங்கள தேஜோமயமாகிய சிவபெருமானே சகல ஜீவான்மாக்களுக்கும் ஆங்காங்கு நேர்ந்த இடுக்கண்களைக் களைவாரன்றி வேறொருவர் துணையாதற் குரியரல்லர்.

**பராஶரபுராணம்.**

*ராஜாதிராஜாஸர்வேஷாம்த்ரியம்பகஸ்த்ரிபுராந்தக:*
*தஸ்யைவாமசராஸ்ஸர்வேப்ரஹ்மவிஷ்ண்வாதயாஸ்ஸுர:*

அத்தகைய அருள்வடிவாகிய அண்ணல் அநவரதம் அளவில்லாத அமரர்கள் தம்மை நாற்புறமும் புடைசூழ்ந்து நிற்கவும், அமரர் - சித்தர் - அசுரர் - தைத்தியர் - கருடர் - கிந்நரர் - நிருதர் - கிம்புருடர் - கந்தருவர் - யக்ஷர் - விஞ்சையர் - பூதர் - பைசாசர் - அந்தரர் - முரிவர் - உரகர் - ஆகாயவாசிகள் - போக பூமியரென்னும்பதினெண்கணங்களும், பரஞானம் அபரஞானமாகிய இருவகை மதங்களையும் அருவியாறுபோற் சொரியும் ஐந்து திருக்கரங்களையும், யானை முகத்தையுமுடைய விநாயக மூர்த்தியும், அசுரர் பயமொழித்து அயிற்படையேந்திய அமரர் சேனாபதியாகிய அறுமுகப்பெருமானும், அபிராமி - மாயேஶ்வரி - கௌமாரி - நாராயணி - வராகி - இந்திராணி - காளி யென்னுந் திருநாமங்களை யுடைய ஸப்தமாதர்களும், சங்கு - சக்கிரம் - கதை - கட்கம் - கோதண்டமாகிய பஞ்சாயுதங்களைத் தாங்கிய பதுமநாபனும் கமலாசனத்திருந்து ஜீவான்மாக்களை யெல்லாஞ் சிருட்டிசெய்யும் பிரமதேவனும் எண்ணில்லாத தெய்வநங்கையர் குழாமும், சூரியன் -சந்திரன் - அங்காரகன் புதன் - பிருஹஸ்பதி - சுக்கிரன் - சனி - இராகு - கேதுவென்னும் நவக்கிரகங்களும் முப்பான் மூன்று கோடி தேவர்களும் அகஸ்தியர் - ஆங்கீரசர் - கௌதமர் - காசிபர் - புலத்தியர் - மார்க்கண்டேயர் - வசிஷ்டராகிய ஸப்தருஷிகளும் நாற்பத்தெண்ணாயிரவரான முநிவர்களும், பக்கங்களில் கும்பல் கும்பலாகக் கூடிப்பணிந்து தங்களுக்கு இடையூறு சம்பவித்த காலத்தில் திருவருட் சகாயம்பெறக் கருதித்துதித்து நிற்கவும் நவரத்தினங்களி ழைத்த பொற்சிங்காதனத்திற் சர்வாடம்பர ஸம்பந்நராய் வீற்றிருந்தருளி அமரர்க ளாற் கூறக்கேட்ட குறைகளைக் களைந்தருளுவர்.

அவர்கள் விரும்பியவண்ணம் துயர்தொலைக்கத் திகுவுள்ளங் கொண்டு மாநுடச்சட்டை சாத்தி இரண்டு திருக்கரங்களோடு தண்டமுங் கபாலமுமேற்று வீற்றிருப்பினும், அவ்வச் சமயங்கட்கேற்ப நானாவகையாகிய திருவுருவங்கள் கொண்டு அவரவர்கள் அவாவிய அடைவே இடுக்கண்களைந்து இஷ்டசித்திகளைப் பெறும்படி அநுக்கிரகஞ் செய்யாநிற்பர். அவரது பலவகைத் திருவுருவங்களையும் இத்தன்மையவென விளக்குதற்கு முடியா.

**திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.**

"*மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி*
*மயானத்தான் வார்சடையான் மாசொன் றில்லா*
*னொப்புடைய னல்ல னொருவ னல்ல*
*னோரூர னல்லனோ ருவம னில்லி*
*அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு*
*மவனருளே கண்ணாகக் காணி னல்லா*
*லிப்படிய னிந்நிறந்த ஒவ்வண்ணத்த*
*னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே.*'"

அம்முநிவர் முதலானார் ஆபத்துக்காலத்தில், தமது துயர் கூறியாசிக்க, அவர்கள் துன்பத்தைத் தொலைத்துச் சகாயஞ்செய்யும்படி எழுந்தருளியுள்ள திருக்கோலமே ஆபதோத்தாரணமூர்த்த மெனக்கூறப்படும்.

**காஞ்சிப்புராணம்.**

"*கணங்கள்கலுழிமதக்கடவுள்கதிர்வேற்குரிசிலெழுமாதர்*
*நிணங்கொடிகிரிப்படையேந்தனிலவெண்டோட்டுமலர்ப்புத்தே*
*ளணங்குநவக்கோண்முனிவரர்சூழ்ந்தணுக்கராகப்பொலந்தவிசி*
*னிணங்குமாவற்சகாயனெனுமிறைமைப்பெருமான் றிருவுருவாம்.*"

**ஆபதோத்தாரணமூர்த்தயே நம:**

## வடுக மூர்த்தி.



நாற்பதாவது

# வடுக மூர்த்தி.

சிவார்ச்சனைப்பலனாற் பெருவலியமைந்த துந்துபி என்போன் மைந்தனாகிய முண்டாசுரன் இளமைப்பருவத்திலேயே எம்பெருமானைநோக்கி, மழைநாளிலும் பனிராளிலும் நீரிலும், கோடை காலத்திற் பஞ்சாக்கினிமத்தியிலும் நின்று, பஞ்சேந்திரியங்களை யொடுக்கி, பசிதாக நித்திரை யொழித்து, பரமபதியைக் கருதிப் பலகாலம் அருந்தவஞ்செய்தனன். முக்கண் பொருந்திய முழுமுதற் கடவுள். முண்டாசுரன் கண்டானந்திக்கும்படி அரிபிரமாதியர் இருபுறம்வரவும், தும்புருநாரத ரிசைபாடவும், பார்ப்பதிசமேதசாய்க் காளகண்ட சதுர்ப்புஜ திரிநேத்திரங்களுடன் இடபவாகனாரூபராய்க் காட்சிதந்தருளினர். அசுரன் அதுகண்டு, அளவில்லா மகி;ச்சி கொண்டு, தனது தவத்தைநிறுத்தி, சங்கரனைத் தேவியோடு தரிசித்து, சாஷ்டாங்க மாக நிலமிசைவீழ்ந்து பலமுறை பணிந்து. பண்ணோசையாற்பாடி, பரவசனாய்க் கூத்தாடிக் கைகட்டி நின்று "கருணாநிதியே! கடையேனையும் ஒருபொருளாகக் கருதி காட்சி தந்தருளினீர்" என்று மெய்யன்போடு துதித்தனன்.

அன்பர் துதிக்கு அகமகிழும் ஐயன் "வேண்டிய வரம்யாது?" எனவினாவ "அத்தனே! அடியேன் தேவாசுரரி லொருவராலும் தோல்வியடையாமலும், தேவரீராலன்றி ஒருவராலும் உயிரொழியாமலும், இருக்கத்தக்க வலியுதவ வேண்டும்" என வேண்டினன். பெருமான் அவ்வாறே அநுக்கிரகஞ்செய்து அந்தர்த் தானமாயினர். முண்டாசுரன் அதிக வலியுற்றோனாய், முதலில் அசுரர்களைச் செயித்து அவர்களைத் தனது சேனையாகக் கொண்டனன். அதன்பின்னர் அமராவதி நகரமடைந்து, ஆண்டு வசிக்கும் அந்தரத்தவர்களைச் சிறைப்படுத்தி, இந்திரனோ டெதிர்த்துச் செருச்செய்து, ஐராவதம் - அரம்பையர் - சங்கநிதி - பதுமநிதி - காமதேனு - கற்பகதரு முதலிய கணக்கில்லாத வளங்களைப் கைப்பற்றி, தோல்வியடைந்த அயிராணிகேள் வனைச்சிறைசெய்ய எத்தனித்தனன். அஃதறிந்த ஆகண்டலன் அம்முண்டனுக்குத் தப்பித்துக்கொண்டு க்ஷணமொன்றிற் சத்தியலோகஞ்சார்ந்து சதுமுகக்கடவுளைச் சரணடைந்து அபயம் பெற்றனன்.

முண்டாசுரன் கோபமூண்டு, "முண்டகத்தவன் என்னிலும் வலியனா? அவனை இப்பொழுதே அடக்குவேன்" என்று அநேகஞ் சேனையுடன் அமர்க்கோலங் கொண்டு வருகையில், ஆரணன் அன்னவாகனமேறி ஆண்டெதிரடையக்கண்டு அவனை வாகனத்துடன் மாய்ப்பேனென்று மாயை செய்து வருவதை நோக்கிய மலரோன் மனம் வருந்தி யெதிர்த்தனன். இசைத்தற்கரிய யுத்தம் எண்ணில் காலம் இருவருக்கும். நிகழ்ந்தது. வேதா யாதுவகையினும் முண்டனைச் சண்டையிற் சங்கரிக்க வலியற்றவனாய் மஹாதேவரை மனத்திலிருத்தி வருத்தத்துடன் "மங்கை பாகனே! கங்கைவேணியாய்! எங்கணாயகா! சங்கரா சிவா!" என ஒலமிட்டழுதனன்.

உம்பர்கூட்டத்திடையே உமாதேவியாருடன் திருவோலக்கங் கொண் டெழுந் தருளியிருக்குஞ் சிவபெருமான் திசைமுகனது முறையீட்டைத் திருச்செவியிலே

ற்று வடுக மூர்த்தியைப்பார்த்து "நீ முண்டகத் தவிசோனது துயரொழிய முண்டாசுர னுயிரைமுடித்து வருதி" என ஆஜ்ஞாபித்தனர். வடுகநாதர் வள்ளல் கட்டளைப்படி வாயுவேகமாகச்சென்று மலரோனுக்குச் சேவைதந்து, "வருந்தாதே" என்று தேற்றி மனத்துயர்போக்கி, முண்டாசுரன் சேனையை மாத்திரையொன்றினில் மாய்த்தனர். முண்டன் கண்டு தணியாக்கோபங்கொண்டு சண்டைசெய்ய எதிர்க்க, சிறிது பொழுது அவனதாற்றலறியப் பொருதனர். இருவருக்கும் இணையில்லாச் சமரெய்தியதால் இமையவர் இடுக்கணெய்தி இறைவரைத்துதித்தனர். வடுகநாதப்பெருமான் ஒரு மாத்திரைப்பொழுதில் முண்டனைக்கொன்று நெடுநாளாய்ப் பசியுற்றோனுக்கு விருந்திட்டாற் போல இயமன் வயிறாரப்புசித்துத் தேக்கெடுக்கும்படி அவனுயிரைச் சயமினி நகருக்கு யாத்திரையனுப்பினர். பிரமன் துயரொழிந்து வடுகமூர்த்தியை வணங்கினன். தேவர்கள் புஷ்பமாரிபொழிந்தனர். வடுகமூர்த்தி மனக்களிப்புடன் இந்திரனை அமராவதிக்கேகவிடையளித்து, திருக்கயிலையையடைந்து விடையூர் திபால் விண்ணப்பித்தனர்.

பிரமன் தன்னைத் துன்புறுத்திய முண்டாசுரனுக்கு அஞ்சி முறையிட்ட பொழுது, அம்மலரோனது வேண்டுகோளுக் கிரங்கி விடையூர்தி அவ்விடுக்கண் தீர்ப்ப ன்கருதி விடுத்தமூர்த்தமே வடுகமூர்த்தமெனப்படும்.

**வடுகமூர்த்தயே நம:**

### நாற்பத்தொன்றாவது

# க்ஷேத்திரபாலக மூர்த்தி.

ஆதிமத்தியாந்த ரகிதராகிய சிவபெருமானே பலகோடி ஆன்மாக்களையும் பதுமனாகிப் படைத்தும், திருமாலாகிக்காத்தும், உருத்திரனாகிச் சங்கரித்தும், மகேஸ்வரனாகி மறைத்தும், ஸதாசிவனாகி அநுக்கிரகித்தும், பஞ்சகிருத்தியங்களை யும் இயற்றாநிற்பர். அத்தகைய அமலரது ஆணைவழித்தாய் அண்டகோடிகளும் விளங்கும் அவ்வண்டங்கட் கிடனாய்ச் சத்தசமுத்திரங்களையுஞ் சிறதி வலைபோல எறிகின்ற மூலமகாசமுத்திரமாகிய பெரும் புறக்கடலும், உலகத்தின் மத்தியில் மேருமலையும் விளங்கும்.

தனித்தனி இலட்சம்யோசனை விஸ்தீரணமான நாவலந்தீவும், உவர்க் கடலும், அதனிரட்டிப்பு விரிவாகிய இறலித்தீவும் கருப்பஞ்சாற்றுக்கடலும், அதற்கிரட்டிப்பு விஸ்தாரமாகிய இலவுத்தீவும், மதுக்கடலும், அதற்கிரட்டிப்புப் பரப்பாகிய குசைத்தீவும் நெய்க்கடலும், அதற்கிரட்டிப்பு விசாலமாகிய கிரவுஞ்சத் தீவும், தயிர்க்கடலும், அதற்கிரட்டிப்பு அகலமாகியசாகத்தீவும் பாற்கடலும், அதற்கிர ட்டிப்பளவாகிய புட்கரத்தீவும் சுத்தநீர்க்கடலும், பத்துக்கோடி யோசனை விஸ்தீரண மான பொன்மயமாகிய போகபூமியும், பதினாயிரங்கோடி யோசனை விஸ்தீரணமான சக்ரவாளகிரியும், ஒரு கோடியே யிருபத்தேழிலட்சம் யோசனை விஸ்தீரணமான பெரும் புறக்கடலும், கோடியோசனை விரிவுள்ள இருளுலகமும், நாற்பத்தொன்பதி லட்சம் யோசனை விஸ்தீரணமும் கோடியோசனை கனமுமான அண்டச்சுவரும் உடையது இவ்வண்டம்.

மேருமலையின் நடுவிலிருந்து அண்டச்சுவர்வரையில் ஐம்பது கோடி யோசனையாகக் கீழ்த்திசையெல்லையை விரித்துக்கூறினோம். ஏனைய மூன்று திசைகளும் இவ்வாறே விஸ்தீரணமுடையன. அகலமும் நீளமும் உயரமும் தனித்தனி நூறுகோடியோசனையாகவுள்ள இவ்வகை அண்டத்தினை ஒரூழிக் காலத்தில் மலையைப் போல அலைகள் தோன்றி, அண்டகடாகத்தைமுட்டி, அண்ட அடுக்குகளை நிலைகுலையச்செய்து, வெள்ளச் சுழியால் அட்டபர்வதங்களையும் அட்டதிக்கஜங்களையுஞ்சாய்த்து, பதினான் குலகங்களிலுமுள்ள பர்வதங்களை யெல்லாம் பாழ்படுத்தத்தக்க ஓர் பெருவெள்ளந் தோன்றியது. அதனால், நெடுங் காலத்தை ஆயுளாகக்கொண்ட அஷ்டமாநாகங்களும் நவக்கிரகங்களும் தேவர்களும் இந்திரன் முதலிய எண்டிசைக்கிறைவரும் கற்பகவிருக்ஷமும் சூரிய சோமாக்கினி யென்னும் முச்சுடரும் ஊர்வன நீர்வாழ்வன பறப்பன நாற்காலி தாவாரம் மாநுடரா கிய எழுவகைத்தோற்றமு மொழிந்து, சொல்லப்பட்ட பலபொருள்களுமழிந்து, எல்லாவுயிர்களும்முறையே மாயையிலொடுங்கி, அண்டமுழுவதும் அந்தகாரமய மாயிற்று. அநேக காலம் இவ்வாறகன்றது.

சூத்ரிகன் பதுமையைச் சிறிதுகாலம் நிறுத்திமீட்டும் அதனை யாட்டுவிக்க வெடுப்பான் போல, அருள் வள்ளல் அகிலத்தை அடைவே சிருட்டி செய்யத்

திருவுள்ளஞ்செய்து, சர்ப்பாபரணமும்புலியதளும் மழுமானேந்திய திருக்கரங்களும் கடுக்கைத்தொடையும் காளகண்டமும் கனல்விழியுங்கரந்து, கௌரியம்மையாரு டன் கலைகளெட்டெட்டையுங் கலைகளாய்த்தாங்கி, பிரணவமே தோணிவடிவாக நிற்க அதன்மீ தாரோகணித்தனர். நீங்கா நிலையாய் நிறைந்த பேரிருள் எம்பெருமானது திருவிருப்பின்படி நீங்கியது. அறமொன்றுதவிர அனைத்து மழியுமென்று கூறும் ஆன்றோர்கருத்தின் வண்ணம் எஞ்சிநின்ற வருணன் மகாதேவனைத் தோணிமேல் துணைவி யாருடன் வீற்றிருக்கக்கண்டு திருவடிகளைச் சேவித்துத் துதித்து, பவளம் முத்து முதலியவற்றா னருச்சித்து நிற்க, அமலர் அவ்வருணனுக்கு அருள்சுரந்து அநுக்கிரகித்து, அவளைவிலிருக்க ஆஜ்ஞாபித்து, திசைக்காவலரை நிறுவி; வெள்ளப் பெருக்கைத் தமது நுதல்விழியால் நொடிப்பொழுதில் விலக்கி, பண்டுபோற் பலரையும்படைத்து, அவரவர் பதவியில மர்த்தி, அகிலலோகங்களையும் ஆதரித்து அம்மையாருடன் திருத்தோணியில் வீற்றிருந்தருளினர்.

க்ஷேத்ரம் = பூமி; பாலகர்= காப்பவர்; - எனவே க்ஷேத்ரமாகிய உலகத்துக்கு ஊழிக்காலத்தில் உற்ற துன்பத்தைத் தீர்த்து ரக்ஷித்தருளினமையால் உமைகேள்வ னுக்கு க்ஷேத்ரபாலகமூர்த்தி யென்பதோர் திருநாமம் வழங்கிவருகின்றது.

**சீகாழித்தலபுராணம்.**

"*விரிதிசை புரப்பா னெட்டு வியன்கணத் தலைவர்க் கேவிக்*
*கிரிபுரை தண்ட மேந்திக் கேத்திர பால னாகிப்*
*புரிசடை முதல்தன் சூழ்ந்து புறந்தருந் தோணி மேற்கொண்*
*டரிபடா துலகங் காக்கு மன்னையோ டிருந்தா னெந்தை.*

*கமலநா ரணனொடுங்குங் கடையினு முதல்வ னாவா*
*னிமலனே யன்றி வேறு நிலையுநர் யாரே யார்க்குந்*
*தமரசா கரநீர் மோதத் தம்முயிர் சாம்பினாரை*
*யமரரென் றுரைப்பா ரன்னோர் பெற்றியை யறியா ரன்றே.*"

**க்ஷேத்திரபாலகமூர்த்தயே நம:**

நாற்பத்திரண்டாவது

# வீரபத்ரமூர்த்தி

காசிபப்பிரமாவின் மனைவியராகிய திதி அதிதி யென்னுஞ் சேயிழையார் பெற்ற தேவரும் அசுரரும், தீராப்பகையாற் செருச் செய்தல் வழக்கமாதலின், முன்னொரு காலத்தில் அவ்வாறடைந்த அமரில், அமரர்கள் வலியற்றவர்களாய் அயிராணி கேள்வனைத் துணைகொண்டு, அவுணர்சேனையை ஹதஞ்செய்ய, அவர்களில் வலியோர்களும் ஆற்றாது புறமுதுகுகாட்டி யோடினர். அகப்பட்டோர் மரம் சிரம் முதலிய உறுப்புக்கள் அறுபட்டு அவதியடைந்தனர். வருந்தி வலியிழந்ததானவர், வானவரைச் செயிக்க வகையே தென்றுமனங்குழம்பி, தமது குலகுருவாகிய சுக்கிரபகவானையடைந்து, அவனது துணைமலரடியைப் பணிந்து, தமக்குற்ற துன்பத்தைச்சொல்லி, "எமதுகுடிமுழுவதும் அடிமைகொண்ட குருநாதா! இமையவர் எங்களை யிற்றைப்போரி லலைத்தனர்; அவர்களை வெல்ல வல்ல வல்லமையுண்டாம் வகையை உபதேசித்தருள வேண்டும்" என்று பணிந்து வேண்ட, பார்க்கவன் பச்சாத்தாபமுற்று "பண்ணவரைப்பதைக்கப்பண்ணுவேன்; பதற வேண் டாம்" எனக்கூறித் தன் முன்னின்ற நிருதரைத் தேற்றினன்.

சாலகடங்கடர் சங்கடத்தைச்சாலவுஞ் சிந்தித்தவெள்ளி, வீரமார்த்தாண்டன் என்னும் தீரமுடைய ஒருவனே உம்பரைத் துன்புறுத்தத் தக்கவன் என்றுள்ளத் திலுன்னி, அன்னோனை யழைத்து "அம்புயத்தவனை அகத்திலிருத்தி அருந்தவமாற்றி, அதிகவல்லமை யடைந்து அமரரையலைத்தி” என்று தவஞ் செய்ய வேண்டிய முறைமையையுஞ் சாற்றிவிடுத்தனன். முநிவனது பதமுண்டகங்களைப் பணிந்து விடைபெற்ற வீரமார்த்தாண்டன் மலைச்சாரலையடைந்து பலகாலம் பதுமனை நோக்கித் தவஞ்செய்தனன். தவாக்கினி தேவருலகஞ்சென்று ஆண்டுள்ள அந்தரத்தவரைத் தகித்ததால், துன்புற்ற சரர் ஹிரணியகருப்பனைத் தரிசித்து “வீரமார்த்தாண்டன் தேவரீரைநோக்கிக் கடுந்தவம் புரிதலின், அத்தவாக்கினி சுவாலித்து அடியேங்களைத் துன்புறுத்துகின்றது. அதனை விலக்கியருள வேண்டும்” எனப் பிரார்த்தித்துக்கொண்டனர்.

பிரமதேவன் "அவ்வாறே யாகுக" எனத் தேவர்கட்குத் திருவாய்மலர்ந்து விடைதந்து, வீரமார்த்தாண்டன் தவச்சாலைக்கு அம்ஸவாஹனமிவர்ந்து சேர்ந்து, அவன் தவச்செயலாலிளைத்து என்புருவாயிருத்தல்கண்டு. இரக்கங்கொண்டு, கமண்டல நீரைமொண்டு அவன்மேற் புரோக்ஷிக்க, அதனால் அசுரன் பண்டுபோலா யினன். வேதன் "வீரமார்த்தாண்ட! நின் தவத்திற்கு வியந்தேன்; இறப்பு நிகழ் வெதிரிவெனு முக்காலத்தும் உன்னைப்போன்று தவமுஞற்றுவா ரொருவருளரோ? விழைந்தனகூறின் விரைவிற்றருவேன்" என, அசுரன் "அண்ணலே! திரிலோகத்தி லும் என்னைச் செயிப்போ ரொருவருமின்றி அரசாற்ற அவாவினேன்; அவ்வகைய வரம் வழங்க வேண்டும்" என யாசிக்க, கமலயோனி அவ்வாறே கடாக்ஷித்து அந்தர்த்தானமாயினன். அவ்வீரமார்த்தாண்டன் அலரோனளித்த வரத்தால் அகந்தை யுற்று, அளவில்லாத அசுரச்சேனையைக் கூட்டிக்கொண்டு அமர்க்கோலமாய்

அமராவதி நகரஞ் சார்ந்தனன். அஃதறிந்த அயிராணிகேள்வன் ஐராவதத்திலேறி எதிர்க்க, இருவருக்கும் இடையறாப்போர் பலகாலம் நிகழ்ந்தது; கடைசியில் ஆகண்டலன் தோற்க அவனை நகர்கடக்கத் துரத்தி இந்திரபட்டணத்திலேயே அரசுசெய்திருந்தனன்; அவ்வெற்றியால் மனத்திருப்தியடையாமல் அடிக்கடி அக்கினிமுதலிய திக்குப்பாலகரைத் துன்புறுத்தியும், தேவமாதரைச் சிறைசெய்தும், பசுமந்தைகளைக்கொன்றும், ருஷிசிரேஷ்டர்கள் செய்யும் யாக கருமங்களைச் சிதைத்தும், எண்ணிட்டுரைத்தற்கரிய இடுக்கண்புரிந்து வந்தனன்.

சகலவகையிலுந் தங்களைச் சங்கடப்படுத்திய வீரமார்த்தாண்டனைச் சங்கரித்து அவனாலாகிய வாதையொழிந்து உயிர்பிழைக்க, உம்பர்கள் ஒருங்குகூடி, ஆலோசித்துக் கொண்டிருந்தவற்றை நாரதமுநிவராற் கேள்வியுற்ற வீரமார்த்தாண் டன் சினமிகக்கொண்டு தேவர்களை யெல்லாஞ் செருச்செய்து, பெருந்துயர் விளைத்தனன். அதுபொழுது அமரர்களஞ்சியோட, வீரமார்த்தாண்டன் துரத்திக் கொண்டு பின்வர, தேவர்கள் திருக்கைலாயகிரியையடைந்து திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்தொனத்தினுட்பிரவேசித்து, சிவபெருமானைத் தரிசித்து, அஷ்டாங்க பஞ்சாங்கமாக நமஸ்கரித்து, தமக்குற்ற துன்பத்தை முறையிட்டனர். வானவர் வழங்கிய மாற்றத்தை, மனத்துட்கொண்ட மஹாதேவர் "அவனை யழிப்போம்; அஞ்சலிர்" என்று அநுக்கிரகித்து, வீரபத்ரரை விளித்து "அவனையழித்தி" என ஆஞ்ஞாபிக்க, ஆண்டவர் அநுமதிப்படி அவ் வீரபத்திரக்கடவுள் சிறிது சேனையை யுடன்வரக்கொண்டு, தானவத்தானையைச் சடுதியிறசங்கரித்து, வீரமார்த்தாண்டனுடன் எதிர்த்தனர். அவன் பலவகை மாயைபுரிய, வள்ளல் அதனை மாத்திரைப்பொழுதில் மாற்றி, அவனோடரும் போர் புரிந்து கடைசியில் வீரமார்த்தாண்டனைச்சங்கரித்து, தேவர் துயரைத்தீர்த்து, இந்திராதிதேவர்களை அவரவர் பதவியில் விடுத்து, உலகத்திலுள்ள உயிர்கட்குச் சுகவாழ்வளித்து, வெள்ளிமலையடைந்து தமது வெற்றிச் செயலைச் சிவபிரான்பால் விண்ணப்பித்த னர்.

தேவர் துயர் தீர்த்து, அவர்கட்குச் சுகவாழ்வளிக்கவும், வீரமார்த்தாண்டனைச் சங்கரிக்கவும், சிவபிரானால் அனுப்பிய கோலமே வீரபத்ரமூர்த்தமென விளம்பப் படும்.

**வீரபத்ரமூர்த்தயே நம:**

### நாற்பத்து மூன்றாவது

# அகோராஸ்த்ர மூர்த்தி

சிவப்பிரசாதத்தாற் பல போக பாக்கியங்களையும் பெற்றுத் தனக்கொருவரு நிகரில்லாது தருக்குற்ற சத்ததந்து என்போன் செல்வச்செருக்கால், தான் அத்தகைய பேற்றினை யடைந்ததற்குக் காரணம் சிவார்ச்சனையென்பதை மறந்து மதிமயங்கி (தக்ஷப்பிரசாபதியைப்போலவே) தானோர் வேள்வி செய்ய வேட்கையுற்றவனாய், வானவர் இருடியர் முதலானாரை வரவேண்டுமெனவிளித்து, மேரு மலைச்சாரலில் ஓர் யாகஞ்செய்ய எத்தனித்து, பிரமதேவனைப்பார்த்து "நீ யாகஞ்செய்விக்க" என்றனன், அருகிருந்த திருமால் வெருண்டு "முக்கண்ணான் சேவடியில் விழிமுளரி பெய்தன்றோ - சக்கரமு மலர்த்திருவுந் தணப்பருஞ்செல் வமுமடைந்தேன் - அக்கடவுளருள் சிறிது மடையாரேற் றம்பதத்தி - லெக்கடவுடேலென்றாங் கேமாப்புற்றிருக்குமால்" என்றும், பிரமதேவன் "யாக புருஷனாகிய சிவபெருமான் எழுந்தருளியிராத யாகம் இடையூறு படுமே யன்றி ஒருகாலும் நிறைவேறாது" என்றும், இந்திரன் முதலிய இமையவர் குழாமும் எஞ்சிய முனிவர்களும் "இஃதடாது; ஈசனையன்றி யாகஞ்செய்தல் நிஷ்பலம்" எனவுங்கூறித் தடை செய்தனர்.

அவ்வாறு அமரரும் முநிவரும் சாற்றக்கேட்ட சத்ததந்து சாலவுங் கோபமுற்று, பற்களைக்கடித்து மீசை துடிக்கக் கண்களில் நெருப்புப்பொறிகள் கக்கினன். கமலாசனன் இனி இவனால் யாது தீங்கெய்துமோவென்று மனத்திலுன்னி, ஒன்றுக் கூறமாட்டாமல் உடன்பட்டு, சங்கரரைநீங்கிய சகலதேவர்களையும் பல முநிவரையும் . உடன் கொண்டு யாகஞ்செயத் தொடங்கினன். இஃதிவ்வாறிருக்கை யில், த்ரிலோக சஞ்சாரியாகிய நாரதமுநிவர் சத்ததத்து செய்யும் யாகச் செயலையறிந்து விரைந்து நடந்து வெள்ளியங்கிரியையடைந்து, திருநந்தி தேவர்பால்விடைபெற்றுத் திருச்சந்நிதானமுற்று, சிவபிரானைப் பலமுறைபணிந்து கை கூப்பி, தயாநிதிகளிக்கும்படி தனது மகதியாழையெடுத்து, சாமகீதம்பாடினர். சிவ பிரான் "நாரத முநிவரே! யாது விஷயம்?" என ஒன்று மறியார் போன்று வினாவ, நாரதர் "சர்வஜகத் சுதந்தரமுற்ற சம்புவே! தேவரீரையின்றிச் சத்ததந்து செய்கின்ற யாகத்தையழித்தல்வேண்டும்" என்று விண்ணப்பித்து, சிவாநுக்ஞைபெற்றுத் தமது விருப்பின்படி சென்றனர்.

சிவபெருமான் மண்டலத்தைத் தேராகவும், உலகத்தைச் சக்கிரமாகவும், அக்கினிபகவானை வில்லாகவும், சந்திரனை நாணாகவும், வருணனைப் பாணமாகவுமமைத்து, குமாரக்கடவுளைத் தேர்ச்சாரதியாக நியமித்து, யுத்தக்கருவிகளைச் சித்தஞ்செய்து, அருகிருந்த வீரபத்ரரைசோக்கி "நீ அக்கொடியோனையும் அவன்யாகத்தையும் அழித்து வருக" என்று ஆஜ்ஞைசெய்ய வீரபத்திரர் அகோரரூபமுற்று அளவில்லாப் பூதசேனைகள் புடைசூழ்ந்துவர முருகப் பெருமான் இரதாரூடராய்த் தேரைச்செலுத்த மேருமலைச் சாரலையடைந்தனர். அது சங்க தியறிந்த இந்திரன் - பதுமன் - பஞ்சாயுதன் முதலானோர் பதைபதைத்து

நாற்பக்கங்களிலும் ஓடத்தலைப்பட்டனர். பெருமான் கணங்கள் கணக்கில்லாத தேவர் முனிவர் முதலானாரை முடித்து. இந்திரன் பிரமன் முதலிய இமையவர்களையுஞ் சந்திர சூரியரையும்பற்றிக்கொணர்ந்து முன்னிறுத்த, அவர்களைத் தமது திருவுள்ளத்திற் கியைத்தவண்ணந் தண்டஞ் செய்து, கையிலேந் திய வருணாஸ்திரத்தைப் பிரயோகித்து அந்தயாகத்தை யழித்தனர். சத்ததந்து சாலவுஞ்சினந்து சமர்க்கோலமுற் றெதிர்வர, அவனை அகோராஸ்திரமொன்றினால் ஹதஞ்செய்தனர். முனிவர் வெருண்டோடினர். இறந்த இமையவர் மனைவிமார் "எம்பிரானே சரணம்; எங்கட்கு மாங்கல்யப்பிச்சையருள்க" எனப் பிரார்த்தித்தனர். பெருமான் கருணை கூர்ந்து திருவுள்ளமிரங்கினர். அதனால் அவர்கள் அவ்வாறே உயிர்ப்பெய்திச் சாஷ்டாங்கமாகப்பணிந்து தத்தம் பதவிசார்ந்து வாழ்ந்தனர். ஏனைய தேவர்களையுஞ் செல்ல விடுத்து, தமது சேனாவெள்ளத்துடன் வீரபத்ரர் திருக்கயிலையை யடைந்து சிவபிரானிடம் விண்ணப்பித்து வீற்றிருந்தனர்.

அகோராஸ்த்ரமொன்றினாற் சத்ததந்துவைச்சங்கரித்து அவன் மகத்தையுஞ் சாய்த்தமையால், பெருமான் அகோராஸ்த்ரமூர்த்தி யெனப் பெயரடைந்தனர்.

"*தக்கனைப்போ லோர்வேள்வி தான்செய்யத் தேவரெல்லா*
*மிக்கவலி யுண்ணவந்த வேலையின்கண் - அக்கணமே*
*விண்டலமே தேராக மேதினியே வண்டியெனக்*
*கொண்டிழுக்கும் வாயு குரகதமாய் - மண்டு*
*மணலே சிலையாக வம்புலியே நாணாப்*
*புனலே யடுசரமாப் பூட்டிச் - சினவடிவேற்*
*சேனா பதிதானே தேர்கடவிச் செல்லவெதிர்*
*வானோர்கள் கண்டு மருண்டோட - வானாத*
*விந்திரனை மாலயனை யீராறு சூரியரைச்*
*சந்திரனை மாதவரைத் தாக்கியே - வெந்திறல்சே*
*ரந்த மகமு மடந்து வருஞ்சத்த*
*தந்துவையு மாய்த்த தகை போற்றி*"- என்றார் பிறரும்.

**அகோராஸ்த்ரமூர்த்தயே நம:**

## தக்ஷயஜ்ஞஹத மூர்த்தி.



### நாற்பத்து நான்காவது

# தக்ஷயஜ்ஞஹத மூர்த்தி.

சகலலோகங்களையும் பெற்ற தாயாகிய சங்கரியார் ஓர் லீலாமாத்திரையாய் தக்கன் புதல்வியாகத் திருவவதாரஞ்செய்தனர். சிவபெருமான் தேவியாரை மணந்து மறைந்தருள, அன்னையார் பண்டுபோலத் தவச்செயலிலிருந்து இறைவரால் வெள்ளியங்கிரியுற்று வீற்றிருந்தனர். * அதனை அவ்வம்மையாரது தோழியரிற் சிலர் சொல்லக் கேட்ட தக்கன் மிக்க கோபமுற்று விடையூர்தியை மதியா திருந்தனன். [* வித்தாரம் கௌரீ லீலா சமந்விதத்திற் கண்டுகொள்க.] அமரர் அஃதறிந்து "நக்கனை மதியாத தக்கன் தனது தலையையிழத்தல் சரதம்; அவன் பணித்த வகையிலொழுகும் பண்ணவராகிய யாமும் அவனுடனழியவரும்" என்று ஒருங்குகூடித் தக்கமாபுரியைச் சார்ந்து, அவனுக்குத்தக்க புத்திமதிகளையறைய, அவன் "ஆனால் அதற்கென் செய்வது?" என, தேவர்கள் "திருக்கயிலையையடைந்து சிவபிரானையுந் தேவியாரையுஞ் சேவித்துவருக" என, அவனதற்கிணங்கி, அவ்வந்தரத்தவரை அங்கேயே நிறுத்திவிட்டு வெள்ளிமலையையடைந்து முன்வாயிலிற் புகக்கண்ட கணநாதர் சிலர் "கண்ணுதலை மதியாத கடையோய்! உட்செல்லாதொழிக" என்று கடிந்து தடுத்தனர். தக்ஷன் அதனால் வருந்தித் தக்ஷணம் திரும்பித் தனது நகரமடைந்து தன்னைச் சங்கரன் பாலனுப்பிய உம்பருக்கு ஆங்குற்ற விசேஷத்தையுரைத்து, "இமையவரே! இற்றை முதல் ஈசனை மதியாதிருக்க வேண்டும்" என, எல்லோருமியைய, அந்தரத்தவரைத் தமது விருப்பின்படியேக விடையளித்து விடுத்தனன்.

பிரமன் ஓர் வேள்விசெய்ய வுத்தேசித்துத் தனதேவல்செய்யுந்தனயரை நோக்கி, திருமால் முதலிய தேவர்களை அழைத்துக் கொண்டு வரும்படி யனுப்பி, தக்கன் முன் சாற்றியது சிந்தித்துத் தானிறக்கினு மிறக்கவென்று திடங்கொண்டு, திருக்கயிலையங்கிரியையடைந்து, திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத் தினுட்சென்று சிவபெருமானைத் தரிசித்துப்பணிந்து இருகரமுங் குவித்து "எம்பெருமானே! யான் செய்யும் யாகத்திற்குத் தேவரீர் எழுந்தருள வேண்டும்" என்று விண்ணப்பிக்க, நம்பர் "நம் முருவான நந்தியை விடுப்போம்" என்றருள், பதுமன் பணிந்து சென்று, தக்கனுக்குஞ்சொல்லித் தனது மனோவதி நகரமடைந்து, யாகஞ் செய்யத்தொடங்கினன். திருமால் முதலிய தேவர்கள் தக்கனுடன் யாகசாலை சார்ந்தனர். திரு நந்திதேவர் சிவாஜ்ஞையின்படி நூறு கோடி பூதர்கள் புடைசூழ யாகசாலையையெய்தினர். பிரமன் பார்த்தெழுந்து நமஸ்கரித்து ஆதனத்தமர்த்தினன். தக்கன் அதுகண்டு யாவரழைத்தனரென்று கருதி அம்ஸ வாகனனை நோக்கி "நீயாகஞ் செய்வதைச் சிவனுக்குச் செப்பினை; அவனா லனுப்பிய நந்தியைப் பணிந்து நம்முன்னிருத்தனை; பிதாவாதலின் உன்னை வெட்டாது விடுத்தேன். பித்தனாகிய சிவன் அவிப்பாகங் கொள்ளுதற்குரியனோ? இதுகாறும் அறியார்கள் செய்து வந்த வழக்கத்தைவிலக்குக. விஷ்ணுவே உயர்ந்தவர். அவருக்கு அவியை முன்னேயளித்துப் பிறகு ஏனையோருக் குதவுக" எனக்கூறினன். திருநந்திதேவர் சீற்றங்கொண்டு தக்கன் முகத்தைப்பார்த்து "மூடா!

பரமபதியை நிந்தித்தாய்; ஈசனையன்றி யாகஞ்செய்வோர் தலையறுக" என்றும், எம்மிறைவனையிகழ்ந்த உனது தலையொழிக; சிவநிந்தை செய்யும் நின்னோடு சேர்ந்த தேவர்கள் தீயோனாகிய சூரபன்மனால் துன்புறுக" என்றும், சாபமிட்டு அவ்விடம் விட்டுப் பூதகணங்களுடன், வெள்ளிமலை சென்று மாதுபாகனாகிய ஆதிநாதனிடம் விண்ணப்பித்து வீற்றிருந்தனர். நந்தியெம்பெருமான் நவின்ற சாபத்திற் கஞ்சி யாவரும் யாகஞ்செய்யாதொழிந்தனர்.

அவ்வாறிருக்கையில், தக்கன் ஒர்யாகஞ்செய்ய நினைத்து விச்சுவகன்மனால், கங்கைக்கரையில் ஆயிரங்கோடியோசனை யகலமும் மிகவுந்தமுமான ஓர் யாகசாலை திருமிக்கச்செய்து, சில தூதர்களை நோக்கி "சிவபிரானை நீங்கிய தேவர்களையெல்லாம் அழைத்து வாருங்கள்" என அனுப்ப அவர்கள்கூற, அமரர்கள் யாவரும் ஆண்டடைந்தனர். திருமால் - திசைமுகன் - தேவேந்திரன் முதலிய யாவரும் அங்கிருக்கையில், சாரங்கனைச் செயித்துள்ள ததீசி முநிவர் வந்தனர். அவரது வருகையைக் கண்ட தக்கன் தனக்கஞ்சி வந்தனரெனக்கருதி, "மாதவரே! வருக" என்று ஓர் ஆசனமளித்தமர்த்தினன். முநிவர் "என்னை யழைத்த தென்னகாரணம்?" என தாக்ஷாயணியைச் சங்கரன் வதுவை செய்தபின் நிகழ்ந்தன கூறி, "என்னை இகழ்ந்த ஈசனுக்கு அளிக்கும் அவிப்பாகத்தைமாற்ற ஓர்யாகம் ஆற்றவேண்டுமாதலின், உம்மையழைத்தோம்" என உரைப்ப, ததீசிமுநிவர் "சங்கரனே ஜகதீசன், அவ்வெம்பெருமானை விரோதித்து யாகஞ்செய்யேல்" என தக்கன் பலவகையாக வினாவி ஆக்ஷேபிக்க * முநிவர் அவ்வினாக்கட்கேற்ப விடைகூறினர். [* கந்தபுராணம் ததீசியுத்தரப்படலத்திற் காண்க.] அரிவைக்கு அர்த்தசரீரமளித்த அரனே அனைவர்க்குமுயர்ந்த கடவு ளாக இருக்கினுமிருக்க: யான் அவனுக்கு அவிப்பாகங்கொடேன். ஒன்று முறையாமறபோக." என, ததீசி முதிவர் கடுங்கோபங் கொண்டு "இறைவனையின்றி யியற்றும் யாகம் இமைப்பி லொழியசீகடவது. உன்தலை யறக்கடவது. உன்னோடிருக்கும் உம்பர் உயிரொழியக்கடவர்" என்று சபித்து, "முநிவர்களே! உங்கள் குலத்தினியற் கைவிலகி அரனையும் அடியாரையும் விபூதி உருத்திராக்கத்தையும் ஒழிந்து மோட்சமடையாமற் பிறந்து பிறந்திறக்கக்கடவீர்" என்று சாபமிட்டு, பலமுநிவர் புடைசூழ்ந்துவரத் தமதிருக்கை சார்ந்து சிவத்தியானத் திருந்தனர். அதன்பிறகு தக்கன் அந்தணருக்கன்னமிட்டு ஆடை பொன் முதலியன அபரிமிதமாக வளித்து யாகஞ்செய்ய ஆரம்பித்தனன்.

அதனையறிந்த நாரதமுநிவர் திருக்கயிலைமலையை யடைந்து சிவபிரா னைப் பணிந்து நிற்க, பரமன் "உலகத்திலென்ன விசேடம்! பகர்க" என, முநிவர் "சங்கரா! தக்கன் பலதேவருடன் யாகஞ்செய்கின்றனன்" என விண்ணப்பித்தனர். உமாதேவியார் உடனே எழுந்து உம்பர்நாதனைப்பணிந்து "எம்பெருமானே! எந்தையி யற்றும் வேள்வியைக் காண வேட்கையுற்றேன்" என, விமலர் விடையளித்தனுப்ப, ஓர் விமானமேறிச் சிலசேடியருடன் பிதாவின்பாற் செல்ல, தக்கன்கண்டு சற்றும் உபசாரஞ் செய்யாமலிகழ்ந்து "இப்பொழுதே போக" என்று ஈசனையும் நீதித்தனன். கௌரி கடுங்கோபங்கொண்டு கயிலையங்கிரியை யடைந்து கருணா மூர்த்தியைப் பணிந்து "தக்கன் யாகத்தை யழித்தருளவேண்டும்" என்று விளம்பினர். முன்னோன் அதனை முடிக்க முன்னியவளவில், நிமலரது நெற்றிவிழியினின்றும் ஆயிரந்

திருமுகங்களும், இரண்டாயிரந்திருக்கரங்களுங்கொண்டு வீரபத்ரர் திருவவதாரஞ் செய்தனர். அப்பொழுது அம்மையாரது அளவில்லாச்சினத்தால் ஓராயிரஞ்சிரமும், ஈராயிரங் கரமுங்கொண்டு உக்கிரமாகாளி யுதித்து வீரபத்ரர் பக்கலிற் றேவியாய் வீற்றிருந்தனள்.

வீரபத்ரர் விரைவுடன் சிவபிரானையுந் தேவியையும் பணிந்து "அடியேனுக்கு யாது கட்டளை?" என வினவ, நம்பர் "நம்மை மதியாத தக்கன் யாகசாலைக்குப்போய் அவிப்பாகங்கேள், கொடுத்தால் பெற்றுவா; தடுத்தால் அவன் தலையையறுத்து ஆண்டுள்ளோர் ஆவியையகற்றி அவ்யாகத்தை யழித்துவிடு; யாமும் வருவோம்" என ஆஜ்ஞாபிக்க, வீரபத்ரர் விடைபெற்று, தமது திருமேனியில் தோன்றிய பூதப்படையும், காளியும் உடன்வர, உலகமதிரவும், சுவாசத்தாற்கடல்கள் நிலை கலங்கவும், பேரிரைச்சலால் திக்குகள் செவிடுபடவும். சுமையாற்றாது ஆதிசேடன் முடிகுலுங்கவும், நடையாலெழுந்ததூளி ஸப்தசமுத்திரங்களையுந் தூர்த்துச் சூரிய வொளியை மறைக்கவும், தக்கன் யாகசாலையை யடைந்து பூதச்சேனையை அதன்வாயிலிலும் மதிற்புறத்திலுங் காவலாக நிறுவி, காளியுடன் யாகசாலையுட் பிரவேசித்து, யாகஞ்செய்வது கண்டு, நெருப்புப் பொறிபறக்க விழித்து, இடிபோற் கர்சித்து, வெற்றிபொருந்திய ஊதுகொம்பினை நாதஞ் செய்தனர் அவ்வோசையால் ஆண்டுள்ளோர் செவிடுற்று அவரது சொரூபக்காட்சியாற் கண்கலக்கங் கொண்டு மூர்ச்சித்து விழுந்தனர்.

தக்கன் வீரபத்ரக்கடவுளைப்பார்த்து "இங்கு வந்த காரணமென்ன?" என. வீரபத்ரர் "சங்கரனனுப்ப இங்ஙனம்வந்தனன்; அன்னோன் அவிப்பாகத்தை யென் முன்னளிக்க" என, ஆவிவழங்க நிற்கும் தக்கன் "அவிவழிங்கேன்" என்றனன். அதுகேட்ட அண்ணல் ஆண்டுள்ள அமரரைநோக்கி "உம்பர்காள்! உங்கள் சம்மதம் யாது?" என வினாவ, அவர்கள் ஊமைகள் போல ஒன்று முரையாதிருந்தனர். உடனே உக்கிரமூர்த்தி உலக நடுங்க நகைத்துத் தண்டாயுதத்தாற் சார்ங்கனை யடித்தனர். மாதவன், அதனால் மரணாவஸ்தைக்குச் சமானமாக மதிமயங்கிவீழ்ந்தனன். பிரமனைத் தலைகுலுங்கும்படி குட்டினர். அவனும் அவனிமேல் அவசமாயினன். சந்திரன் கண்டு ஐரேலென்றெழுந்தோட அவனை உடல்தேயும்படி காலினாலே தேய்த்தனர். தேவர்கள் பலரையுந் துன்புறுத்தினர்.

வீரபத்ரரேவலால் வெளியேநின்ற பூதகணங்கள் அவ்வெம்பிரானது கட்டளையேற்று, மதிலையிடித்துக்கொண்டு போரெனப்புகலக் களிப்புற்று, சூரியவொளியும் பின்னிடச்சிரித்து, யாகசாலையிற்றீயூட்டி, யூபஸ்தம்பங்களை யொடித்து, சிலதேவர்களைத் தின்று சில முநிவர்களைமென்று, அமரர்சிலரை அண்டமுகடுசேரப் பந்தடித்து, அட்டதிசைகளிற்செல்ல அநேகரை வீசி, சத்த மேகங்களையும்பிழிந்து தாகந்தணித்து, தம்பங்களிற்கட்டிய யாகப்பசுக்களைக் கட்டவிழ்த்து விடுத்து, இயக்கர்கிந்நரர் முதலானாரது நா - மூக்கு - விழி - கரம் - சிரம் - முழந்தாள் முதலியவற்றைச் சோதித்துப் பல கொடுந்தொழில் புரிந்தனர். இதுகண்ட யஜ்ஞன் இனியாவதில்லையென்று கலையுருக்கொண்டு காலாற் கால்போற் படரக்கண்ட வீரபத்ரர் அக்கலையின் கொம்பைமுரித்து அம்பொன்றினால் ஆருயிர்மாய்த்தனர். பூதா "நாத! அச்சுதன் ஒருவனே எமைத்தடுக்கின்றனன்" என,

சிங்கவேறு போன்ற வீரபத்ரர் "எங்குளான், எங்குளான்" என்று சென்று மங்குல் போல் வடிவமைந்தமாயனைக்கண்டு "நெடியோய்! கொடியோய்! கொன்றைவேணியன் குரைகழல் மீது ஆயிரங்கமலத்தால் அருச்சனை புரிகையில், அன்னதி லொன்றினை ஐயன் மறைப்ப, அம்பகமிடந்தப்பி அன்னவனருளாற் சுதரிசனம் பெற்றதை எதனால் மறந்தனை? யாகபுருஷனாகிய நீதக்கனைக் காத்துச் செருச்செய்வையோ? உயிரிழப்பையோ? உரைக்க" என, தாமோதரன் "தக்கனைக்காப்பேன். சமர்செய்க" என்று கருடன் பேரிலேறினன். அழற்கண் வந்த அண்ணல் அதுகண்டு அண்ட கோளகையும் அப்பாலுள்ள அண்டமும் மேருமலையும் சக்ரவாள கிரியும் வெடிபடவும், எண்டிசையுஞ் செவிடுபடவும், மேகவண்ணனுக்கு ஒரிடிபோல் தோன்றவும், கையிலிருந்த வெற்றிச்சங்கத்தை வாய்வைத்தூதிப் போர்தொடங்கினர். இருவரும் பெருஞ்சமர்செய்தனர். கடைசியிற் கருடனது சிறகுகளை வெட்டி, கையிற்பிடித்த வில்லை முரித்து, ஏனைய ஆயுதங்களையும் இமைப்பிற் சங்கரித்து, மாயனையடித்து, மூர்ச்சைப்படுத்திப் பூமியில் விழச்செய்தனர். மூர்ச்சை தெளிந்தெழுந்த முகுந்தன் கையிலிருந்த சக்கரத்தைச் செலுத்த, ஐயன் அதனைப் பற்றி அயின்றனன். விண்டு வாள் கொண்டு முன்வர, உக்கிரமூர்த்தி ஹூங்காரஞ் செய்தனர். திருமால் சித்தங்கலங்கிச் சித்திரம் போறசெய்வதொன்றுமில்லாது நிலமிசை வீழ்ந்து கிடந்தனர். [விண்டு இச்சமரில் ஏனைய தேவர்கள் தண்டிக்கப் பட்டாற்போல , தனது உயிரையும் போக்கினதாக வடநூற் பிரமாணங்களால் விளங்குகின்றது அவற்றுட் சிலவற்றை யீண்டு தகரித்திருக்கின்றேன்.]

அதுபொழுது அமரரில் அநேகர் மரிந்தோரும் மதிமயங்கினோருமாய் மகச்சாலையில் வீழ்ந்து கிடந்தனர். தக்கன் வெகுண்டு தண்டாயுதந் தாங்கிவர, வீரபத்ரர் அவன் தலையையரிந்து யாககுண்டத்திலிட்டு ஓமாக்கினிக் கூட்டினர்; பலதேவர்களையுங்கண்டு அவர்களில் இந்திரனைத் தண்டாலெரிந்து மூர்ச்சை யாக்கி, அக்கினியின் அஸ்தத்தையறுத்து, அண்டமுகட திரும்படி வீராட்டகாசஞ் செய்து, இயமனை இருகரங்களாற் கசக்கிப்பிழிந்து அவனது வெற்றுடலை நாற்றிசையிலும்வீசி, அவனது மேதியின் கொம்பைமுரித்து வீழ்த்தி, நிருதியின் தோளையரிந்து, வருணன் உந்தியை வாளினாற்றோண்டி, வாயுவை உசுவாசத்தால் வருத்திப் பறத்தி, கோபத்துடன் குபேரன் தோளைக் கச்சினாற்கட்டி, பூடாவென்னும் பரிதியைப் போடாவென்று பல்லுதிர்த்து, பகன் என்னும் பகலோனது அம்பகமகிழ்ந்து, அரியமாவென்னும் ஆதவன் றோளையறிந்து, சமீபித்த தக்ஷபுத்திரர் பதின்மரை வாளாற் சேதித்து, வசுக்களென்மரையும் மருத்துவரையும் வாய்வழி சோரி வழியப் புடைத்து, பல நூல்களைக் கற்றும் பரமசிவனே பரம்பொருளென் றுணராது அப்பொருள் மால் என்று மால்கொண்டுள்ள வானோர் பலரையும் வதைத்தனர்.

தக்கன் தலையிழந்தது கேட்ட அவன் பிரதானபத்தினி வேத வல்லிபாங்கியர் சிலருடன் ஆங்கடைந்தனள். அவள் வருவது கண்ட காளியம்மை அவளது காதினை யறுத்துத் தரையிற்போட்டு தக்கனது மற்ற மனைவிமார் தலைகளை யறுத்துப் பந்தாடி, நாமகள் திருமகள் நாசியையரிந்து, இந்திராணியின் இணைமுலை களைந்து, அதிதியினது அதரத்தை அரிந்தெறிந்து, அக்கினிதேவன் மனைவியாகிய

சுவாகா தேவியின் வலமூக்கையும் இடத்தனத்தையும் நகத்தாற்கிள்ளி ஏனைய மாதரது செவி - நா - மூக்கு - முலை முதலியவற்றைக்கொய்து துன்புறுத்தினள்.

வீரபத்ரர் வெகுளிமீக்கொள் ஆகாயத்தில் அசரீரி "கோபந்தணிக" எனக் கூறக்கேட்டு, உக்கிரர் சிறிது சினங்குறைந்தனர். சிவபெருமான் உமாதேவியாருடன் இடபாரூடராய் ஆண்டுக்காட்சி யளித்தனர். வீரபத்ரமூர்த்தியும் காளிகாதேவியும் அவ்விருவர் முன் சென்று பணிந்தனர். உலக மாதாவாகிய உமாபிராட்டியார் அவ்யாக சாலைமுற்றும் தேவர் - அரம்பையர் - முநிவர் - முநிமாதர் - தக்ஷவம் சத்தர் முதலானாரது பிரேதங்கள் வீழ்ந்து கிடக்கக்கண்டு மனம் பொறாது "எம்பெருமானே! இவர்கள் யாவரும் இவ்வேழையேன் பொருட்டிறந்தோராதலின், இவர்களை யெழுப்பியருள வேண்டும்" எனப்பிரார்த்திக்க, கருணாமூர்த்தி களிகூர்ந்தாராய் வீரபத்ரராலேயே அவர்களையெழுப்பி உயிரீந்தருளினர். இமைப் பொழுதி லூயிர் பெற்ற இந்திரைகேள்வன் - என்கண்ணன் இமயவர் - இருடியர் யாவரும் இமயவல்லியாருடன் இடபாரூடராய் ஆகாயத்திற்சேவைதந்த ஜகதீசனது திருவடிகளை நிலமிசைப் பலமுறை வீழ்ந்து பணிந்து பரவிப்பயந்துநிற்க, பரமகாருண்யமூர்த்தி "அஞ்சாதீர்கள்" என்று திருவாய்மலர்ந்தருளித்தேற்றினர். பதுமன் தன் தனயனாகிய தக்கனைக்காணாது பதைத்து பகவானைப் பணிந்து 'கொடியோனாகிய தக்ஷனையும் எழுப்பிக் கொடுக்கவேண்டும்" என்றிரப்ப, சிவ கடாக்ஷத்தினால் வீரபத்ரர் - தக்கன் சரீரத்தின்மேல் ஆட்டுத்தலையை யமைத்து "எழுக" என, அவனும் எழுந்து உள நாணி அச்சமுற்று விமலரை நமஸ்கரிக்க "வெருவேல்" என்று அருள்செய்து, விடையூர்தி வீரபத்திரருடன் வெள்ளிமலை யடைந்து அவருக்கோருலகளித்து விடுத்தனர். பிறகு தக்ஷன் பிரமன் சாற்றிய புத்திமதியைக்கேட்டுச் சிவார்ச்சனை செய்து சிவகணங்கட்குத் தலைவனாயினன்.

**சுருதிகள்.**

*ஏததேவஸ௦யோகாத்ருகாஹவாஸூர்யஸ்யஇத்யாதிதநுராத்நி:*
*விஷ்வெரத்யோவிஷ்ணொஶிர:ப்ரதிபி௦த்யதுததும௦பபாத*
*யஜ்ஞொமுகஸ்தஸ்மைஸச்சிரோயத்ப்ரவக்ய:*
*வாஜஸநீய௦தநுராத்திநி:ப்ரக்ருத்யாமந௦தி*
*விஷ்ணொ:ஶிர:ப்ரதிஷி௦திதம்.*

**லிங்க புராணம்.**

*பபாதசததாபூமௌஸஸ௦ஜ்ஞ:புருஷோத்தம:*
*புதருத்தாயத௦ஹ௦து௦சக்ரமுத்யம்யஸப்ரபு:*
*வ்யஷ்ட௦பததீநாத்மாகரெணெவஸ்தந௦ஶு:*
*உதிஷ்ட்டெஜ்ஜ௦கிதஸ்தோபாஷாணஇவநிஸ்சல:*
*த்ரிபிஸ்சகர்ஷிதஸ்தேநத்விதாபூத்வைப்ரபோர்தது:*
*ஸார்ங்ககோடிப்ரஸ௦காச்சசிச்செதஸஶிர:ப்ரபு:*
*ததக்ஷணாதபதத்பூம்யா௦ஶிரஸ்தஸ்யதராதலெ*
*வாயுநாப்ரெரித௦சைவக்ராணஜெநபிநாதிநா*

*ப்ரவிவேஶகூஷணாதேவததாஹ்யாஹவநீயகே*
*ஶார்ங்ககோடிப்ரஸ௦காஶ்சகேஶவஸ்யமஹாத்மந:*
*ஶிரஶ்சிச்செதயாமாஸவீரபத்ரோமஹாபல:*
*யஜ்ஞஸ்யஶிரஸஶ்சேத்தாபூஷ்ணோத௦தவிநாஶக:*

**வாமந புராணம்**

*ஜடாதரம்ஹரிர்த்ருஷ்ட்வாக்ரோதாதாரக்தலோசநம்*
*தஸ்மாத்தேஶாதபக்ரம்யகுப்ஜோதா௦தர்ஹிதஸ்தித:*

**ஶாந்திபர்வம்.**

*நசைவாகல்பயத்பாகம்தக்ஷோருத்ரஸ்யபாரத*
*ததஸ்ஸதேவீவசநாத்தக்ஷயஜ்ஞமபாத்ரவத்*
*ஸஸர்ஜஶூலக்ரொதெநப்ரஜ்வலந்தம்முஹுர்முஹு:*
*தச்சூலம்பஸ்மஸாத்க்ருத்வாதக்ஷயஜ௦ஸவிஸ்தரம்*
*ஆவயோஸ்ஸஹஸங்கச்சந்பதர்யாம்பரமம௦திகாத்*
*வேகேநமஹதாபார்த்தாபதந்தாராயணோபிச*
*ததஸ்ரத்தேஜஸாப்லுஷ்டா: சேஶநாராயணஸ்யச*
*பழவுர்மு௦ஜவர்ணாஸ்துததோஹ௦மு௦ஜகேஶ்வாந்*
*அத்யப்ரப்ருதிஶ்ரீவத்ஸ:ஶூலா௦கோமேபவத்யயம்.*

**வாயுஸம்ஹிதை.**

*சரணோர்தெ௦துவக்த்ரேண ஸவிராட்பரபூருஷம்*
*ம்ருகரூபேணதாவ௦தப௦விஶிரஸ்க௦ததாகரோத்.*

பலதேவர்களுக்கெய்திய தண்டங்கட்கு மேற்கோள் வேண்டுவோர் கூர்மபுராணம் - ஸ்காந்தபுராணம் - இலிங்கபுராணம் - வாயுசங்கிகை - காசிகாண்ட முதலிய நூல்களிற் கண்டுகொள்க. விரிப்பிற் பெருகும்.

சிவபிரான் தன்னைப் பகைத்துச்செய்த தக்ஷன துயாகத்தைச் சங்கரிக்க எழுந்தருளியமூர்த்தமே தக்ஷயஜ்ஞஹதமூர்த்த மெனப் பகரப்படும்.

**தக்ஷயஜ்ஞஹதமூர்த்தயே நம:**

### நாற்பத்தைந்தாவது

# கிராத மூர்த்தி.

துவாபரயுகத்திலே பாண்டு புத்திரர் சகுனியின் மாயச்சூதினால் நாடு நகரங்களைத் தமது ஞாதியாகிய துர்யோதனனுக்குத்தோற்று, மனைவியுடன் வனமடைந்து வாழ்ந்திருந்தனர். பிதாமகனாகிய வேதவியாசமுநிவர் அங்கெழுந்த ருளக்கண்டு பஞ்சவரும் பாஞ்சாலியும் அவரது பாததாமரையைப்பணிந்து தாம்படும் பாட்டின் குறை கூறினர். முநிவர் அவர்கட்கு அநேக அரசநீதியையும், நளன் முதலிய அநேக பேரரசர்களுங் காலவித்தியாசத்தினாற் கஷ்டப்பட்டனரெனப் பல பூர்வசரித்தி ரங்களையுங்கூறி, அவர்கள் மனதைத் திடப்படுத்தி, சிவபெருமானை நோக்கித் திருக்கயிலாயகிரிச்சாரலிற் றவஞ்செய்து அவரது அநுக்கிரகத்தை யடையங்கள் என்றருளிச்செய்து, தவமியற்றுதற்கு முகூர்த்தமுங்கூறித் தமதிச்சையின்படி சென்றனர்.

அம்முநிபுங்கவர் ஆஜ்ஞாபித்தவண்ணம் அருச்சுனன் சடை முடியும் மரவுரியுந்தரித்து, அம்பறாத்தூணியும் வில்லுந் தோளிற் பூட்டி, வெள்ளி மலையின் மேற்புரமடைந்து, அது பர்வதராசபுத் திரியாராக உமையம்மையார் திருவவதாரஞ் செய்த புண்ணியக்ஷேத்திரமென்று பணிந்தெழுந்து : முத்தழல்வளர்க்கும் முநிவரர் பாதங்களை முடி மேற்கொண்டு, இயக்கர் விச்சாதரர் சாரணர் முதலானாரைக் கண்டு, சிங்கம் - புலி - யானை - கரடி முதலிய மிருகங்கள் சஞ்சரிக்கும் ஆரண்யத்தையகன்று, எம்பெருமான் வீற்றிருக்கும் புண்ணியவடிவாகிய மலையை கண்ணி, இதயதாமரையில் இறைவரையிருத்தி வேதசிவாகமங்களிற் கூறிய வகையே திருவெண்ணீற்றினைத் தேகமுழுவதுஞ் சணித்து, அக்கமாலையணிந்து தவக்கோலங்கொண்டு தாளொன்றினால் நின்று, மற்றொருகாலை மடித்துநின்ற காலின் தொடையிலூன்றி, இருகரத்தையுஞ் சிரத்தின்மேற் சேர்த்துத்தூக்கி, இரு விழியிலும் இடையறாது நீர் தாரையொழுக, மனத்தைப் புறஞ்செல்லாதொடுக்கி மஹாதேவனைச் சிந்தித்து அருந்தவத்தமர்ந்தனன்.

அவனது தந்தையாகிய இந்திரன் தன் தனயன் தனஞ்செயன் செய்யுந் தவத்தைச் சோதிக்கும்படி, அரம்பை ஊர்வசி முதலிய சில தேவதாசிகளை யேவினன். அவர்கள் சதக்கிருதுவின் விருப்பின்படியே க்ஷணமொன்றில் ஆடையாபரணாலங்கிருதராகி, பரிமளமிகுந்த நறுமலர்சூடி, பற்குனன் தவஞ்செய்யும் பர்ணசாலையை நாடி, பலவகையிலுந் தமது கருத்து பக்குவப்படாமையாலோடி, பாகசாதனனைத் தேடி நடந்த விருத்தாந்தங்கள் பயன்பெற்றிலவெறுரையாடித் தமதுபதியிற்கூடினர். மகபதி தனது மைந்தனது சிந்தையின் வன்மைக்குக்களித்து, சடிதியிற் சென்று சவ்வியசாசியைக்கண்டு சந்தோஷித்து, சற்றுவசனித்து மனவிருப்பமறிந்து "மங்கைபாகர் வருவார்; வரங்கள் பலதருவார்" என்று ஊக்கமுண் டாக்கித் தனது நகரிற்குச் சென்றனன்.

இஃதிவ்வாறிருக்க: சில சேடியரால் அருச்சுனன் செய்யும் அருந்தவத்தையறிந்த அம்பிகை அரனிடமணுகி "அண்ணலே! அருந்தவமியற்றும் அருச்சுனனுக் கருள்புரிய வேண்டும்" எனக் கூற, அரன் "தவமியற்று மிவனைக் கொல்லும்படி இவன்ஞாதி சுயோதனன் தனது நண்பன் முகாசுரனை யேவினன்; அவனும் பன்றி வடிவாய் இவ்வசலமடைந்து சமயம்பார்த்துக்கொண் டிருக்கின்றனன்; ஆதலின் அவன் கிரீடியைக்கிட்டிக் கெடுதிபுரியுமுன், அத்தானவனைச் சங்கரிக்கவேண்டும்" என்று என்று திருவாய்மலர்ந்தருளி, திருநந்திதேவரைவிளித்து "நாம் பன்றி வேட்டையாட வேண்டுதலின், கணங்களும் கீயும் கணமொன்றில் அதற்கேற்ற உருக்கொள்க" என ஆஜ்ஞாபித்து, தாமும் வேட்டுவ வடிவு தாங்கினர். உமாதேவியாரும் அதற்கேற்ப ஓர் வேட்டுவச் சிறுமியாகி, குமாரக்கடவுளைக் குழந்தையாக்கிக் கைக்கொண்டு பெருமான் பின் வந்தனர். வேதங்கள் நான்கும் வேட்டை நாய்கனாயின. கணங்கள் வேடுவராயின.

ஈசன் இவ்வகையாக் யாவரையுங்கூட்டிக்கொண்டு வில்லை வளைத்து விரைந்து செல்லுகையில், மூகாசுரன் பெருமுழக்கத்துடன் அர்ச்சுனனை எதிர்த்தோடினன். அகோரதவத்திருந்த சருகுபட்சணஞ்செய்யுஞ் சுவேதவாகனன் ஆர்ப்பரித்து வரும் பன்றியைப்பார்த்து, அதனாலே தவகிலை யழியுமென்றஞ்சி, வில்லைவளைத்து நாணேற்றி அஸ்திரமொன்றை அதன் முகத்தில் இலக்கு வைத்து விடுத்தனன். வேட்டுவவுருக்கொண்டு சேனாவீரருடன் வராகத்தைத் துரத்தி வந்த விமலர் வில்லோசைகாட்டி அம்பொன்றை அதன் பின்புறம் எய்தனர். அவ்விரண்டம்புகளும் பாய்ந்தன. அவற்றில் அருச்சுனனெய்த அம்பு அதன் முகத்திற்பாய்ந்து பின்புறத்துருவி, அருச்சுனனது அம்புறாத்தூணியை யடைந்தது. வேட்டுருவேற்ற இறைவரெய்த அம்பு அதன் பின்புறம்பாய்ந்து முன்புறத்துருவி, நிலமிசைவிழுந்தது. மூகாசுரனாகிய எனம் நிலத்தின்மேல் வீழ்ந்து மூர்ச்சையாய் இறந்தது. வேட்டுவவடிவு கொண்ட சிவகணங்கள் தவஞ்செய்யுந் தனஞ்சயனைச் சமீபித்து "தவசியே! ஒருவனெய்தமிருகத்தைப் பிறனொருவ னெய்யலாமோ" எனப் போர்கொண்டனர்.

வேடவடிவுகொண்ட சிவபிரானும், தவசியாயிருந்த தனஞ்சயனும், பல நியாயங்கள் பேசி ஒருவரோடொருவர் சபதஞ்செய்து கொண்டு பெருஞ்சமர் செய்தனர். கடவுள் தனஞ்சயனது காண்டீபத்தின் நாணையறுத்தனர். அதனால் அருச்சுனன் நாணமடைந்து அவ்வேடர் தலைவன் தலைமேல் நாணறுந்த வில்லாலடித்தான். அவர் சர்வவியாபியாதலின் அவ்வடி சுவர்க்கமத்திய பாத்லமென்னுந்திரிலோகத்திலுள்ள தேவர் மா நுடர் முதலிய எல்லோருக்கும் பட்டது.

*"விண்ணிலுறை வானவரி லாரடி படாதவர்*
*விரிஞ்சனரி யேமு தலினோர்*
*மண்ணிலுறை மானவரி லாரடி படாதவர்*
*மனுக்கண் முத லோர்க ளதலக்*
*கண்ணிலுறை நாகர்களி லாரடி படாதவர்*
*கட்செவி மகீபன் முதலோ*

*ரெண்ணில்பல யோனியிலும் யாவடி படாதன.*
*விருந்துழி யிருந்து ழியரோ.*
*வேதமடி யுண்டன விரிந்தபல வாகம*
*விதங்களடி யுண்ட னவொரைம்*
*பூதமடி யுண்டனவி நாழிகைமு தற்புகல் செய்*
*பொழுதொடு சலிப்பில் பொருளின்*
*பேதமடி யுண்டன பிறப்பிலி பிறப்பிலி*
*பிறங்கலர சன்றன் மகளார்*
*நாதனம லன்சமர வேடவடி வங்கொடு*
*நரன்கையடி யுண்ட பொழுதே."*

அருச்சுனனடித்த அடியால் வேடர்பதி வெகுளி கொண்டனர் போலச் சிறிதுநேரம் மல்லயுத்தஞ்செய்து பகவான் மைந்தனது வன்மையை யறிந்தனர். அவன் அல்லற்படுவதை யகற்றும்படி தேவர்களும் இந்திரனும் தோத்திரஞ் செய்தனர். கருணாமூர்த்தியாகிய கண்ணுதல் உமாபிராட்டியாருடன் சகல தேவர்களும்புடை சூழக் காட்சியளித்தருளினர். பற்குனன் பலவகையாகப் பரமபதியைத் துதித்தனன். சிவபிரான் அவனைத்தேற்றி "மூகாசுரனால் உன்னுயிர் போகாவண்ணம் வேடுவனாக வேடமுற்றுவந்தேன். வேண்டியவரம் யாது" எனவினாவ, சவ்வியசாசி "சங்கரா! தேவரீர் பெயர்கொண்ட அஸ்திரமொன்று திருவருள் செய்யவேண்டும்" என விண்ணப்பிக்க இறைவர் அவ்வாறே பாசுபதாஸ்திர மநுக்கிரகித்து "பாரதப்போரிற் செயமுறுக" என ஆசீர்வதித்து அந்தர்த் தானமாயினர்.

அருச்சுனன் தவஞ்செய்கையில், அவனைக்கொல்லும்படி துர்யோதனனால் விடுத்த மூகாசுரனைச்சங்கரிக்க வேட்டுருவேற்றுச் சென்றமையால், சிவபிரான் கிராதமூர்த்தியேனப் பெயரெய்தினர்.

**கிராதமூர்த்தயே நம:**

### நாற்பத்தாறாவது

# குருமூர்த்தி.

ஆளுடையவடிகளென்னுஞ் சிறப்புப்பெயருற்ற மணிவாசகர் பாண்டிநாட்டில் நீர்வள நிலவளமிகுந்த திருவாதவூரில் ஆமாத்திய வேதியர்குலத்தில் திருவவதாரஞ் செய்து தந்தையாரால் திருவாதவூரர் என்னும் பிள்ளைத்திருநாமம் பெற்று வேதாகம முதலிய கலைகளிற் றேர்ச்சியடைந்திருக்கையில், மதுரையில் அரசுபுரிந்துவரும் அரிமர்த்தன பாண்டியன் இவரது பிரதாபத்தைக் கேள்வியுற்றுத் தன்பால் வருவித்து ஆற்றலை நோக்கி அமைச்சுரிமையும் தென்னவன் பிரமராயன் என்னும் பட்டமுங் கொடுத்துச் சிறப்போடுவைத்திருந்தனன். அமைச்சர்பெருமான் இருமனப்பெண்டிர் போலும் அரசகாரியத்துத் தொழிலும் ஆளுடையார் திருவடிக்கண்ணே அறிவுமாக வொழுகிவருகையில், கீழ்க்கடற்றுறையிற் குதிரை கொள்ளும்படி அரசனேவ, அளவற்ற பொருளோடுஞ்சென்றனர்.

பரிபக்குவமுற்ற ஆன்மாக்கட்குத் திருவருள் புரியும் ஆளுடையார் இவரது சத்திநிபாதத்து உத்தமத்தலைமை, நிலைநோக்கி மாநுடத்திருவுருவேற்றுத் திருநந்தி முநிகணங்கள் மாணாக்கராய்ச் சூழ்ந்துவர, திருப்பெருந்துறையில் குருமூர்த்தங் கொண் டெழுந்தருளி வாதவூரையர் வரவுகோக்கியிருந்தனர். இவர் சென்று அத்திருப்பதியெல்லையடுக்க, அன்பும் ஆராமையுந்தலைமீதூர, என்னுடையான் இங்குற்றனனோ? என்னுங் கருத்தோடு சென்று, ஆசிரியர் பெருந்தகையைக் கருவிகளெல்லாங் கனிந்துருகக்கண்டு கைதொழுது உரைகுழற உடல்கரைய்ப் பரவினர்; பாடினர், ஆனந்தக்கூத்தாடினர்; பரவசராய் அசைவற்றுச் சிறிது பொழுது கையேற்றிருந்து "எம்பெருமானே? இவ்வுடல்பொருள் ஆவி மூன்றனையுந் திருவுள் ளம் பற்றுக" என்று குறையிரந்த குணக்குன்றன்னவரை', எம்பெருமான் திருவரு ணோக்களித்து, அஸ்தமஸ்தக சையோகஞ்செய்து அமையத்தடவித் திருவடிசூட்டி அன்பூட்டி அறிவின்மயமாக்கி ஐந்தெழுத்துண்மையசைவுற உபதேசித்தருளினர்; அதனால் அமைச்சர்பெருமானும் அமுதராயினர். ஆசிரியநாயகத் தருட்சந்நிதியில் அன்புருவப் பெருந்தகையார் அளவளாவி, அடியார் கூட்டத்திலானந்தக் கடலின் மூழ்கி அழுதழுதலங்காரத்தமிழ்சூட, பத்திப்பிச்சை வேண்டிப் பரமபதி பவளவாய் திறந்து, தமது அருமைத் திருவாக்கால் "மாணிக்கவாசக! இங்கிருக்க" என்றனுக் கிரகித்துத் தம் மாணாக்கர் குழாத்துடன் அந்தர்த்தானமாயினர்.

சிவநேயமுற்ற மாணாக்கர் திலகராகிய மணிவாசகர் மனமுருகி வருந்திப் பிரிவாற்றாதவராய் உயிர்நீங்கக்கருதி அஃதெம்பெருமானதென் றஞ்சிக் கட்டளை கடவாது, அங்கேயே யிருந்து கொண்டு, அவருடன் வந்த பரிசனர்களை நோக்கி "ஆடித்திங்களிற் புரவிகள் வருமென்று புரவலற்குக் கூறுக" எனப் பணித்தனுப்பி, தாம்கொண்டுவந்த அரிமர்த்தன னரும்பொருள் முழுதும் ஆண்டவருக்கும் அடியவருக்குமமைந்த ஆலயமுதலிய திருப்பணியில் விநியோகஞ் செய்திருந்தனர். பரிசனர் சொல்லக் கேட்ட அரசன் அவ்வாறு ஆடித்திங்களன்றும் அஸ்வங்கள்

வாராமையால் அமைச்சர் வாழ்வுக்கோலை விடுப்ப, அவரும் உடையார் சந்நிதியிற் சென்று அரசோலையறிவித்த நிற்க "ஆவணிமூலத்திற் பரித்திரள்வருமென்று ஒலை விடுக்க" எனப்பெருமான் அசரீரியாய்க்கூறினர். ஸ்ரீமன்றுடையார் கட்டளைப்படி அவ்வாறே ஓர் திருமுகம் வரைந்தனுப்பினர். மணிவாசகர் துயிலுகையில் எம்பெருமான் தோன்றி "புரவிகள் பின் வரும்: நீ முன்செல்க" எனப் பணித்தமையின், அமைச்சர் பெருமான் ஆளுடையார் சந்நிதியிற் பணிந்து விடைகொண்டு மதுரையை யடைந்து ஆலவாயுடையாரை வணங்கி, அரசனவைக் களத்துற்று அகமலரச்செய்து, சோமசுந்தரரைப் பணிந்து இருக்கையடைந்து திருவருணோக்கி யிருந்தனர்.*

---

* கவனிப்பு - குருமூர்த்தம் -அஶ்வாரூடம் என்னும் இரண்டு சரித்திரங்களும், மாணிக்கவாசகர் சரிதங்களேயாதலாலும், அவை முறையே ஒன்றின் பின்னொன்றாக அடுத்து வருவதாலும், அவர்பிரபாவத்தை ஈண்டு முடித்திலோம். எஞ்சிய சரிதையை அடுத்த அஶ்வாரூடமூர்த்தத்திற் கண்டுகொள்க.

---

பரிபக்குவமுற்றிருந்த மாணிக்கவாசகருக்கு ஞானோபதேசஞ் செய்தவர் சிவபிரானாதலால் அப்பெருமானுக்குக் குருமூர்த்தியென்பதோர் பெயர் வழங்குகின்றது.

**குருமூர்த்தயே நம:**

---

## அசுவாரூட மூர்த்தி.



நாற்பத்தேழாவது

# அசுவாரூட மூர்த்தி.

மாளிகை சேர்ந்த மணிவாசகருக்குப் பந்துவர்க்கமும், நட்புமாயினார் நானா வகையாக மதிகூறக் கருதி, அரசகாரியத்திற் சிறந்துள்ளாராயிருத்தலின், மன்னனுக் குறுதியும் உறவினருக் கூன்றுகோலுமாக விருந்திலீரெனத் தமக்குத் தோன்றிய வழியெல்லாஞ் சொல்லக் கேட்டு "எமக்கு யாதுவரினும் வருக. எம்பெருமானை மறவேன். ஊழாகிய தீவினைவிளைந்தால் விலக்கற்பாருளரோ?" எனக் கேட்டகன்ற னர். அரசன் அமைச்சர் நாயகரை வருவித்து "குதிரைகள் வந்திலவே" என, “இன்னும் மூன்று தினங்களில் இவுளிகள் வரும்” எனப்புகல, அப்போதும் குதிரைக்கூட்டம் வராமைகண்டு கொற்றவன் சினந்து , தண்டலாளராற் பலவகையாகத் துன்புறுத்திச் சிறையிலிருத்தினன். மணிவாசகர் தமதுடலுயிர்கட் குரியராகிய பரமபதியைப் பலவகைப் பாமாலைகளாற் றுதிசெய்ய, அடியார்பாடலுக் ககமகிழும் ஆனந்தக் கடலாகிய ஆலவாயுடையார் அவரிடுக்கண்களையத் திருவுள்ளங்கொண்டு, திருநந்திதேவர் முதலிய சிவகணத் தலைவர்களைவிளித்து "பாண்டியனுக்குப் பரிமா செலுத்த வேண்டுதலின் வனத்திலுள்ள நரிகளைப்பற்றி வந்து பரிகளாக்கி அவற்றை நடத்துஞ் சேவகராக நீங்களுருக்கொள்ளவேண்டும்” என்று கட்டளையிட, அவர்கள் அவ்வாறே சித்தப்படுத்திப் பலவகையாகிய ஆடைமுதலியவற்றில் வேறுபாடுற்ற சிறந்த வடிவேற்றனர்.

தொண்டர் துன்பங்களைக்களையுஞ் சோதிஸ்வரூபியாகிய சிவபிரான், தருமார்த்த காம மோக்ஷமென்னும் நாற்புருஷார்த்தங்களே நான்கு கால்கள் - ஞானகாண்ட கருமகாண்டங்களே இருசெவிகள் - பர அபரவுணர்ச்சியே விழிகள் - விதிமுகம் - நிஷேதவால் - தந்திரங்கள் புறவணி - ஸப்தகோடி மந்திரங்கள் சதங்கைமாலை - சூரிய சந்திரர் பாதம்வைக்கு மிடங்கள் - தாரகப்பிரம மந்திரமே கடிவாளமாகக்கொண்டு இவற்றைப்போன்ற பிற அங்கங்களு மமைந்த ஓர் சிறந்த புரவிமேலேறித் தாமே அவற்றிற் கிறைவராய் எழுந்தருளி வர, பாண்டி மன்னன் பரிமா வரவறிந்து அவற்றின் சிறப்பையும் தலைவனது சிறப்பையும் அன்போடு கண்டுகளித்து, பரிசு பலசெய்தனுப்பிப் பழையமந்துறையிற் கட்டப்பணித்தனன். அப்பரிகளும் பாதியிரவிற் பண்டைய நரியுறுவேற்றுப் பல குதிரைகளை யூறுசெய்து, வனத்திற்கேக, பூழியன் கேள்வியுற்று மனம்புழுங்கி அமாத்தியரையழைத்துத் தண்டலாளர்வச மொப்புவித்து "அப்பண்டாரப் பொருள் முழுதுங் கொண்டுவிடுக'" என, அவர்கள் ஐயரைச்சிறைப்படுத்தி வைகையாற்றிற் கடுங்கோடையில் வருத்தஞ்செய்ய, வஞ்சமில்லார் வள்ளலார்திருவடியில் மனஞ்செலுத்த அருட் பெருந்தகை அவ்வைகையைப் பெருகச்செய்ய, மதுரை முற்றும் வெள்ளமாக அரசனாணையால் மண்ணடைப்பாராயினர். மந்திரியார் ஆலயஞ்சேர்ந்தனர்.

அச்சமயத்து வந்தியென்னும் மூதாட்டி தனக்கு விடுத்த கரை அடைப்பின்றி வருந்த, பெருமான் கூலியாளாய் வந்து பிட்டுண்டு, கட்டுண்ட அயற்கரையிடிய நீர் விடுத்துத் துயில் புரிவார்போ லிருக்கக்கண்ட பாண்டியன் பிரம்பாலோச்ச * அஃது

யாவர் மேலும் படச்செய்து அடைப்பாரின்றி யடைகரையாக்கி மறைந்து ஆகாய வாணியால், "அமைச்சரைத்தேறுதி" எனக் கூறுவித்தருளினர்.

---

* சிவபெருமான் சர்வ வியாபியாதலின் அவரை அரிமர்த்தனன் பிரம்பாலடித்த பொழுது அவ்வடி யாவர்க்கும்பட்டது.

---

வேந்தன் வெருண்டோடி ஐயரைக்கண்டு "வாதவூரரசே! என் பிழைபொறுத்தி இத்திருவையெல்லாம் வேண்டியவாறு செய்தருள்க” என ஐயர் "வழுதியர் கோவே! திருவருள் வழிநிற்க" என்று நிறுத்திப் புறப்பட்டுத் திருப்பெருந்துறையடைந்து பதிகமோதித்துதித்து, பல திருப்பதிகளையுஞ்சென்று பணிந்து, தில்லையைச்சேர்ந்து ஈழத்தினின்று வந்த புத்தரைத் தில்லைவாழ்ந்தனர் விருப்பின்படி வாதில் வென்று, அவர்கட்குச் சிவசின்னமளித்து, வளவர் மகளை வாய் திறப்பித்து, திருவாசகமும் திருக்கோவையாரும் மன்றுடையாரே யெழுதிக் கைச்சாத்திட்டருளும்படி மணிவாய் மலர்ந்தருளினர். ஆமாத்தியகுல தீபத்தை அவ்வேதியர்நோக்கி "திருவாசகத்தின் திருவுள்ளக்கிடையைத் திருவருள் செய்யவேண்டும்" என்றிரப்ப, அடிகள் முறுவல் செய்து அவ்வந்தணரொடு பொன்னம்பலஞ்சேர்ந்து "இவ்வாசகப் பொருளாவார். இவரே" என்று திருவாய்மலர்ந்து திருச்சிற்றம்பல முடையாரைக் குறியாது குறிப்பித்து, எம்பெருமானிடத்தி ரண்டறக் கலந்தனர்.

**திருவிளையாடற்புராணம்.**

*"பாண்டியன் முதுகிற் பட்டது செழியன்*
*பன்னிய ருடம்பினிற் பட்ட*
*தாண்டகை யமைச்சர் மேனிமேற் பட்ட*
*தரசிளங் குமரர்மேற் பட்ட*
*தீண்டிய கழற்கால் வீரர்மேற் பட்ட*
*திவுளிமேற் பட்டது பருமம்*
*பூண்டவெங் கரிமேற் பட்டதெவ் வுயிர்க்கும்*
*போதன்மேற் பட்டவத் தழும்பு.*
*பருதியு மதியும் பாம்புமைங் கோளும்*
*பன்னிறம் படைத்தநாண் மீனு*
*மிருநிலம் புனல்கா லெரிகடுங் கனல்வா*
*னென்னுமைம் பூதமுங் காருஞ்*
*சுருதியுமாறு சமயவா னவருஞ்*
*சுரர்களு முனிவருந் தொண்டின்*
*மருவிய முனிவர் கணங்களும் பட்ட*
*மதுரைநா யகனடித் தழும்பு.*
*மானவர் மனிதர் நாகர்புள் விலங்கு*
*மாசுணஞ் சிதலெறும் பாதி*
*யானபல் சரமு மலைமரங் கொடிபுல்*
*லாதியா மசரமும் பட்ட*

*வூனடை கருவும் பட்டன தழும்போ*
*டுதித்தன வுயிரிலோ வியமும்*
*தானடி பட்ட சராசர சடங்க*
*டமக்குயி ராயினோன் றழும்பு.*
*துண்ணெனமாயோன் விழித்தனன் கமலச்*
*சோதியும் யாதென வியந்தாள் ***"*

சிவபெருமான், அரிமர்த்தனனது அளவில்லாப் பொருளைச் சிவபணிவிடை யிற்செலவுசெய்த மணிவாசகர் நிமித்தமாய் நரிகளைப் பரிகளாக்கித் தாமேபரித் தலைவராய்ச் சென்று புரவிகள் ஒப்புவித்தமையால் அசுவாரூடமூர்த்தி யென்பதோர் திருநாமமெய்தினர்.

**அசுவாரூடமூர்த்தயே நம:**

---

### நாற்பத்தெட்டாவது

# கஜாந்திக மூர்த்தி.

சொல்லுதற்கரிய வலியமைந்த சூரபன்மனது தொந்தரவைச் சகியாத இந்திரன் தன் மனைவியுடன் மறைந்து சீகாழிப்பதியிற் சிவார்ச்சனை செய்து காலங்கழித்திருந்தனன். அதுகாலத்தில், அமரர் சிலர் ஆகண்டலனைக்கண்டு "அரசே! அசுரர்புரி துயரினை ஆற்றகில்லோம்" எனக்கூற, வச்சிராயுதன் "வானவர்களே! மகாதேவனைவழுத்தி அத்துயர்தீர வெள்ளி மலையடைவோம்" என்று இந்திராணியை அரிகரபுத்திரர் காவலில் விடுத்து, தேவர் குழுவுடன் திருக்கயிலை யடைந்து திருச்சந்நிதானத்தினுட்செல்ல. திருநந்திதேவரை உத்தரமுதவும்படியிரந் தனர். அதுசமயம் ஸநகனாதியர்க்குச் சங்கரர் ஞானோபதேசஞ் செய்து கொண்டிருத் தலின், நந்தியெம்பெருமான் நாகாபரணர் கட்டளைப்படி தடுக்க, அத்திருவாயிலி லேயே அநேககாலம் அமர்ந்திருந்தனர்.

அக்காலத்திற் கொடுங்கோல் செய்துவந்த சூரபன்மன் தங்கையும், வாலிபரை வலிதிற் புணர்பவளுமாகிய அசமுகியென்பாள் துன்முகியுடன் சீகாழித்தலத்தைச் சேர்ந்து, ஆங்குப் பொற்கொடி போலவிளங்கும் புலோமசையைக்கண்டு தன் முன்னோனைச்சேர்ந்து வாழும்படியழைக்க, சசிதடுக்க, வன்மையுடன் கையாற்பற்றி அவளலறும்படி இழுத்துக் கொண்டு சென்றாள். ஐயனாரது ஏவலாளராகிய வீரமாகாளார் விரைந்து சென்று “செல்லற்க" என்று தடுக்க, அசமுகி ஓர் சூலத்தைச் சுழற்றிவிட்டனள். அதனை வீரமாகாளர் வாளால் வெட்டி மாய்த்தனர். அசமுகி துண்ணென்று துன்முகி கையிலிருந்த சூலத்தை வாங்கிக்கொண்டு, அவள் கையில் அயிராணியையளித்து வீரமாகாளர்மேல் அச்சூலத்தைவிட, அவர் அதையுமழித்தனர் அரக்கி மலையொன்றைப் பலங் கொண் டெறிந்தனள். அவர் அதனையும் வாள் கொண்டு மாய்த்தனர். மேஷமுகமுள்ளவள் மேலொன்றுஞ் செய்யமாட்டாதவளாய், துன்முகி கையிலிருந்த இந்திராணியைத் துணுக்குறத் தூக்கிக்கொண்டு விண்வழி, வேகமாய்ச்செல்ல, வீரமாகாளர் வெகுண்டு அவள் அளகத்தைப் பிடித்துக்கொண்டு உடைவாளையுருவி ஒருகையை வெட்டி இந்திராணியை விடுவித்து, துர்க்குணங் களமைந்த துன்முகியை நோக்கி “நீயுந் தொட்டனையன்றோ?" என்று, அவளை யுமோர் அத்தமரிந்தனர். வருந்தியழுது புரண்டு சோகமாகி அவளையுமோர் அத்தமரிந்தனர். வருந்தியழுது புரண்டு சோகமாகி யெழுந்த அசமுகி அகம் நாணித் துன்முகிபுடன் மகேந்திரபுரிக்குச் சென்று தன் தமயனோடு நிகழ்ந்தனகூறித் துக்கித்தனள். சூரன் உலக நடுங்கச் சிரித்து ஹுங்காரஞ்செய்து கோபித்தான். அது கண்ட அவன் ஜேஷ்டகுமாரன் பாநுகோபன் "என்னை விடுத்தால், இந்திரன் இந்திராணி இமையவர் யாவரையும் இமைப்பிற் சிறைசெய்து வருவேன்" எனக் கேட்டு நன்றென இயைந்து ஏக விடுத்தனன். அவன் தன் வீடு சென்றான். சூரன் பிரமனைக்கொண்டு அவ்விருவரத்தத்தையும் பண்டுபோற் படைப்பித்து, வாயு - திசைக்காவலர் முதலிய தேவரையும், நிலமன்னரையுந் தண்டித்துப் பிரமன் வேண்டுகோளின்படி விடுத்தனன்.

பாநுகோபன் பூல்வகைப்படையும் புடைசூழ இரதாரூடராய், துன்முகி வழிகாட்டப் புகலிக்கரிற்புகுந்து இந்திராணியை யெங்குந்தேடிக்காணாது, அமரர் புரியாகிய அமராவதியை யடைந்தனன். அதனையறிந்த அந்தரர் சயந்தனுடன் சாற்ற, சயந்தன் "தந்தை - தாய் - ஆசிரியன் என்னுமிவர்களில் யாரும் ஈண்டிலர்; இனி யென் செய்வது? விதியைவிலக்க முடியுமோ? வந்தது வருக" என்று ஐராவதத்தின் மேலேறி, ஆகாயவாசிகள் புடைசூழ, அசுரச் சேனைக் கெதிரில் அருஞ்சம ராற்றக் கருதி முன் சென்றனன். வானவருந்தானவரும் போர்புரிய ஆரம்பித்தனர். அவ்வாறு செய்த செருவில் தேவர்கள் தோற்றோட, அவுணர் அவர்களைத் தொடர்ந்து பற்றித் தோளிற்கயிற்றாற்கட்டி யிழுத்துக்கொண்டு போயினர். சயந்தன் சாலவும் வெகுண்டு தன்வில்லை வளைத்துப் பல்வகைப் பாணங்களைப் பூட்டித் தானவத்தலைவரைப் புறமுதுகு காட்டி யோடச்செய்து வெற்றிகொண்டனன். பாநுகோபன் அவனை யெதிர்த்துப் பல தேவாஸ்திரங்களைச் சிந்தினன். இந்திரகுமாரனும் எண்ணில்லாஅம்புகளை எதிர்விடுத்தனன். இவ்வாறு ஒருவர் விட்ட அஸ்திரத்தை மற்றொருவரழித்துக்கொண்டு, இருவரும் பெருஞ் சமர்புரிந்தனர். சயந்தன் பாநுகோபனது வில்லின் நாணியை யறுத்தனன்: பாநுகோபன் வேறோர் நாண்பூட்டி மனம்நாணி, சயந்தன் மார்பில் அஸ்திரமாரி வருஷத்தனன். சயந்தன் சகஸ்திராஸ்திரங்களால் அவனது தேரையுங் குதிரைகளையும் நொறுக்கினன். தீயோன் வேறோர் தேரேறிக்கணக்கில்லாத கணைகளை ஆகண்டல சுதனது ஆகத்திற் பிரயோகித்து அவனை யானை மேலேயே மூர்ச்சையாகி விழச்செய்தனன்.

சயந்தன் அவசமான துகண்ட அவனூர் தியாக நின்ற ஐராவதம் பகைஞனது தேரிற் பலமுடன் பாய்ந்து, அதனுறுப்புகளைச் சிதைத்து, கோறல் புரியுங் கோடுகள் நான்காலும் அவன் மார்பில் நன்றாய்ப்புடைக்க, அதன் கொம்புகணான்குஞ் சடசடவென்னும் ஒலியுடன் முரிந்தன. வெய்யோன் வெள்ளை யானையின் கவுளியில் வெகுளியோட்டிக்க அது வருந்தி அலறிவீழ்ந்தது. அவுணனாக்கினை யால், தைத்தியர் அநேகர் சயந்தனைச்சூழ்ந்து தோளிற் றாம்பு பூட்டிப்பிணித்து, சிறைப்பட்ட தேவருடன் சேர்த்தனர். அசுரர் அமரரது தோளிற்பூட்டிய கயிற்றைக் கைப்பற்றிக்கொண்டு ஈர்த்துச்சென்று, அப்பொன்னுலகத்தைத் தீயூட்டினர். பாவியாகிய பாநுகோபன் மனமகிழ்ச்சியுடன் நிலவுலகடைந்து மகேந்திரபுரியில் தந்தை முன் சென்று பணிந்து "எந்தையே! இந்திராணியையும் இந்திரனையுங் காணேன். தேவர்களையும், தேவமாதரையும், அவர்கள் இளவரசும் இந்திரன் மைந்தனுமான சயந்தனையுஞ் சிறைசெய்து கொண்டு வந்தேன் . அமரருலகை இனி அமரெய்தாவண்ணம் அக்கினிக்கூட்டினேன்' என, சூரபன்மன் மனங்களித்து, மகனைத் தழுவிக்கொண்டு தேவர்களை விலங்குபூட்டிச் சிறையிலிட்டனன். தேவமாதரை அசுரமாதருக்குப் பணிப்பெண்களாகப்பணித்தனன். சிறையிலகப்பட்ட தேவர்களும், அடிமை செய்யும் அரம்பாஸ்திரீகளும், எப்பொழுது இத்துயர்தீருமெ ன்று எண்ணிச் சிவபிரானது. திருவருளைச் சிந்தித்துக்கொண்டிருந்தனர். இதுநிற்க:

பாநுகோபனோடு போர் செய்து கொம்பொடிந்த நாற்கோட்டு ஐராவதம், தனது துயராற்றாமல் வருந்தி, சிவத்தியானத்துடன் விண்ணுலகு நீங்கி மண்ணுலகடைந்து, சுவேதாரண்யம் என்னும் திருவெண்காடு சென்று, ஆங்கு முன்னொருகாலத்தில்

இந்திரனாற் பூசிக்கப்பெற்ற பிரமவித்தியா நாயகியாரை இடப்புறமமர்த்திய ஸ்ரீ சுவேதாரண்யேசுரரது துதித்தற்கரிய திருவடியை மனத்திற்பதித்து, ஸூர்யதீர்த்தம், ஸோமதீர்த்தம், அக்நிதீர்த்தம் என்னும் முத்தீர்த்தத்திலும் முறையே காலை, உச்சி, மாலைகளான முப்பொழுதிலுமூழ்கி, திருப்பள்ளித்தாமங்கொய்து, சங்கமாகிய குடங்களால் திருமஞ்சனமாட்டி அருச்சித்து, ஒரேமனதாய் உமாபதியை உள்ளத்திற் கொண்டுறைந்தது. அரவாபரணர் அத்தியின் பத்திக்குச் சித்தங்களித்து, திருவருள் செய்யச்சேவைதந்து ஐராவதத்தின் சிரமேற்றிருக்கரஞ்சூட்டி அதை நோக்கி "உனக் கென்னவரம் வேண்டும்?" என, "தேவநாயகா! தேவரீரை இவ்வகையே அருச்சித்துக் கொண்டிருக்க வேண்டுகிறேன்" என விண்ணப்பிக்க, விடையூர்தி "நீ க்ஷீராப்தி கடைகையில், தோன்றியபொழுதே உன்னை இந்திரனுக்கு வாகனமாக விடுத்தனனா தலின், நீ அவ்வாறே அமரர் துயரொழிந்தபின் அமராவதியையடைந்து வாழ்க எம்மடியனாகிய இந்திரனை நீயே வாகனமாகித் தாங்குதல் எமக்குச் சம்மதம். நின்கொம்புகள் பண்டு போலாக" எனத் திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தான மாயினர். ஐராவதம் ஆண்டவ ரநுக்கிரகித்தவண்ணம் கொம்புகள் வளரப்பெற்று, ஆண்டு அன்போடு சிவலிங்கார்ச்சனை செய்துகொண்டிருந்து, ஸ்ரீகுமாரக்கடவுள் சூரபன்மனாதியர் அசுரர் துயரகற்றி அமரரைச்சிறைவிடுத்த பின்னர் இந்திரனுக்கு வாகனமாய்ப் பண்டு போல் அமராவதியில் வாழ்ந்திருந்தது.

ஐராவதமாகிய யானையின் வேண்டுகோளுக்கிரங்கி அதனைச் சமீபித்து அநுக்கிரகஞ்செய்தமையால், கடவுணாயகரைக்கஜாந்திக மூர்த்தியெனக் கழறலாயி ற்று.

**திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தேவாரம்.**

*"சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானு*
*மக்கரைமே லசைத்தானு மடைந்தயிரா வதம்பணிய*
*மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினை துரக்கு*
*முக்குளநன் குடையானு முக்கணுடை யிறையவனே.*

*கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தா னெனவிவர்க*
*ளொள்ளாண்மை கொளற்கோடி யுயர்ந்தாழ்ந்துமுணர்வரியான்*
*வெள்ளானை தவஞ்செய்யு மேதகுவெண் காட்டானென்*
*றுள்ளாடி யுருகாதா ருணர்வுடைமை யுணரோமே."*

**கந்தபுராணம்.**

*"மற்ற வன்றன் மணியணி மார்பிடைச்*
*செற்ற மால்கரி சென்று முற்றாக்கலும்*
*பொற்றை யின்கட் புழைத்திடுஞ் சூசியி*
*னிற்ற வாலத னீரிரு தந்தமும்.*

*வாலிய வொளிகெழு வனத்தி லேகியே*
*மூலம தாகிய முக்கண் மூர்த்தியை*
*மேலுள தாணுவின் மேவச் செய்துபின்*
*சீலமொ டருச்சனை செய்து வைகிற்றே.*

*அறிவுள மால்கரி யமலன் றந்திர*
*முறையது நாடியே முதிரு மன்பினான்*
*மறையுற வழிபடீஇ வைகு மெல்லையிற்*
*குறைபடு நாற்பெருங் கோடும் வந்ததே.*"

**கஜாந்திகமூர்த்தயே நம:**

---

:

## ஜலந்தரவத மூர்த்தி.



### நாற்பத்தொன்பதாவது

# ஜலந்தரவத மூர்த்தி.

தேவேந்திரன் ஒருகாலத்தில் திருக்கைலாயகிரியை யடைகையில், சிவபெருமான் வடிவுமாறி வழியில் நிற்கக்கண்டு, 'நீயாவன்? யாது தொழில் செய்வோன்?" என, ஒன்றுங்கூறா திருப்பக் கோபித்துத் தன் கைவச்சிரத்தைத் தோளிற்றாக்க, அது பொடியாகவுதிர்ந்தது. உடனே பெருமானுக்குக் கோபமுதித்து, ஒருருத்திரவடிவேற்க, இந்திரன் வெருக்கொண்டு, உரைகுழற வுடலசைடக் கைகட்டிவாய்பொத்திப் பலவகையாகத்துதிபுரிய, இறைவர் மனம் பொறுத்துத் தன் கோபத்தாலுண்டாகிய வியர்வை நீரை வழித்தெறிய, அது மேற்றிசைக்கடலில் வீழ்ந்து ஓர் புத்திரவடிவாயது. அதனைச் சமுத்திரராசன் மகன்மை கொண்டு வளர்த்து வந்தனன். அச்சிறுவன் பிரமனாற் சலந்தரனென்று நாமமிடப்பெற்று, காளைப் பருவமுற்று, அவுண்ருடன்கூடி ஆற்றல் மிகுந்தவனாய்த் தானஎத்தச்ச னாகிய மயன் என்பவனால் ஓர் அழகியநகரஞ்செய்வித்து, காலநேமியின் புத்திரி விருந்தையை மணந்து சிறிதுகாலம் வசித்திருந்து, மேருமலையிலிருந்த தேவர்களோடு போர்புரியக்கருதிப் போகையில், தேவர்கள் விஷ்ணுவைவேண்ட, அவர் கருடாரூடராய் இருபதினாயிரவருடங் கடும்போர்புரிந்து அவனை வெல்லுந் திறனில்லாராய்ப் புகழ்ந்து சென்றனர். அதுகண்ட இந்திரன் அவ்வசுரனால் யாது தீங்கெய்துமோவென் றலக்கணுற்றுத் திருக்கைலாயகிரியை யடைந்திருந்தனன்.

இந்திரனது செய்தியைச் . சில தூதுவரியம்ப வுணர்ந்த சலந்தரன் ஆங்குச் சென்று, அவனை யெதிர்ப்பான் கருதிப் புறப்படுகையில் விசேடித்த கற்பினை யுடைய விருந்தையென்னும் மனைவி வேண்டாமென்று தடுப்பவும் மனமயங்கா மல், சேனாசமுத்திரத்துடன் திருக்கைலையை சமீபித்தலைச் சதக்கிருதுகண்டு சஞ்சலங் கொண்டு, சந்நிதானத்துட்சென்று சங்கரர் முன்னே நின்று தனக்குற்ற சங்கடத்தைச்சாற்ற, தயாநிதி "வச்சிரபாணி! வருந்தாதே" என வனுக்கிரகித்துத்தேற்றித் தன்பின் வடிவுமாறி வரக் கட்டளையிட்டு, நரைத்த திருவுருவமும் ஊன்றியதடியும், தொங்கிய கமண்டலமுந்தளர்ந்த நடையுமுடைய ஓர் விருத்தமுநி வடிவேற்று, இந்திராதி யிமையவர்மறைந்து பின்றொடரச்சென்று. சலந்தரனைக் கண்டு "நீயார்? யாதுக்கருதிச் செல்கின்றனை?" என வினாவ, "யான் சமுத்திரராசன் தனயன். சலத்திரனென்னு நாமமுற்றோன். சிவனுடன் செருச் செய்யச் செல்கின்றேன்" என செப்ப, நம்பெருமான் "நன்று றினை " என்று நகை கோட்டி, கண்ணுதலைப் பொருதக்கருதிற்கணத்தி லுயிர்கழிவாய்; உயிர்ப்பிச்சை வேண்டின் திரும்பியோடிப்போ" என, சலந்தரன் "இமைப்பொழு திங்கிருந்து என் ஆற்றலைக்காணுதி" என, ஈசன் "யான் சிவபிரானுக் கிரண்டாவது. உன் வல்லமையைக் காண வந்தேன்" என்று திருவடியால் ஓர் சக்கரம்போற்கீறி "இவ்வலையத்தைச் சிரமேலேற்றுத் சாங்கவல்லையா" என்றவுடனே, சலந்தரன் இறுமாப்புமிகுந்து "இது தானோ பெரிது" என்று இருகையாலுமெடுத்து மார்பிலும் புயத்திலுந்தாங்கிச் சிரத்தின் மேல் வைத்துக்கொள்ள, அச்சக்கரம் அவனை அக்கணமே இருபிளவாகப்பிளந்து சிவபெருமான் திருக்கரத்தெய்தியது. அவனுடன்

வந்த அசுரர்கூட்டமுற்றும் பெருமானது விழித்தீயினாற் சாம்பராயின. பின்னர் பெருமான் தமது நிஜ வடிவுகாட்ட இந்திரன் முதலாயினார் வாழ்த்திப் பூமழை பொழிந்து ஆநந்தக்கூத்தாடிப் போற்றித் தத்தம்பதவியடைந்து வாழ்ந்திருந்தனர்.

அமரரைத் தீராத்துயர்விளைத்து வந்த சலந்தராசுரனைச் சக்கரமொன்று தாளாற்கீறித் தலைமேலெடுக்கச்செய்து சங்கரித்தமையால், சிவபிரானுக்கு ஜலந்தரவதமூர்த்தியென வோர் திருநாமஞ் சாற்றப்பட்டது..

**கந்தபுராணம்.**

*"புங்கவர் யாரையும் புரங்கண் டேன்வரு*
*கங்கையை யடைத்தனன் கார்கொள் வேலையி*
*லங்கியை யவித்தன னரியை வென்றன*
*னிங்கிது தாங்குவ தரிய தோவெனா.*

*புரத்தழல் கொளுவியோன் பொறித்த நேமியைக்*
*கரத்திடை யெடுத்தனன் கனங்கொண் டெய்தலி*
*னுரத்திடைப் புயத்திடை யுயிர்த்துத் தாங்கியே*
*சிரத்திடை வைத்தனன் றேவ ரார்க்கவே.*

*செழுஞ்சுடர்ப் பரிதியைச் சென்னி கோடலா*
*லொழிந்திடு சலந்தர னுச்சி யேமுதற்*
*கிழிந்தது முழுதுடல் கிளர்ந்து சோரி*
*ரிழிந்தது புவிதனி லிழுமெ னோசையால்."*

**காஞ்சிப்புராணம்.**

*"இருகூறாகச் சலந்தரனை யிறுத்து மாட்டி யவ்வடிவ*
*மருகே தோன்றச் சுதரிசன மங்கைத் தலத்தின் மிசையேந்தி*
*முருகார்கடுக்கைத் தண்ணறும்பூந் தொடையல்வாகை முடிவிளங்கத்*
*திருவார் காட்சி யளித்தருளுந் தேவர் கோமான் றிருவுருவம்."*

**ஜலந்தரவதமூர்த்தயே நம:**

ஐம்பதாவது

# ஏகபாதத்ரி மூர்த்தி.

ஆதிமத்தியாந்தரகிதராய் அமலராய்ப் பரிபூரணராய்ச் சூக்ஷ்மராய் ஏகராகிய பரமசிவம், உலகங்களை ஆக்குதல் காரணமாய்ச் சுத்தமாயையின் அதோபாகமான அசுத்தமாயையினிடத்து அவ்யக்தமாகிற மஹானையுண்டாக்கி, விஞ்ஞானகலர் - பிரளயாகலர் - சகலர் என்னு மூவருக்கும், தநுகரண புவன போகங்களுக்கு உபகரணமாய், பிரம விஷ்ணு உருத்திரர்கள் மூலமாய்ப் பிரபஞ்சங்களையெல்லாம் படைத்தல் - காத்தல் - அழித்தலாகிய முத்தொழில்களையுஞ் செய்வித்தும், அவற்றிற்றோயாதவராய்ச் சுத்தமாயெழுந்தருளுவர். இங்ஙனம் நிர்மலமாயிருப்பி னும் அவர்கொண்ட திருவுருவம் அஜகேஶவாதி ஆன்மாக்களின் அநுக்கிரஹகாரண மேயன்றி வேறன்று அவரது திருவுருவமும் அநுக்கிரஹமேயாகும்.

**ததுக்தம் வாதுளே.**

அங்கப்ரத்யங்கஸாங்கஞ்சோ பாங்கஞ்சசதுரோபவேத்
பலிரோவக்த்ரஞ்சஹ்ருதய மங்கஞ்சேதிப்ரகீர்திதம்
வக்ஷ:கண்டஸ்தகௌபாஹூ நாபிகுஹ்யோதரந்ததா
நேத்ரம் நாஸாஸ்யகர்ணௌச பாணிபாதிந் ததாங்குலி
ஊரூசஜா நுஜங்கஞ்ச ப்ரத்யங்கஞ்சேதிகத்யதே
மூர்த்திகாமகுணரூபந்து ஸாங்கா சேதிப்ரகீர்த்திதம்
குணச்சித்தமிதிஜ்ஞேயம் தத்குணஂ தாதாபவேத்
குணம்ஸத்யம்ப்ரதாபஞ்ச துர்பேத்யா நுக்ரஹாததா
ருத்திமாயாவிவர்ணஞ்ச நாதம்ஸம்ஹ்ருதிரேவச
ஏதேதலகுணா:ப்ரோக்தா: தேஷாம்லக்ஷணமுச்யதே
த்ரிகுணம்பலமித்யுக்தம் ஸத்யம்பரரிஷ்யுதே
கட்கமீயப்ரதாபோயம் துர்பேத்யம் வஜ்ரமிஷ்யதே
ஈபஸ்யா நுக்ரஹஞ்சைவ அபயஞ்சப்ராஸ்யதே
ருத்திஸ்ஸ்யாந்நாகரூபந்து பாபாம்மாயாஸ்ரூபகம்
விவர்ணமங்குபஞ்சைவ கண்டம்நாதாத்மகம்விது:
ஸமஹாரமக்நிரூபம்ஸாத் பாபயாநாம்பஸ்மஸாத்க்ருதி:
எதேவைகுணரூபாய் லாங்கஞ்சேதிப்ரகீர்த்திதா:
வஸ்த்ரோபவீதமாலாய்ச கந்தமாபரணந்ததா
ஆஸநாசரணஞ்சைவ உபாங்க சேதிகீர்த்திதம். --

என்று கூறிய பிரபல பிரமாணத்தானே இறைவர் கொண்டருளிய திருமேனி காருண்யத்திருமேனியென்பதுஜ்யமறப்பெறப்பட்டது.

இவர் திருமேனியில் ஹ்ருதயத்தினின்றும் ஸஹஸ்ராம்பமாக உருத்திரதேவர் தோன்றுவர். . கோடியம்பமாக வாமதக்ஷிணபார்

சங்களினின்றும் பிரமவிஷ்ணுக்கள் பிறப்பார்கள். தக்ஷிண வாமல
லாட நேத்திரங்களிலிருந்து பர்ய ஸோமாக்நி தேவர் தோன்று
வர். பிராணனி விருந்து வாயுதோன்றுவன். கண்டத்தினின்று
கணேபார் ஜனிப்பர். ஹ்ருதயத்தில் ஸ்கந்தர் உதிப்பர். நாபியி
னின்று யம இந்திர வருண குபேரருதிப்பார்கள். பிரத்யங்கத்தி
னின்றும் பஞ்சாசத்கோடி தேவர்கள் பிறப்பார்கள். உரோமகூபங்
களிற் பலகோடி ஷிகளும் மற்றுமுள்ள பலதேவர்களுஞ் சனிப்
பார்களென்று வேதசிவாகமங்களிற் படிக்கப்பட்டுள்ளன.

**வாதுளாகம்.**

*கர்மேபாஸ்யஸஹன் ராம்பாந் மஹேபாஸ்யஸமுத்பவம்*
*மஹேபாஸ்யஸஹஸ்பாம்பாத் ருத்ரதேவஸமுத்பவம்*
*ஏதம்மஹேபாகோட்யம்பலாத் ப்ரஹ்மவிஷ்ணு ஸமுத்பவம்*
*தக்ஷிணாங்கபவோய்ரஹ்மா ஹரிர்வாமாங்கஸம்பவ:*
*ஹ்ருதயாந்நீலருத்ரஸ்து பரிவஸ்யபரி வஸஜஞக:*
*நேத்ரேஷுஸவ்யவாமோர்த்வே ஸர்யபேயாமாக் நிஸபவ:*
*ப்ராணவாயுஸமுத்பந்தரோத்ரேகீலாதிஸபவ:*
*ஆஸ்யேஜ்ஞாநாஸமுத்பந்த கணேஸ்துகளோத்பவ:*
*ஷண்முகேஹ்ருதயேஜாதோ நாபௌதேவாஸ்ஸமுத்பவா:*
*பஞ்ச*
*சாபாத்கோடிதேவாங்ச மஹேபாங்கஸமுத்பவா:*
*ருஷயஸ்சததாகோட்யோ ரோமகூபாத்ஸமுத்பவா:*
*மநோந்மந்யாஸ்ஸஹப்பராம்பாத் கௌரீஜாதம் இதிஸம்ருதம்*
*ஸ்ரீஸ்ஸாஸரஸ்வதீதுர்கா உமாசைவப்ரபாததா*
*பசீஜ்யேஷ்டாசலஷ்மீச ததைவாந்யாய்சஸக்தய:*
*ஏதாவைகோடிபக்திம்ச கௌரீதேஹஸமுத்பவா.*

**அதர்வஶிகோபநிஷத்து.**

*ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ரா ஸ்ஸம்ப்ரஸூயந்தே*
*நகாரணம் காரண துத்யேய:*
*ஸர்வைஸ்வர்யஸம்பந்த பாம்புராகாபாமத்யே*

**கூர்மபுராணம்.**

*ராஜஸீமாமகீயாக்தி: கரோ திஸகலம்ஜகத்*
*ஆஸ்தாயப்ரஹ்மணோரூபம் மந்மாயாஸம்ப்ரவர்திதா*
*அந்யாசபாக் திஸ்ஸத்வாட்யா ஸமஸ்தாபயதிமேஜகத்*
*பூத்வாநாராயணோநந்தோ ஜகந்நாதோஜகந்மய?*
*த்ருதீயாமஹதீயாக்திர் நிஹந்த்ரீஸகலம்ஜகத்*
*தாமாஸீமேஸ மாக்யாதா கோபாத்ருத்யாக்யரூபிணீ.*

**இலிங்கபுராணம்.**

*தமஸாகாலருத்ராக்யம் ரஜஸாகநகாண்டஜம்*
*ஸத்வேநஸர்வகம் விஷ்ணும் நிர்குணத்வேமஹேய்வரம்.*

**ஆதித்யபுராணம்.**

*ஸதஸ்மாததிகாகிஞ்சித் தத்வதத்வித்தியாங்கரம்*
*தஸ்யைவமூர்தயஸ் திஸ்ரோ ப்ரஹ்மவிஷ்ணுஹராபிதா:*

**அநுஶாஸநீகபர்வம்.**

*ஸஷபக வாக்ருத்ர:: ஸர்வதத்வாதித்வ்யய:*
*ஸோஸ்ருஜத்தக்ஷிணாதங்காத் ப்ரஹ்மணம்லோகஸம்பவம்*
*வாமபார்ப்பவரத்ததாவிஷ்ணும் லோக ரக்ஷார் தமீஸ்வர:*
*ஹ்ருதயாத்காலருத்ராக்யம் ஸர்வஸம்ஹாரகாரகம்.*

**ஸ்காந்தம்.**

*மதங்கஸ்வேதஸம்பூதௌ ப்ரஹ்மநாராயணாவிமௌ.*

**லிங்கபுராணம்.**

*கக்ஷிணாங்கபவோப்ரஹ்மா வாமதம்சஜநார்த்தந:*

**காளிகாகண்டம்-விஷ்ணுவாக்யம்.**

*ஜாதோஹமஸ்யவாமாங்கே ப்ரஹமசை வாஸ்யதக்ஷிணே.*

**ஆதித்ய புராணம்.**

*யதாஜ்ஞயாஜகத்ஸ்ரஷ்டா விரிஞ்சி பாலகோஹரி*
*ஸஹர்தாகாலருத்ராக்யோ நமஸ்தஸ்மைபிநாகிநே.*

இத்தியாதிநியாயங்களாற் கற்பங்கள் தோறும், சிவபெருமான் அநேககோடி பிரம விஷ்ணு ருத்திரர்களை அவ்வவர்களின் பாஶ வீக்கத்தின் நீக்கத்தின் பொருட்டு அணுத்தன்மை நீக்கிச் சிவமாந் தன்மையருள, தமது திரு அங்கத்தினிடத்துச் சிருட்டித்து, மீண்டுந் தம்மிடத்தில் ஒடுக்கிக்கொள்வர் "யாதேருத்ரபிதர் மருதா௦ஸு மந்தமேது," என்னும் சுருதி ப்ரமாணத்தின்படி, அத்தேவர்களைக் கற்பங்கள் தோறும் சிருட்டித்தும், மீண்டுந்தம்மிடத் தொடுக்கியும், தாம் பிறப்பிலராய், மும்மூர்த்திமுத லாகிய தேவர்களுக்கும் பிறப்பிடமாய்த் தனித்து நிற்பராதலின், சிவபிரான் ஏகபாதத்ரி மூர்த்தியெனப் பெயரெய்தினர்.

**காஞ்சிப்புராணம்.**

*"அடுப்பார்க் கருளு மொருதாளு மம்பொற் கமல விழிமூன்றும்*
*படப்பாம் பணிந்த புயநான்குஞ் சூலப் படையு மெழில் வயங்க*
*விடப்பா வரியை வலத்தயனை யெழுநாற் கோடி யுருத்திரரை*
*நடுப்பாற் றோற்றி யையைந்து வடிவ முடனா நலம்பிறக்கி.*

*புகன்ற விடப்பாற் பகுதியினைப் புந்தித் தலத்திற் புந்தியினை*
*யகங்காரத்தி னுறுதன்மாத் திரையிற் பொறியி னவ்வவற்றைத்*
*தகுந்தாள் குய்ய முந்திகளந் தலையிற் பார்நீ ரனல்வளிவான்*
*மிகுஞ்சீர் விழியி னிடத்திரவி வெண்கேழ்மதியைப் படைத்தருளி.*

*அடியி னடங்குங் கீழுலக மனைத்து மடியி னுறத்தேற்றி*
*முடியி னடங்கு மேலுலக முழுது முடிப்பா லளித்தருளிப்*
*படியில் கருணைப் பிழம்பாகிப் பரசு மடியா ரகவிளக்காய்ச்*
*கொடியமலநோயரட்டொதுக்குங்கோணைப்பெருமான் றிருபருவம்.*

**ஏகபாதத்ரிமூர்த்தயே நம:**

ஐம்பத்தொன்றாவது

# த்ரிபாதத்ரி மூர்த்தி.

திவ்விய மங்கள ஸ்வரூபராகிய சிவபெருமான் மகேச்சராக நின்று, தம்மிடத் திருந்து அகிலபுவனங்களையும், அப்புவனாதிபர்களையும் முறையே தோற்றுவித்து, அத்தோற்றிய அடைபே தம்மிடத்திலொடுக்கிக்கொள்வர். அவ்வொடுக்கம் நித்தியம் நைமித்தியம் பிராகிருதம் ஆத்தியந்திகம் என நான்குவகைப்படும். அவற்றுள் முதலிற்கூறிய நித்தியம் என்பது ஆன்மாக்கள் அவரவர்கட் கறுதியிட்ட ஆயுளினிறு தியில், தத்தங்காரணத்தொடுங்குவதாம். இரண்டாவதாகிய நைமித்திகம் என்பது பிரமாவினது பகல்கழிய, உலகஞ்சலத்தால் மறைதலாம். மூன்றாவதாகிய பிராகிருதம் என்பது பிரமதேவனது காலவளவை யொழிய உலகமெல்லாம் மடிந்து பிரகிருதியில் ஒடுக்கமுறுதலாம். நான்காவதுங் கடைப்பட்டதுமான ஆத்தியந்திகம் என்பது ஆன்மாக்கள் விரிந்தஞானத்தினால் முத்தியடைதலாம்.

அவற்றுள், முதற்கூறிய நித்தியமென்பது வெளிப்படை. இரண்டாவதாகிய நைமித்திகம் பிரளயத்தின் முடிவில், சூரியன் நூறு தேவவருடமட்டும், சுவர்க்க மத்திய பாதல லோக மனைத்தும் முதலற, அழற்கதிர்பரப்பி, கடலாற்சூழப்பட்ட பூமியும் அதைச்சூழ்ந்த பெரும்புறக்கடலும் வறண்டு பொரிந்து போகும்படி, தீப்பொறி களைச்சிந்தி அக்கினிதேவனுடன், கொல்லுந்தொழில் செய்யும் யமனைப்போலக் காலத்தோடு கலந்து, பூலோகம் - புவர்லோகம் - சுவர்லோகம் - ஜனலோகம் - மகாலோகம் - தபோலோகம் - ஸத்யலோகம், அதலம் - விதலம் - தலம் - நிதலம் - தராதலம் - லாதலம் - மஹாதலம் - பாதலலோகம் முடிவுவரையிலுள்ள சராசர மெல்லாவற்றையு மெரிப்பன். இங்ஙனம் செய்ததின் பின்னர் நூறு வருஷம் மேகக் கூட்டங்கள் குழுமி யானைத்துதிக்கையினின்றும் நீர் சொரிதல் போல நீர்த்தாரைபொழிந்து மின்னி இடித்துச் சூரியோஷ்ண முதலியவற்றைத் தம்மிடத்தொடுக்கிக்கொண்டு பெருமழை சொரியும். இவ்வகைய நைமித்திகப் பிரளயகாலத்தில் பிரமன் யோகநித்திரை செய்வன். இப்பிரளயத்தோடு கூடிய கற்பத்தை வராககற்பமெனவுங் கூறுவர்.

பிராகிருதப் பிரளயத்தைச் சிறிது விரிப்பாம். பரமாணு இரண்டு கொண்டது அணு. அதுமூன்றுகொண்டது திரிசரேணு. அது மூன்று கொண்டது துடி. அது மூன்று கொண்டது வேதை. அது மூன்று கொண்டது லவம். அது மூன்று கொண்டது நிமிஷம். அது மூன்று கொண்டது கணம். அது ஐந்து கொண்டது காட்டை. அது பதினைந்து கொண்டது லகு. அது பதினைந்துகொண்டது கன்னல் அல்லது கடிகை. அது இரண்டுகொண்டது முகூர்த்தம். அது பதினைந்துகொண்டது பொழுது. அது இரண்டுகொண்டது நாள். அது பதினைந்து கொண்டது பட்சம். அது இரண்டு கொண்டது திங்கள். அது இரண்டு கொண்டது இருது. அது மூன்று கொண்டது அநயம். அது இரண்டு கொண்டது ஆண்டு என்று சொல்லப்படும். ஆண்டு அல்லது வருடம் நூறுகொண்டது மாநுடர் ஆயுள் காலம். மேற் கூறிய மாநுடநாள் முப்பது கொண்டது தென்புலத்தோர்க்கு ஒரு நாள். அவ்வகைத்திங்கள் பன்னிரண்டு

கொண்டது தேவர்களுக்கு ஒருநாள். அவ்வகைய நாள்கள் கூடிய ஆண்டு பன்னீராயிரங் கழிந்தால் தேவர்களுக்கோர் ஊழியாம். நால்வகையூழி யாயிரஞ்சென் றால், பிரமனுக்கொருபகல். இதற்குள் சுவாயம்பு - சுவாரோசிஷன் - உத்தமன் - தாமசன் - இரைவதன் - சாக்குஷன் - வைவச்சுதன் - சூரியசாவர்ணி - தக்ஷசாவர்ணி - பிரமசாவர்ணி - தருமசாவர்ணி - உருத்திரசாவர்ணி - ரௌச்சியன் - பௌத்தியனென்னும் பதினான்கு மநுக்களும், அரி - விபச்சித்து - சுசாந்தி - சிவிவிபு - மனோசவன் - புரந்தரன் - மாவலி - அற்புதன் - சாந்தி - விருடன் - இருதராமன் - திவற்பதி - சுசி என்னும் பதினான்கு இந்திரர்களும் நீங்குவர். அப்பொழுது பிரமன் சிருட்டி நீங்கித் துஞ்சுவான். இதையே பிராகிருதப் பிரளயமென்பர். இத்தகைய பிரமர் ஒரு கோடிய ரிறப்பின் திருமாலுக்கு ஒருபகலாம். இவ்வகையே விஷ்ணுவின் காலவளவை கழியின் விஷ்ணுவு மிறப்பர். [ஆதியந்திகப் பிரளயமென்பது ஆன்மாக்கள் இருவினையொப்பும் மலபரிபாகமும் பெற்றுச் சர்வேசுவரனுடைய திருவருளால் சத்தினிபாத முற்று முத்தியிற் கலத்தலாம்.]

இவ்வாறிறந்த பிரமவிஷ்ணுக்களும் உருத்திரரும் தாம்தோன்றிய அடைவே மகேச்சுரனிடத்தில் லயமாவர். அம்மகேச்சுவரரோ அநேககோடி சூரியப்பிரகாசமாய்ப் பிரமாண்டங்களையெல்லாம் நெற்றிக்கண்ணா லெரித்து, அவ்வாறு எரியுண்ட புவனபதிகளின் அங்கங்களைக் கருணையாலே, தம்மிடத் தொடுக்கிக்கொள்வர். பிரமா - விண்டு - உருத்திரனென்னு மூவரும் ஒடுங்குஞ்சமயத்து மகேஶ்வரரெழுந் தருளிய அவசரம் த்ரிபாதத்ரிமூர்த்த மெனப்படும். அதாவது மூன்றுபதமாக நின்ற மும்மூர்த்திகளும் மகேசுவரரிடத்தில் லயமாதலாகிய அவசரம் என வுணர்க.

எல்லாப் பொருள்களும், தத்தம் பிறப்பிடத்திலேயே லயப்படும் என்பதற்குப் பிரமாணம்.

"*யாதேவா இமாநிபூதாநிஜாயந்தேயே நஜாதாநி ஜீவந்தியத் ப்ரயந்தயயிஸ௦ விஸந்திதத் விஜிஜ்ஞா ஸஸ்வததப்ரஹ்ம*"- சுருதி.

**சிவஞானபோதம்.**
**முதற்சூத்திரம் - உதாரணம்.**

"*இலயித்த தன்னின் லயித்ததா மலத்தா*
*லிலயித்த வாறுளதா வேண்டு - மிலயித்த*
*தத்திதியி லென்னி னழியா தவையழிவ*
*தத்திதியு மாதியுமா மாங்கு.*"

**த்ரிபாதத்ரிமூர்த்தயே நம:**

## ஏகபாத மூர்த்தி.



ஐம்பத்திரண்டாவது

# ஏகபாத மூர்த்தி.

கண் முதலிய உறுப்புகளின்றி, கருத்தினுக்கெட்டாதாகி வண்ணமுங்குணமு மின்றி மாறிலாப்பொருளாய் ஆதிமத்தியாந்த ரகிதமாய்ச்சுயஞ்சோதியாய்ச் சர்வான் மாக்களும் தோன்றி லயிக்குமிடமாயுள்ள சாக்ஷாத் சிவபெருமான் ஆன்மாக்கள் ஆணவகேவலத்திலழுந்தித் தம்மையறியாது கிடப்பதை யறிந்து சத்தியை க்ஷோபி த்து ஞானத்தை யுதிப்பித்து, அவ்வான்மாக்கள் ஆணவாதி மலபந்தங்கள் நீங்கித் திருவடியையடையத் திருவுள்ளங்கொண்டு சிருட்டியாதியைக்கருதி, மீண்டும் படைத்தும், அவற்றைக் காத்தும், சங்கரித்தும், திரோபவித்தும், அநுக்கிரகித்தும் வராநிற்பர்.

சர்வசம்ஹாரகாலத்திற் சத்தியில் அனைத்துயிரும் ஒடுங்க, அக்காருண்ய சத்தியார் தம்மிடத்தொடுங்க, சிவபிரான் ஒருவரே அழியாதிருந்தருளுவர்; எனவே வேதசிவாகமபுராணாதிகள் ப்ரதிபாதிக்கும். இவரே சர்வகாருண்யராகிய பகவான்; அணிமாதி அஷ்டசித்திக்கும் முதற்காரணர்; பிரணவவாச்சியர்; பர்க்கபகவத் சப்தவாச்சியர்; இவரே தனிப்பொருளாய் நிற்பவர். இவற்றைப் பின்வரும் உபநிடதாதி மஹாவாக்கியங்கள் வெளிப்படுத்தும்.

**ஶ்ருதி வாக்கியங்கள்.**

ஈஶாநஸ்ஸஏகோருத்ர: || ஶிவஏவகேவல: || ஏகஏவருத்ரோ நத்விதிய்யாயத ஸ்தே || த்யாவாபூமிஜயநந்தேவஏக: || ஸஶிவஏகோதேவ: || தமேகம்புருஷம்ருத்ரம்: || யஏகோருத்ரஉச்யதே || ஏகமே வாத்விதிய்யம்ப்ரஹ்ம || ஸர்வேவைருத்ர: || விஶ்வாதி கோருத்ரோ மஹருஷி: || ய:பரஸ்ஸமஹேஶ்வர: ||

இத்யாதிப் பிரமாணங்களால், பகவானாகவுள்ள சிவமூர்த்தியே தனித்து நிற்பவரெனவும், எஞ்சிய இமையவர்கட்கு முதல்வரெனவும் பெறப்பட்டது. இனி பகவத் சப்தவாச்சிய ரென்பதற்குப் பிரமாணங் கூறுவாம். பகவானென்பது அறுகுணச் செல்வனெனப்பொருளாகும்.

**அவையாவன.**

“ஐஸ்வர்யஸ்யமுக்ரஸ்ய வீரயஸ்யயஶஸ:ஶ்ரிய: - ஜ்ஞாநவை ராக்யயோஸ் சைவஷண்ணாம்பக இதீரித:” - இத்தகைய அறுகுணங்களும் சிவபெருமானுக்குள்ள வை. எவ்வாறெனின், ஶ்வேதாஶ்வதரோபநிஷத்து "தமீஶ்வராணாம் - பரமம்மஹேஶ்வரம்" என்றும், "ஸர்வஸ்யப்ரபுமீஶாநம்" என்றும், தைத்ரீயகம் "யபரஸ்ஸமஹேஶ்பஸ்வர:” என்றும், அதர்வஶிரஸு "ஸர்வைஶ்வர்யஸம்பந்ந: ஶ0பு:" என்றும், ஸௌப்திகபர்வத்தில், கண்ணன் வாக்கியம்" நூநம்ஸதேவம் தேவாநா0 ஈஶ்வஶ்ரேவரமவ்யயம்." என்றும் போந்த பிரமாணங்களால்,

எல்லாமுடைமைக் குணமுடையான் சிவபிரானென்பதும், இப்பகவானை யுபாசித்தே மற்றத்தேவர்கள் ஐசுவரியாதி சம்பத்துகளைப் பெற்றார்களென்பதும் விளங்குகின்றன.

இனிவீர்யன் என்பதற்கு , ஸ்ருதி "ம்ருகந்நபீமமுபஹத்துமுக்கரம்" என்று கூறிய உக்ரசப்தத்தால் வீர்யனெனப் பெறப்பட்டது. பாகவதம் சதுர்த்தஸ்கந்தம் பிரமன் வாக்கியம் "நாஹம்நயஜ்ஞாநசயஸ்யயூயம் -தேதேஜோவாஜாமுநயஸ்ச ஸத்வம் - விது:ப்ரமாணம்பலவீர்யயோர்வா - தஸ்யாத்தமந்த்ரஸ்சந உச்பிதித்ஸேத்" என்றும், ஶருதி "நஸந்நசாஸந்ஶிவ ஏவகேவல:" என்றும், காட்டிய பிரமாணங்களால் யஶோகுணமுடைமை நிரூபிக்கப்பட்டது. "அதவாசேஷகல்யாண குணைககன ஈஶ்வர: ஶிவஇத்யுச்யதேஸத்பி: ஶிவதத்வார்த வேதிபி:" என்றும், இராமாயணம் "ஶ்ரீமத: ஶிதிகண்டஸ்யகீர்திர்ஹிதுரதிக்ரமா" என்றும், ருக்வேதம் "ஶ்ரேஷ்டஜாதஸ்ய ருத்ரஸ் யஶ்ரியா ஶிதபஸ்ந மஸ்தபா0 வஜ்ரபாஹோ" என்றும், விளக்கிய பிரமாணங்களால் ஐசுவர்யமுடைமையும் யஶோ குணமுடைமையும் அநந்தகல்யாண குணமுடைமையு நாட்டப்பட்டன. ஶ்வேதாஶ்வதரோபநிஷத்து "ஏநாவ்ருதம்ஸத்யமிதம்ஸர்வஜ்ஞ: காலகாலோகுணீஸர்வவித்யய:" என்பதாற் செல்வமுடைமையும் ஞானவைராக்கிய முடைமையுஞ்சாற்றப்பட்டன. பின்னும் கூர்மபுராணம் "யஸ்துயோகம்ததாமோக்ஷ மிச்சேதஜ்ஞாநமுத்தமம் ஸோர்த யேத்வை விரூபாக்ஷம்" என்றும், ஸ்மிருதி "ஈஶ்வராதாத்ஜாநமீப்சேத்" என்றும் காமாரி சப்தம் வைராக்யகுணத்தைக் கூறிற்று. பாகவதம் அஷ்டமஸ்கந்தம் "விரக்தஸ்த்வத்ருதேபுமாந்" என்றும் இவ்வாறு ஷாட்குண்ய ஸம்பத்தியும் சிவபிரானிடத்தே அநந்ய சாதாரணமாயுள்ளன.

அன்றியும் மந்த்ரோபநிஷத்து "தர்மாவஹம் பாப நரம்பகேUTO" என்றும், வேறோர் மந்த்ரம் "ஸர்வாநநஶிரோக்ரீவ: ஸர்வபூதகுஹாஶய: ஸர்வவ்யாபீஸ பகவாந் தஸ்மாத்ஸர்வகத:ஶிவ:" என்றும் பகவத் ஸப்தவாச்சியம் நிர்த்தேசிக்கப் பட்டது. இனிச்சிவபிரானே பிராணவாச்சியரென்பதை விளக்குவாம். ஶ்ருதி "யோவா தாதௌஸ்வ ர:ஃப்ரோக்த:" என்று பிரணவ சப்தவாச்சியத்துவம் மஹேஶ்வரைக நிஷ்டமாய்த்தெரிவித்தது. பின்னும் ஶ்ருதி "ப்ரம்மாஶிவோமே அஸ்துஸதாஶிவோம்" என்றும், லிங்கபுராணம் ப்ரணவோவா வாசகஸ்தஸ்ய ஶிவஸ்யபரமாத்மந:" என்றும், ஆதித்தபுராணம் "வாசக:- ப்ரணவோயஜ்ஞாந மூர்த்தேருமாபதே:" என்றும், கடவல்லீமாண்டுக்யாதர்வஶிர: ஶிகைப்ரஶ்நோபநிஷத் முதலியவற்றுள்ளும், பிரணவம் ஶிவைக்வாசங்களாகவே பிரதிபாதிக்கப்பட்டது.

இனி வேதங்களாற் கூறப்படும் பர்க்காதிசப்தப் பொருளாவார் சங்கரர் என்பதற்கு ஆதித்யபுராணம் "பர்கோவிஶ்வஸ்யபரணாத்விஶ்வயோநிருமாபதி: தஶ்யஞாநமயிஶக்திபார்யாசகிரிஜாஶிவா" என்று கூறிய ஏதுக்களால், சிவபெருமான் ஒருவரே மற்றத்தேவர்களுக்கு அருள்புரிந்து முதலிலும் கடையிலும் தனித்துநிற்பர் என்பது பெறப்பட்டது.

இத்யாதிபிரமாணங்களாற்போந்த பரமபதியாகிய சிவபெருமான் சர்வ ஸம்ஹார காலத்தில், யாவரும் லயமடைய எல்லாவுலகும் தமது திருவடியிற் பொருந்த நிற்பதால் ஏகபாதமூர்த்தியென்று சுருதியாதிகளாற் பிரதிபாதிக்கப்பட்டனர்.

**இலிங்கபுராணம்.**

"*வெய்யதிரி சூலம்விழை வோடினிதி னேந்துங்*
*கைகளொரு நான்குமலர் கண்களொரு மூன்றுஞ்*
*செய்யமலர் வென்றவொரு தாளுமுறு தேவை*
*பொய்யென வமைத்தவர்கள் முத்தியுறு வாரே.*"

**ஏகபாதமூர்த்தயே நம:**

ஐம்பத்து மூன்றாவது

# கௌரீவரப்த மூர்த்தி.

மந்தரபர்வதமானது மஹாதேவரை நோக்கிப் பலகாலந்தவஞ் செய்து, அப்பரமபதி தன்னிடம் வாழும்படி வரம் பெற்றமையால் சிவபெருமான் தேவியாருடன் அதிற்சிறிதுகாலம் வீற்றிருந்தனர். அவ்வாறிருக்கையில் அம்சவாகனனாகிய அலரோனை நோக்கி அநேக நாள் அருந்தவமாற்றிய அசுரனொருவன் உமையம்மையார் உடலினின்றுதித்த ஒருபெண்ணால் உயிரொழிந்தாலன்றி, வேறொருவராலும் இறவாதிருக்க வரமேற்று இமயவரையலைத்து வந்தனன். அந்த அவதியையகற்ற வழியாதென்று வருந்திக் கருதியமலரோன் மந்தரமடைந்து எம்பிரானைப்பணிந்து “இறைவரே! இமயவல்லியாகிய எமதன்னையிடம் ஓர் கன்னியைத்தோற்றுவித்து அவ்வசுரனை யழிக்கவேண்டும்" என விண்ணப்பிக்க, இறைவர் அவ்வாறேயாகுக, என்று விடையளித்தனுப்பினர்.

பின்னர், காளகண்டராகிய கண்ணுதல் லீலாமாத்திரையாய்த் தேவியாரைத் திருநோக்கஞ்செய்து "ஏகாளிவருக” இறைவி "கருப்புவில்லியாகிய காமனைக் காய்ந்து கல்லாடையுஞ் சடைமுடியுத்தரித்த கடவுணாயக! தேவரீரிவ்வாறு திருவாய்மலர்ந்தது யாது காரணம்? விருப்பில்லாமனைவி மகளிருட்பதடியா வளாதலின், இக்காருரு நீங்கிக் கவுரியாம் வண்ணங் கருணைபூத்தருள்க" என்று கண்ணிணையில் முத்துக்கள் போல் நீர்த்துளிகள் சிந்தினள். கருணாமூர்த்தி “பெண்ணே: சர்வான்மாக்களையுங் காத்தலே நமது கடனாதலின் ஓர் கருமப் பொருட்டாய் இவ்வாறு கழறினோம். மனங் கலங்கற்க. அதனைப் பின்னரறிவாய்" எனத் திருவாய்மலர்ந்தருள, அம்பிகை அண்ணலை வலம்வந்து பணிந்து விடை பெற்று, இமயமலைச்சாரலை யடைந்து, ஆங்கோர் சிவலிங்கப்பிரதிட்டை செய்து ஆகமவிதிவழாது பூசித்து அருந்தவத்திருந்தனள்.

அசுரர் செய்யுந் தீமையில் அவதிப்படும் அந்தரத்தவர், சதுமுகனை முதலாகக்கொண்டு, சாம்பவியால் வந்து சாஷ்டாங்கமாகப் பணிந்து "தாயே! தமது திருமேனியினின்றோர் சத்தியையுதிப்பித்து, தானவர் குழாத்தைச்சங்கரித்து வானவருக் கருள்வழங்க வேண்டும்” எனப் பிரார்த்தித்துக்காத்திருந்தனர். மலையரச புத்திரியாராகிய விமலை, மஹாதேவரது திருவருளாற் கௌரநிறமாங்காலஞ் சமீபித்தது. அப்பொழுது அன்னையார் தமது காளநிறத்தை விலக்க, அதுவே துர்க்கையாயது. துர்க்காதேவி பிரமனாற்கொடுக்கப்பட்ட சிங்கவாகனமேறி உமையம்மையார் கட்டளைப்படி நிருதரைக்கொன்று விந்தகிரியில் வீற்றிருக்கின்ற னள். பரமேச்சுவரியார் புராரியின் திருவருளாற் பொன்னிறமுற்றுக் கௌரியென்னும் பெயர்பெற்று, மந்தரமலையையடைந்தனர். திருநந்திதேவர் முதலிய சிவகண நாதர்கள் திருவடிபரவத் திருச்சந்நிதானத்தினுட் சென்று சிவபிரானைச் சேவித்துத் திருக்கரங்கூப்பிநின்றனர். மங்கையைத் தமது செங்கையாலெடுத்துச் சங்கரர் தமது திருத்தொடைமீதிலிருத்தினர்.

சிவபெருமானை நோக்கி உமையம்மையார் தமது கருமைநிறத்தாலெய்திய காளியென்னும் பெயர்நீங்கிப், பொன்னிறமாகிய திருமேனியுங் கௌரியென்னுங் காரணத் திருநாமமுமெய்தக் கையேற்றுச் சந்நிதியில் வரங்கொண்டமூர்த்தமே கௌரீவரப்தமூர்த்த மெனக்கழறப்படும்.

**கௌரீவரப்தமூர்த்தயே நம:**

ஐம்பத்து நான்காவது

# சக்ரதாநஸ்வரூப மூர்த்தி.

உலக முழுவதும் ஒரே செங்கோலினா லரசுபுரிந்து வந்த குபன் என்னும் மன்னன் காரணமாகத் திருமால், ததீசி முநிவரையெதிர்த்துச்சமர்புரிந்து சகிக்கமுடியாராய்த் தமது சக்ராயுதத்தை அம்முநிபுங்கலன்மேற் பிரயோகிக்க, அது அம்முநிசிரேஷ்டாது வச்சிரயாக்கையிற்றாக்கி வாய்மடிந்து மீண்டது. அதுகண்ட அச்சுதன் அச்சமுற்று, மாயாரூபமொன்று தன்போலுண்டு செய்தனன். முநிவர் முனிந்து தமது காற்பெருவிரலையசைக்கக் கணக்கில்லாதவிண்டு மூர்த்திகள் வெளியே தோன்றினர். அதனால் அவர் தவவலி மிகுந்தவரென்றும், அவரை வெல்லத்தக்கவல்லமை தன்னிடத்தில்லையென்றும் சார்ங்கன் தெரிந்து, அம்முநிவரைச் சரண்செய்து மீண்டு தன்னுடன் போந்த வானவரை நோக்கி, "யான் தீயரைச்செகுத்து உலகைப்புரக்குந் திதிக்கடவுளாதலின், எனக் கித்தகைய சக்ரம் இன்றியமையாதது: இதுபோல வேறொன்றுயாண்டுப்பெறுவேன்" என்றிசைத்து வருந்த, இமையவர் "சலந்தரனென்னுந் தானவத் தலைவனைச் சங்கரன் சங்கரிக்குமாறு திருவடியாற்கீறி நிருமித்த சுதரிசனமென்னுஞ் சக்கரப்படை அம்மஹாதேவன்பாலுள்ளது" என மறுமாற்றங்கூறினர்.

அதுகேட்ட திருமால் சிந்தைகளித்துச் சிவார்ச்சனையாலதனை யடைவேனென் றுள்ளத்தமைத்து, ஓர் சிவலிங்கக் குறியை ஸ்தாபித்துப் பாசுபதவிரதம்பூண்டு சங்கற்பஞ்செய்து திருவெண்ணீறு தரித்து அக்கமாலைசூடி, தேவர்கள் பூசைக்குரிய உபகரணங்களைச் சித்தஞ்செய்து கொடுக்கப் பரமபதியைப் பதுமமலர் ஆயிரத்தால் நாடோறும் பவன் முதலிய திருநாமங்களோதி அருச்சிக்கத்தொடங்கினர். அவ்வாறு நிகழ்ந்து வருகையிற் பத்திவலையிற் படுவோராகிய பரமேச்சுரன் அவரதன்பின் முதிர்ச்சியை ஆர்கலிசூழ்ந்த அவனிமாக் கட்கறிவிக்க ஆயிரங்கமலத்தில் ஒருசலசத்தை மறைவாக்கினர். விண்டுவுணராரா கிப் பண்டு போற்பவன் முதலிய ஸகஸ்ரந் திருநாமங்களையோதி ஒவ்வொரு கஞ்சமாகவெடுத்துப் பூசித்து வந்து கடைசியில் ஓர் திருநாமத்திற்கு மலர்காணாராய் "இஃதென்னை யாளாகவுடையார் திருவிளையாட்டு" என்றெண்ணி, தமதுபூசை முட்டுப்படாவண்ணம் விழியொன்றைப்பிடுங்கி மலராகப்பாவனை செய்து அர்ச்சித்து முடித்து ஆனந்தக்கடலுளழுந்தினர்.

உடனே, பிறைசூடிய பெருந்தகையார் களிகூர்ந்தவராகிச் சோதிமயமான பேருருவுடன் தெரிசனந்தர, திருமால் அஷ்டாங்க பஞ்சாங்கமாகப் பலமுறை பணிந்து, வேதவாக்கியங்களாற்றுதித்துக் கையேற்றுநிற்க, கருணைவள்ளல் “கமலைகேள்வா உன்பூசைக்கு மனங்களித்தோம். உனது கண்ணையளித்தோம். கமலக்கண்ணன் என நாமமடையக்கடவாய்" என்று திருவாய்மலர்ந்தருளி, தமது திருக்கரத்திலிருந்த ஸுதர்சனம் என்னுஞ் சக்கராயுதத்தைப் பிரசாதஞ்செய்து எத்தகைய வலியினராயினும் நின்னை யெதிர்த்தோரை இஃது இமையளவிற் கொல்லும் ஆற்றலுடைய தென்றநுக்கிரகித்தனர். திருமால் இவ்வரங்களையும்

ஸுதர்சனத்தையும் பெற்றுப் பலமுறை பணிந்து அருவியாறுபோற் கண்களில் ஆநந்தபாஷ்பஞ்சிந்தப் பலவகையாகப்பாடி ஆநந்தக்கூத்தாடி எம்பெருமானது திருவடியை முடியிற்சூடி வைகுந்தத்தைகாடி இடையறாச் சிவபக்தியுடன் வீற்றிருந்தனர்.

**ஸ்காந்தபுராணம்.**

*ததிசிநாமிர்ஜிதஸ்த்வம்ஸ0க்ராமேஸமருத்கண:*
*கண்டூயமாநஶ்ஶிரஸி கதம்தத்விஸ்மருதம்த்வயா*
*சக்ரம்விக்ரமஸாஹாய்யம்சக்ரபாணேதவப்ரியம்*
*குத:க்ருத0தேநயச்சத்வ யாததபிவிஸ்ம்ருதம்.*

**ஆதித்யபுராணம்.**

*ஸுதர்ஶநாக்யம்யச்சக்ரம்லப்சவா0ஸ்தத்கதம்ஹரி:!*
*மஹாதேவாத்பகவதஸ்ஸூததத்வத்துமர்ஹவி, இத்யாதி,*
*ஹிமவத்பர்வதம்கத்வா பூஜயாமாஸஶங்கரம்*
*லிங்க0தத்ரப்ரதிஷ்டாப்யஸ்நாப்யகந் தோதகைஶ்ஶுபை*
*ஹ்ருதபுஷ்போஹரிஸ்தத்ரகிமித0த்விதிசிந்தயந்*
*ஜ்ஞாத்வாஸ்வநேத்ரமுத்த்ருத்யஸர்வத0த்ராவலம்பநம்*
*பூஜயாமாஸதேவேஶ0, இத்யாதி.*
*ஏவமுக்த்வாததௌசக்கரம்ஸூர்யாயுதஸமப்ரபம்*
*நேத்ரஞ்சபத்மஸத்ருஶ0விஷ்ணவேப்ரபவிஷ்ணவே*
*லோகேதுபுண்டரீகாக்ஷஇதிக்யாதி0கதோஹரி: இத்யாதி*
*மயிபக்திர்த்ருடாவிஷ்ணோ பவிஷ்யதிதவாநக*
*ஆஜேயஸ்த்ரிஷுலோகேஷுமத்ப்ரஸாதாத்பவிஷ்யஸி*

**வாமநபுராணம்.**

*அதாப்யேத்யஜகந்நாதம்ஸஹஸ்ரஶிரஸம்விபும்*
*ஆராதயாமாஸஹரி:ஸ்வயமாத்மாநமாத்மநா*
*ஸாங்கவர்ஷஸஹஸ்ரந்துபாதாங்குஷ்டேந்தஸ்திவாந்*
*தத:ப்ரீதோஹர:ப்ராதாத்விஷ்ணவேதுவரம்பரம்*
*ப்ரத்யக்ஷ0தைஜஸ0ஶ்ரீமத்திவ்யசக்ரம்ஸுதர்ஶந0, ப்ரதஶாந்தரே*
*அமோகஏஷோமரராஜபூஜிதோ*
*ஹ்ருதோமயாநேத்ரகதஸ்தபோபலாத்.*

**ஹரதத்தர் வாக்கியம்.**

*காயத்ரீவல்லபத்வாத்தஶரததநயஸ்தாபிதாராதிதத்வாச்சௌரை: கைலாசயாத்ராவ்ரதமுதிததயாபீஷ்ட ஸந்தாநதாநாந்நேத்ரேணஸ்வேநஸாகந்தஶஶதகமலைர் விஷ்ணுநாபூஜிதத்வாத்தஸ்மைசக்ரப்ரதாநாதபிசபசுபதிஸ்ஸர்வதேவப்ரக்ருஷ்ட:*

அவதாரகோலத்திலே ததீசி முதிவர் மகிமையை அறியாமையால் அவர் பேரில் திருமால் பிரயோகித்த சக்கரம் கூர்மழுங்கித் திரும்பியதாதலின், அதற்குப் பிரதியாகச் சிவபிரானை யருச்சித்துப் பெருவலியமைந்த ஸுதர்ஶநத்தைப் பெற்றனர் என்பதற்கு, ஈண்டுச் சிலப்ரமாணங்காட்டினோம். ஆனால் விஷ்ணு இராமகிருஷ்ணாதி அவதாரங்களிலே மட்டும் சிவார்ச்சனை இயற்றினரா அல்லது அவதாரகோலமல்லாத ஆதிகாலத்தும் சிவபூசை செய்துள்ளாரா எனப் பரியாலோசிக்கும்பக்ஷத்தில், சிவபிரான் பூஜிதரென்றும் வரதமென்றும், திருமாலே பூஜகரும் சிவவரலப்தமஹானென்றும் தெரியவேண்டும். அவற்றிற்குஞ் சில நியாயங்காட்டுவோம்.

**ருக்வேதம்.**

*தவஶ்ரியேமருதோதுர்ஜயந்தேருத்ரயத்தேஜநிமசாருசித்ரம்*
*பதம்யத்விஷ்ணோருபமந்யதாயிதேந.*

**பராஶரபுராணம் ஷோடஶாத்யாயம்.**

ரௌத்ரலிங்கம் மஹாவிஷ்ணுர்பக்த்யாசாருபமிலாமயம் - சாருசித்ரம்ஸமப்யர்ச்யலப்தவாந்பரமம்பதம் - ஸாசலக்ஷ்மீஸ்ஸமாக்யாதா மஹாவிஷ்ணோஸ்துவல்லபா - யஶ்யலிங்கம்ஸமப்யர்ச்சிய ஸபூஜ்ய: ஸர்வசேதநை:- எனப் பிரதிபாதிக்கும் வேதபுராண வாக்கியங்களில் ஆதிவிஷ்ணுவென்றும், மஹாலக்ஷிமியென்றுங் கூறப்பட்டதாகையால் அவதாரங்களில் மட்டுமல்லாமல், அநவரதம் அச்சுதன் அரனடியனேயாவன். பாரதம் துரோணபர்வத்தில் வியாஸாஶ்வத் தாமஸம் வாதத்திலும் வராஹபுராணத்திலும் இன்னும் பல இடங்களிலும் பிரமாணங்கள் விளங்கிக்கிடக்கின்றன. விஸ்தாரபயத்திற்குவெருவி விடுத்தாம்.

இனி அவர் ததீசிமுநிவர்மேற் பிரயோகித்த சக்ராயுதம் பண்டைக்காலத்திலப்பது மநாமனுக்கு எவ்வாறு கிடைத்தது என்பதைப்பற்றியுஞ் சிறிது ஈண்டுக்கூற வேண்டுவதாயிற்று.

அசுரர் தொந்தரவைச்சகியாத தேவர் வேண்டுகோளுக்கிரங்கி அவர்களைச் சங்கரிக்கத்தக்க ஓர் ஆயுதம் எனக்கு வேண்டுமென்று கருதிய திருமால் இமயமலைச்சாரலில் ஓர் சிவலிங்கப்பிரதிட்டை' செய்து நாளொன்றுக்கு ஆயிரந் தாமரைமலர்களால் அநேககாலம் சிவார்ச்சனை செய்துவந்தனர். ஒருநாள் உமாபதி அவர் பத்திமுதிர்ச்சியைப் பரிசோதிக்கும்படி பதுமமொன்றனை மறைக்க மாதவன் தன் கண்ணொன்றைக் கமலமாகப்பாவித்து அருச்சித்தனன். அப்பொழுது அருள் வள்ளல் இடபாரூடராய்த்தரிசனந்தந்து ஓர் சக்ராயுதமுதவி யிதனால் அசுரரை யழித்தி என்றருளி, கண்ணையும் முன்போற்கடாக்ஷத்துச் செந்தாமரைக் கண்ணனெனப் பெயருங்கொடுத்தனுப்பினரென ஆதித்யபுராணத்திற் படிக்கப் பட்டுளது.

## சிவபராக்கிரமம்

முன்னோர் ஆத்தியந்திகப் பிரளயமகன்ற சிறிது காலத்தில் பரமேசுவரர் மீண்டும் பிரபஞ்ச நிர்மாணத்தில் திருவுள்ளங்கொண்டு அப்ராக்ருத ப்ராக்குத ஸ்ருஷ்டிகள் சிறிது செய்து பிரமவிஷ்ணுக்களைப்பிறப்பித்து, "நீங்களிருவருங் கிரமமாகச் சிருட்டி ஸ்திதிக் கர்த்தர்களாயிருங்கள்" எனத் திருவாய்மலர்ந்தருளினர். அப்பொழுது விஷ்ணு விமலரைப்பணிந்து "சுயம்பிரகாசா! துஷ்டநிவாரணத்தின் பொருட்டுத் தகுதியான ஆயுதமொன்றைத் தயவுசெய்தருளவேண்டும்" என விண்ணப்பித்துக்கொண்டனர். சிவபிரான் அவ்வாறே தமது நேத்ர த்ரயத்தால் ஸூர்ய ஸோமாக்நிகளின் தேஜஸு பொருந்திய சக்ரமொன்று நிருமித்து அதனாலேயே கதையொன்று பிறப்பித்துக்கொடுத்தனர். அப்பொழுது பக்கத்திலிருந்த பராசத்தியாகிய உமாபிராட்டியார் தமது திருமுகத்தினால் ஓர் சங்கும் திருநேத்திரத்தினால் ஓர்பத்மமும் பிறப்பித்து அவற்றைத் தாங்குதற்கு முன்னிருந்த இருகரத்துடன் நூதனமாக இரண்டத் தங்களையு முண்டு செய்து பிரசாதித்தனர். இச்சரிதம் ஸ்கந்தருக்கும் அகஸ்திய முநிவருக்கும் நடந்த ஸம்பாஷணையிற் சாற்றப்பட்டுள்ளது.

**ஸ்காந்தபுராணம் சங்கரஸம்ஹிதை.**

*இத்யுக்தோபகவாந்ஶர்வோஹரிணாவிஶ்வமூர்த்திநா*
*தமாஹமேகநாதேநஸர்வேணஹாபீஶ்வர:*
*ஆயுதம்சாஸ்யதாஸ்யாமிதபோவிக்நாபநுத்தயே*
*தேவாரீணாம்சஸம்ஹத்யைரக்ஷாயைஜசதாமிஹா*
*இத்யுக்த்வாபகவாந்விஷ்ணும்தேவதேவஉமாபதி:*
*ஏகாக்ரமநஸாத்யாநகமகமத்பரமேஶ்வர:*
*த்யாயதஸ்தஸ்யதேவஸ்யப்ராதுராஸீத்தமோநுதம்*
*ஶாருநேத்ரத்யாதஸ்யஸஹஸ்திராதித்யஸந்நிபம்*
*அக்நேஸூர்யாச்சஸோமாச்சதந்மயால்லோசநத்ரயாத்*
*த்ரிதேஜோமயமத்யுக்ரம்ஜ்ஞாநாஸ்த்ரம்வஜ்ரபம்ஜரம்*
*நாபௌஸோமாம்ருதமயோஹ்யரேஷுபகவான்ரவி:*
*ப்ராம்தேஷுபகவாநக்நிஶ்சக்ரஸ்யஸ்யாச்சிவாத்வ:*
*ஸசக்ரமதிமாந்பூத்வாகிம்கரோமீத்யபாஷத*
*க்ருதாம்ஜலிகரஸ்தஸ்தௌபஹுபாஹுஸ்த்ரிலோசன:*
*தம்சக்ரம்பாணிநாலம்ப்யவிஷ்ணவேப்ரததௌஶிவ:*
*விஷ்ணோர்வைதக்ஷிணம்பாஹுமபஜத்ஸோபிஹர்ஷித:*
*ததோதேவஸ்யவைஶம்போர்கதாகக்ராத்விநிஸ்ஸ்ருதா*
*தைத்யதர்பஹராகோராஸர்வரத்துசித்ரிதா*
*ஷட்சாஸ்த்ரரூபிணீதிவ்யாஷட்தாராஸ்த்ரீஸ்வரூபிணீ*
*ஆஜ்ஞப்தாஶம்புநாசாபிவிஷ்ணுமேவஸமாஶ்ரிதா*
*வாமமாஶ்ரித்யவைபாஹும்விஷ்ணோஸ்தஸ்யஸ்திதாபவத்*
*ததோதேவீஜகத்தாத்ரீபவாநீஸாபராத்பரா*
*ஶிவாங்கஸம்ஸ்திதாதத்யௌவிஷ்ணோராபேஶஸம்ஜ்ஞயா*
*தஸ்யாவக்த்ராத்ஸமுத்பந்ந;ஶங்கராஜஶ்ஶப்ரப:*
*ஸர்வதேவமய:ஶாந்த:ஸர்வஶத்ருநிபர்ஹண:*

*ஸோப்யாஜ்ஞுப்தஸ்தயாதேவ்யாவிஷ்ணோ:பார்ஸ்வம்தாகமத்*
*தேவ்யாநேத்ராத்ஸமுத்பந்தமம்புஜ0ஸூப்ரபம்ஶுபம்*
*ரமாலயமநோஹாரிஸர்வலோகவிபூஷணம்*
*தஞ்சவிஷ்ணுமமஹாத்மாநமாஜ்ஞுயாபத்மமுத்தமம்*
*ஸமாஸ்யேத்ததோவிஷ்ணுர்விஸ்மயம்பரமம்யயௌ*
*பூர்வம்துத்விபுஜோவிஷ்ணுர்கதா0சக்ரஞ்சஹர்ஷித:*
*ததாரஶம்புநாஜ்ஞப்த:ஸதுசிந்தாமவாபஹ*
*த்விபுஜோஹ0கதம்த்வத்யஆயுதாநாம்சதுஷ்டயம்*
*தரிஷ்யாம்யம்பயாதத்தாவுபௌஶங்காம்புஜாவபி*
*எவஞ்சிந்ததஸ்தஸ்யவிஷ்ணோ:தேவ்யா:ப்ரஸாதத:*
*ப்ராதுராஸ்தாம்கரேஙபீநௌதாப்யாந்தொஙசாப்யதாரயத்*
*ததோவிஷ்ணு:ப்ரஸந்நாத்மாபாங்கசக்ரகதாதர:*
*நமஸ்க்ருத்யஶிவ0ஶாந்தம்க்ருதார்தோஸ்மித்யபாஷத!*
*ததோஜலதகம்பீரகோஷேணபகவாக்சிவ:!*
*விஷ்ணுமாஹமஹாத்மாந0க்ருதார்தோஸீதிகேஶவ:*
*இத்யுக்த்வாம்ததேர்தேவ:பரமாத்மாஸதாஶிவ: ||*

ஈண்டெடுத் துதகரித்த பிரபல பிரமாணத்தானே திருமால் ஆதிகாலத்திலேயே சிவாநுக்கிரகத்தால், சக்ராயுத் தண்டாயுதங்களும், சாம்பவியின் கிருபையினால், சங்கமும் முன்னிருந்ததுடன் இரண்டு கரங்களும் பெற்றனரென்பது புலப்படும். அவ்வாறு சிவகடாஷத்தாற் சக்கரம் பெற்றதை மறந்து விஷ்ணு ஒருகாலத்தில் இறுமாப்புற, அஃது மறைந்துவிட்டது அச்சமயத்திலும் அதைப் பெறும்படி சிவார்ச்சனை செய்து மறுபடியும் பெற்றனரென வேறோர் உபாசனையும், ஷி ஸ்காந்தபுராணம் ஈஶாநஸம்ஹிதை விளக்குகின்றது. [விரிதல் கருதி இதுவரையும் நிறுத்தப்பட்டது.] இத்தியாதி நியாயங்களால் நான்கு முறையில் நாராயணன் சக்ராயுத நிமித்தமாய்ச் சங்கரோபாசனை செய்தவற்றை நிலைநாட்டப்பட்டது.

**திருவாசகம்.**

"*சலமுடைய சலந்தரன்ற னுடறடிந்த நல்லாழி*
*நலமுடைய நாரணற்கண் றருளியவா றென்னேடீ*
*நலமுடைய நாரணன்ற னயனமிடந் தரனடிக்கீ*
*ழலராக விடவாழி யருளினன்காண் சாழலோ.*"

**கூர்மபுராணம்.**
**மாயோன் நேமிபெற்ற அத்தியாயம்.**

"*வையம்பொதிந்தசெங்கனிவாய்மாயோனன்புக்குண்மகிழ்வுற*
*றையன்கையாற்புறநீவியடியிற்புனைந்தமலர்க்கண்ணு*
*மெய்தநல்கிச்சுதரிசனமென்னுஞ்சுடராழியுமீந்து*
*செய்யகமலக்கண்ணனெனும் பெயருஞ்சிறப்பினொடுமளித்தான்.*"

**உபதேசகாண்டம்.**

"*என்னப்போற்றிமுடிபடிதொட்டிழுகப்பணிந்தானெழனோக்கி*
*மின்னுச்சடையோன்றிருவருள்கூர்ந்துருகாநின்றான்விழிக்கமலக்*
*கன்னிக்கிறைவன்கருத்துணர்ந்துகதிராயிரம்போன்றொளிபரப்பும்*
*பொன்னந்திகிரிபுரிந்துபின்னுமெதுவேண்டுவதுபுகலென்றான்.*

*நின்பாலுருகிநினதடிக்கீழ்நெடுங்கண்சாத்துநிலையுலக*
*மன்பாலறிவானெனக்கிருகணம்போருகத்தினருள்கென்னா*
*மின்பாலுகந்தோனஃதருளிவேண்டவேண்டும்வரங்கொடுத்தான்*
*பொன்பான்மருமத்திகிரியினானடைந்தானமரர்புடைபோற்ற.*"

**காஞ்சிப்புராணம்.**

"*ஆங்கவனை யெதிர்நோக்கி நின்பூசைக் ககமகிழ்ந்தே முனக்கிஞ் ஞான்று*
*தேங்கமல விழியளித்தோம் பதுமாக்க னெனும் பெயரிற் றிகழ்வா யிவ்வூர்*
*பாங்குபெறு திருமாற்பே றெனப்பொலிக வென்றருளிப் பானு கோடி*
*தாங்குகதிர்ச் சுதரிசனப் பெயராழித் தனிப்படையு முதவி யெங்கோன்.*"

திருமால் தக்ஷயாகத்தில் வீரபத்திரர்பேரிற் சக்கரத்தை விடுப்ப, அவர் தலைமாலையிலொன்று அதனை விழுங்கியது. பின்னர் விகடக்கூத்தாடி அதைச் சிரிக்கச் செய்தனர்; அதனாற் சக்கரம் நழுவி வாயினின்றுவிழ, ஸ்ரீ விநாயகக்கடவுள் அந்நடங் காணவிரும்பி அதனை எடுத்து மறைத்துவிட்டமையால் அவர் மகிழும்படி மீண்டும் அவ்வாறே கூத்தாடி அவர் திருவருளாற் பெற்றனரெனக் காஞ்சிப்புராணங் கூறும்.

"*போராழி யதன்வாயிற் கழிந்துபுவி மிசைவீழப் பொருக்கென் றங்கை*
*யேரானை முகக்கடவு ளதுகவர்ந்தங் கறியான்போன் றிருப்ப நோக்கிப்*
*பேராண்மைப் படைத்தலைவ னினிச்செயலே தென் றழுங்கிப் பேதுற் றந்தச்*
*சீராளன் றிருமுன்புங் கைகண்ட விகடநடஞ் செய்து வேண்ட*
*ஏக்கறவா னவரியற்றும் விகடநட நெடும்போதெம் பெருமா னோக்கி*
*மாக்கருணை சுரந்தருளி யாழியவன் றனக்களித்தான்-*"

சிவபெருமான். தம்மிடத் திடையறாத அன்புகொண்டு அருச்சித்த திருமாலுக்குச் சக்ராயுத முதவினமையால், அப்பெருமானுக்குச் சக்ரதாநஸ்வரூப மூர்த்தியென ஓர் திருநாமம் வேதாகமபுராணங்களில் விளம்பப்பட்டது.

*வழிதீஞ்சுவைக்கள்வாய்மடுத்து மழலைச்சுரும்பரிசைமிழற்றுஞ்*
*செழிபூங்கமலமொன்றினுக்குத் திருந்துகாதன்மெய்யன்பின்*
*விழிநூன்றடியினருச்சித்த விறன்மாயனுக்குச்சுதரிசனங்*
*கழிபேரருளாலீந்தருளுங் கடவுட்பெருமான்றிருவுருவம்.*

**சக்ரதாநஸ்வரூபமூர்த்தயே நம:**

## கௌரிலீலாசம்ந்வித மூர்த்தி.



ஐம்பத்தைந்தாவது

# கௌரிலீலாசமந்வித மூர்த்தி.

திருக்கைலாயகிரியிற் சிங்காதனத்தெழுந்தருளியிருந்த சிவபெருமானது திருவடிகளைத் தேவியாரெழுந்து பணிந்து நின்று, "இறைவரே! எங்கும் நிறைந்த தேவரீரது உண்மை நிலையை யுபதேசித்தருள வேண்டும்" என விண்ணப்பிக்க, சுயம்பு "உமையே செயல் குண வுருவங்களைப் பொருந்தோம்; சர்வவியாபகமாக விளங்குவோம் ; உருவம் அருவம் உருவருவங்களைப் பொருந்துவோம்" என்று திருவாய்மலர்ந்தருளினர். உமாதேவியார் "உருவமுடையேமல்லமென்றும், பல வுருவமுடையேமென்றும் உரைக்குந்தன்மை யாது?" எனவோத, ஐயன் "அவை நமதருள்வடிவுகள்" என்றறைய, அன்னையார் "ஆயின், அவை யென்வடிவங்களே" என்றிசைத்தனர். நம்பர் "நம்மெதிரில் உன்னை வியந்து கூறினை; உன்னிடத்திலும் ஏனையோரிடத்திலும் யாமேநின்று தொழில் படுத்துகிறோம்; அவ்வாறு தொழில்படு த்துதல் நீங்கினால் அகிலசராசரங்களும் அறிவுமுழுவதும் ஒழிந்து சடமாயிருக்கும்; அதனையறிக' என்று மறுமாற்றமருளி திருமால் திசைமுகன் முதலிய தேவரது உள்ளத்திற்பொருந்தி அறிவினையளிக்குஞ் செயலைங்கிக் கணப்பொழுதிருக்க அகிலான்மாக்களும் அறிவிழந்தவர்களாய்த் தமது முறைதவறிச் சடமாயிருப்பதைக் கௌரிகண்டு, கங்காதரனது கழல் பணிந்து "எம்பெருமானே! எளியே னிசைத்ததை யெண்ணாமல் எவரையுமெழுப்பி யருள வேண்டும்" என்றிரப்ப, இறைவர் கருணை பூத்து யாவரையுமெழுப்பினர்.

விண்டு முதலானார் பண்டைய வுணர்வுறத் துயில் நீங்கினார். போலத் துண்ணென்றெழுந்து அண்ணலைப்பணிந்து "எளியேங்கள் எண்ணில்காலம் அறிவடங்கிச் சடமாய்ச் செய்கடன் மறந்தோம் மாதலின், அப்பாவம் அகலும் வகையை அருள் செய்ய வேண்டும்", என விண்ணப்பிக்க, உத்தமன் "உம்பர்களே! அப்பாவம் உமையிடத்தன்றி, உங்களிடத்ததல்ல" என்றோதியகற்றி, சாம்பவியை நோக்கி "நீ ⁎ தக்கன்மகளாய்த் தரணிமேற்றோன்றுதி; யாம்வந்து மணஞ் செய்வோம்" என ஆஜ்ஞாபிக்க, விமலை விடையூர்தியைப் பணிந்து விடை கொண்டு, காளிந்திந்தியிற்கமலமலரின் மேல் வலம் புரிவடிவாய்ச் சிவநாமங்களை யுச்சரித்துக்கொண்டு, சிறிது காலமிருந்தனள்.

---

⁎ பண்டொரு பகலிற் பதுமன் தனது ஸத்தியவுலகத்தி லிருக்கையில், அவன் தனது மனத்தினின்று ஸப்தருஷிகளையும், மடியினின்று நாரதரையும், நிழலினின்று கர்த்தமரையும் அங்குஷ்டத்தினின்று தக்ஷனையும் பெற்றனன். அவ்வாறு தோன்றிய அவனது மாநதபுத்திரர் பதின்மரில், தக்கன் தந்தையை நோக்கி "எந்தையே! பெருந்தேவர் மூவருள் தலைவனாகவும், எல்லாவுயிர்கட்கும் உயிருமாயுள்ளவன் யாவன்?" என்று வினாவ, சதுமுகன் "தனய சங்கரனே நீவினவிய முதல்வன்" என மறுமாற்றங்கூற , தக்கன் "சிருட்டியாதி மூவகைத்தொழிலிற் சங்காரமொன்றினை யியற்றுஞ் சங்கரன் ஏனைய விருதொழில்புரியு நுமக்கிறைவனாத லெங்ஙனம்?"

என, எண்கணன் "சர்வசங்காரகாலத்தில் எல்லாவற்றையுந் தன்னிடமொடுக்கி மீட்டும் படைப்போனாதலாலும், எம்முள் அந்தர்க்கதமாகவிருந்து சிருட்டி திதிகளைச் செய்விப்பவனாதலாலும், இறைவனாவான்" எனத்தேற்றினன். அதுகேட்டு மனத்தடுமாற்றம் நீங்கி மாநததீர்த்தக்கரையில் ஆயிரவருடந் தவஞ் செய்த தக்கனுக்குச் சிவபெருமான் காட்சிதந்தருளி, "உன் மனதில் விரும்பியதென்?" என, தக்கன்பணிந்து "த்ரிலோகங்களும் என் கட்டளையில் நிற்கவும், தேவரீரைப் பணிவோர் என்னைப்பணியவும், உமாதேவியார் என் புதல்வியாயுதிக்கவும், தேவரீர் வேதியவடிவாய் வந்து மணம் புரியவும், வரமருளவேண்டும்" என வேண்டினன். சிவபிரான் அவ்வாறே யருள் செய்து அந்தர்த்தானமாயினர்.

தக்ஷன் சிவப்பிரசாதத்தாற் பிரமனைக்கொண்டு தக்கமாபுரியென வோர் நகரமியற்றி, ஆங்குக் கொலுவீற்றிருந்து இந்திராதி தேவர்பரவ அரசு செய்து வருகையில், வேதவல்லியை விவாகஞ் செய்து, ஆயிரம் புதல்வரையீன்று, அவர்கட்கு உபநயனகியற்றி, வேதமுணர்த்தி, "நீங்கள் சிவபிரானை நோக்கி மாந்ததீர்த்தக்கரையில் தவஞ்செய்து, "சிருட்டி செய்ய வரம் பெற்று வருதிர்' என விடுத்தனன். அவர்கள் அவ்வாறே தவத்திருக்கையில், நாரதமுநிவர் அவர்களை வினாவி ஞானோபதேசஞ் செய்ய, அவர்கள் தவஞ்செய்து முத்தி பெற்றனர். இச்செயலை ஞான திருஷ்டியாலறிந்த தக்கன் மீண்டும் ஆயிரம் புதல்வரைப் படைத்து முன்போலவே விடுப்ப. அவர்களும் நாரதமுநிவரதுபதேசம் பெற்றுத் தம்முன்னோர் போலவே மோக்ஷமுற்றனர். இதையுமறிந்த தக்கன் வெகுண்டு முநிவரை "எங்குந் திரிக" எனச் சபித்து, இருபத்து மூன்று மாதர்களையீன்று மருதன் முதலான முநிவர்க்கு மணம்புணர்த்தி, இருபத்தேழு பெண்களை யளித்துச் சந்திரனுக்கு மணம்புணர்த்தினன். சந்திரன் அவ்வனிதையர்களில், கார்த்திகை உரோகணியென்னு மாத ரிருவரையன்றி ஏனையோரை முகநோக்கானாயினன். பலநாள் மனம் பொறுத்த மற்றையமாதர் தந்தைபாலுற்று முறையிட, தக்கன் சந்திரனை யழைத்து மதி கூறிவிடுத்தனன். திங்கள் அதனாலும் மனத் திரும்பாமை தெரிந்து சினங்கூர்ந்து "தினமோர் கலையாகக்குறைக" எனச் சபித்தனன். அதனால் நாளுக்கோர் கலையாகக்குறைதல்கண்டு, தக்கன் கொடுத்த சாபத்தினின்று விலகவிரும்பிய சோமன் சிவபிரானைப் பிரார்த்தித்து, பெருமானருளால் வளரவும் தேயவும் வரம் பெற்றனன். அதனையறிந்த தக்கன் கடுங்கோபங்கொண்டு புலகமுநிவர் புகன்ற புத்தியாற் கோபநீங்கி யிருந்தனன்.

---

மாசிமாதத்தில் மகநக்ஷத்திரத்தில் தக்கன் தன் மனைவி வேதவல்லியுடன் ஸ்நானஞ்செய்து திரும்புகையில், இறைவியாரது வலம்புரிச்சங்கவடிவைக்கண்டு கைகளிற்றாங்க, குழந்தை வடிவேற்றமையாற் களித்து மனைவிகையிலளித்து, உடன் கொண்டு ஊரையடைந்தனன். வேதவல்லி மாதேவியை வளர்த்து வந்தனள்.

அம்மையார் ஐந்து வயதடைந்து "சிவபிரான் தன்னை மணஞ் செய்யும்படி தவஞ்செய்வேன்" எனத் தந்தைபாற்கூற, தக்கன் தன் மகளாகிய தாக்ஷாயணி சாற்றியதற்குச் சாலவுங்களித்து, அந்நகர்ப்புறத்தே ஓர் கன்னிமாடஞ் செய்வித்துச் சில கன்னியரோடும் அதில் விடுப்ப, பரை அரனை நோக்கிப் பன்னீராண்டடையு

மெல்லையுந் தவத்திருந்தனள். அவ்வாறிருக்கையில், சிவபெருமான் தக்கமாபுரியில், தாமாயணியின் தவச்செயல்காண விரும்பி, விருத்த வேதியராய் எழுந்தருள, எம்மன்னை யார் கண்டு, இவர் பெரியரென்றுட்கொண்டு, எதிர்சென்று பாதம் பணிந்து நிற்க, மாதேவர் "மாதே! உன்பாலொரு வேட்கையால் வந்தேம்; கொடுப்பதாகிற் கூறுதும்" என, அம்பிகை "அஃதிசையுமாகிற் றருதும்; அறைக" என, ஐயர் "உன்னை வதுவை செய்ய உள்ளங்கொண்டு வந்தோம்; இசைக" என, இறைவி 'இருகரங்களாலுஞ் செவித்தொளையைப் பொத்தி புராரியை மணக்கத் தவம்புரிவேனுக்கு இவ்வாறு புகன்றனை; போ! போ!" என்று அங்கிருந்து விலகிச் செல்ல, பரமர் அருகிருந்த பாங்கியரறியாது தமது நிஜவடிவைப் பார்ப்பதிக்குக் காட்ட, அம்மை அளவில்லா மகிழ்ச்சி கொண்டு ஐயனைப்புகழ, அதுகண்ட சேடியர் சிலர் "இவன் மாயன் வல்லோன்" என்று மனத்துட்கொண்டு விரைந்து சென்று தக்கனிடஞ் சொல்லினர். அவன் தனதறிவால் அரனென்றறிந்து அக்கன்னிமாட மடைந்து கடவுணாயகரது கழல்பணிந்து "தேவரீர் என்நகரிற் கெய்தவேண்டும்" என்று தாக்ஷாயணியுடன் சங்கரரைத் தனது தக்கமாபுரிக்குக் கொடுபோந்து, முதற்பெருங்கடவுளை ஓர் முழுமணித் தவிசிலிருத்தினன். வேதவல்லி தன்மகளைப் புல்லி, நன்னீராட்டி, பொன்னணிபூட்டி மலர்சூட்டி, எம்பிரானருகில் விட, இறைவியார். ஈசனிடத்திலிருந்தனர்.

சமஸ்ததேவர்களும் அது சமயத்தில் அங்கடைந்து நின்றனர். தக்கன் தாக்ஷாயணியின் திருக்கரத்தைச் சங்கரர் திருக்கையிலளித்து வேதவல்லி கையிற்றாங்கிய கரக நீரைப் புரோஷிக்க "எனதன்னையும், தவப்புதல்வியுமாகிய தாக்ஷாயணியைத் தேவரீருக்குக் கொடுத்தேன்" எனக் கூறினன். சிவபெருமான் சகலதேவருடன் உடனே மறைந்துவிட்டனர். தேவியார் மனம் வருந்திப் பண்டு போல், தவச்சாலையிலிருந்து பின்னொருபகலிற் பெருமான் காட்சி யளித்து இடபாரூடராய் அழைத்துக்கொண்டுபோக, வெள்ளிமலை யடைந்து விமலருடன் வீற்றிருந்தனர்.

சிவபிரான் திருமணஞ்செய்த தேவியாரை நீக்கி மறைந்ததற்காகவும், தன்னை மதியாமைக்காகவும், தக்கன் மிக்க கோபமுற்று அதுமுதல் சிவபிரானை மதியாம லிறுமாந்திருந்தனன். [இச்சரித்திரத்தின் மற்ற விஷயங்களை முன்சென்ற தக்ஷயஜ்ஞஹதமூர்த்தத்திற் கண்டுகொள்க.]

கௌரியாகிய உமாதேவியாருடன் லீலாமாத்திரையாகச் சிவபிரான் விளையாடிய மூர்த்தமே கௌரிலீலாசமந்விதமூர்த்த மெனப்படும்.

**கௌரிலீலாசமந்விதமூர்த்தயே நம:**

ஐம்பத்தாறாவது

# விஷாபஹரண மூர்த்தி.

பண்டொருபகலில் அமரருக்கும் அவுணருக்கும் நேரிட்ட போரில் இருதிறத்த வரிலும் பலர்மடிதலால் அவர்கள் கமலாசனத்திருந்து பலகோடியான்மாக்களையும் படைக்கும் பிரமதேவனைச்சத்தியலோகஞ்சென்று கண்டு "தலைவ! யாங்களிறவாது நெடுநாள் போர் புரியக் கருதினோமாதலின் பாற்கடலைக் கடைந்து அமுதளிக்க வேண்டும்" என வேண்ட, பதுமன்: "கமலை கேள்வன்பாற்கூறிக் கருதியது முடிப்பிப்பேன்" என்றுரைத்து, அவர்களுடன் க்ஷீராப்தியடைந்து சேஷசயனத்திற் சக்கனாதியர் பரவ யோகநித்திரை புரியுந் திருமாலை வணங்கி அவர்கள் விருப்பையறிவிக்க, விஷ்ணு மூர்த்தி யதற்கிணங்கி, "அவ்வாறேயாகுக" என்று, மந்தரமலையை மத்தாகநட்டுச் சந்திரனை அடைதூணாக்கி அட்டநாகங்களு ளொன் றாகிய வாசுகியென்னுமரவைத் தாம்பாகப்பூட்டி, தேவர் ஒருபுறமும் அசுரர் மறுபுறமும் ஈர்க்கும்படி கட்டளையிட்டு, தாம் கூர்ம வடிவேற்று மலையின் அடியையு முடியையு முதுகினாலுங் கைகளாலும் பற்றிநிற்க, தேவாசுரர்களை யெய்தக்காலம் பல கடைந்தமையால், கயிறாகிய வாசுகி வருத்தமாற்றாது உடல் பதைத்து நாத்துடிக்கத் தனது ஆயிரம் வாய்களாலும் விஷஞ்சிந்தியது.

அவ்விஷம் எங்கும் இருளெய்தும்படி யொல்லெனப் பரவ, தேவர் முதலாயி னார் பயந்தோடினர். அதுகண்ட விஷ்ணு அமரர்களைப் காப்பேனென்று ஆற்றல் கூறி, அவர்கள் மேற்செல்லும் ஆலத்தைத் தாமெதிர்சென் றடர்த்தனர். அவ்விஷம் அவர் திருமேனியைக் கருவிறஞ்செய்ய, அவரும் சிற்றற்கஞ்சி யோட்டெடுத்தனர். அப்பொழுது யாவரும் ஒருங்கு சென்று திருக்கைலாயகிரியை நண்ணி, திருநந்திதேவ ரநுஜ்ஞையால், திருச்சந்நிதானத்தினுட் சென்று கருணாநிதியாகிய கண்ணுதலைத் தரிசித்துக் கைகட்டி வாய்பொத்திநின்றனர். சிவபெருமான் திருமாலைநோக்கி "மாதவ! உருவம் வேறுபட்டுத் தேவர் குழுவுடன் வந்ததென் னை?" என்றறியார்போல் வினாவ, விஷ்ணு "பரமபதியே! தேவரீர் கட்டளையின்றிப் பாற்கடலைமதித்தமையின் அமுதுபெறாது விஷம்பெற்றோம்; அடியேங்களைக் காத்தருள்புரிய வேண்டும்" என்றிரந்து நிகழ்ந்தவையிசைப்ப, சிவபிரான் தமதிடப்பாக த்துள்ள பார்வதியை நோக்க, உமையம்மையார் “இவர்களைக் காக்கவேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

சர்வான்மாக்களின் இடுக்கண்களையுஞ் சம்பு சமீபத்திருந்த சுந்தரரைப்பார்த்து "சுந்தரா! அவ்வாலத்தைக்கொணர்க" என்றாஜ்ஞாபிக்க, அத்திருவாணையைச் சிரமேற்கொண்டு, அவ்வாறே அவர் தமதுள்ளங்கையிற்றாங்கிப் பெருமானிடந்தர, மகாதேவர் அதனை வாங்கித் திருக்கரத்தில் வைத்துக்கொண்டு "தேவர்களே! இதனை யுண்ணவா? விட்டுவிடவா?” என, தேவர்கள் தேவரீரது திருக்கரத்தில் வரவே இதனுருவம் சிறுத்தது; விட்டால் உலகை யழிக்கும். எவ்வெவற்றினும் முற்பாகந் தேவரீரதே யாதலின், விஷமாயிருப்பினும் இதனைத் தேவரீர்

கொண்டருளல் வேண்டும்" என்று பிரார்த்திக்க, சிவபெருமான் அவ்வாறே சம்மதித்துத் திருவமுது செய்கையில் அது கண்டத்தளவு செல்ல அதனை யாவருங் கண்டு, "எம்மை யுயிர்காத்ததற்குச் சான்றாக இவ்விஷத்தைக் கண்டத்திலேயே தரித்தருளல் வேண்டும்" என்று வேண்ட, எம் பெருமான் அவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி, அங்கேயே ஒரு நீலமணிபோன்று நிறுத்தி மணிகண்டர் நீலகண்டர் சீகண்டர் முதலிய திருநாமங்களைப் பெற்றனர். பிறகு பெருமானருள் பெற்றுக் கடல் கடைய அமுதமும் பலபொருளும் பிறந்தன. திருமால் மோகினி வடிவேற்று அசுரரை வஞ்சித்து அமரர்க் கமுதளித்து, அவரவரிருக்கைக்கேகவிடுத்தனர்.

திருப்பாற்கடலிற்றோன்றிய விஷத்தாற் சர்வான்மாக்களும் துன்புறா வகையாக, தேவமுநிவர் வேண்டுகோளுக்கிரங்கிப் பானஞ் செய்தமையால், சிவபிரான் விஷாபஹரணமூர்த்தியெனப் பெயரெய்தினர்.

**பாகவதம்.**

*யேஸமாம0த்ரியபகவாந் பவாநீம்விஶ்வபாவந:*
*தத்விஷம்கக்துமாரேபே ப்ரபாவஜ்ஞோந்வமோதத*
*தத:கரதலீக்ருத்ய வ்யாபிஹாலாஹலம்விஷம்*
*அபக்ஷயமஹாதேவ: க்ருபயாபூதபாவந:*
*நிஶம்யகர்மதச்சம்போர் தேவதேவஸ்யமீடுஷ:*
*ப்ரஜாதாக்ஷாயணீப்ரஹ்மா வைகுண்டஶ்சஶஶ0ஹிரே.* ||

**ப்ரஹ்மாண்ட புராணம்.**
**இரண்டாமத்தியாயம் - பிரமன் வாக்கியம்.**

*தஸ்யவிஷ்ணுரஹம்வாபி ஸர்வேவாஸுரபுங்கவா:*
*நஶக் நுவந்திவைஸோடும் வேகமந்யத்ரஸங்கராத்*
*விஷேணோத்திஷ்டமாநேந காலாநலஸமத்விஷா*
*நிர்தக்தோரக்தகௌராங்க: க்ருத:க்ருஷ்ணோஜநார்தந:!*

**வாமநபுராணம்.**

*த0த்ருஷ்ட்வாரக்தகௌராங்க0 க்ருத0க்ருஷ்ணம்ஜநார்தநம்*
*பீதாஸ்ஸர்வேவய0தேவா ஸ்த்வாமேவசரண0கதா:!*

**காஞ்சிப்புராணம்.**

*"அடுங்கால மிதுவென்ன விடமெழலு நனிவெருவி யயன் மாலேனோர், கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்ச் சரண்புகுதக் கொதித்து வாழ்நாள், பிடுங்காமலருள்புரிந்த பிரானன்றிப் பின்னையுமோர் பிரானுண் டென்ன, நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினு மென்னுள்ள நடுங்குமாதோ."*

**விஷாபஹரணமூர்த்தயே நம:**

ஐம்பத்தேழாவது

# கருடாந்திக மூர்த்தி.

திருமகள் விளங்கிய மருமமும், திசைமுகன் முதலா வகில முகிழ்த்த முண்டகமும் தண்டம் - சுதரிசனம் - சார்ங்கம் - கதை - சங்குடனைம்படை தாங்கியகரமும், தினகரரிருவர்சேர்ந்தொளி செயல்போற் றிருச்செவிக்குழையும், பன்னகப்பாயலும், பாற்கடற்றுயில்வும், அவுணரையழித்தலும் அமரரைப்புரத்தலும் அமைந்துலகளிக்கும் ஆதிநாரணன். முன்னொருபகலில் முக்கணரைத்தொழ எண்ணினனாகி, வண்ணநற் கருடவாகனமேறி வானெறி வழிக்கொடு கண்ணுதல் வீற்றிருக்கும் திருக்கைலையைச் சமீபித்து, தனது வாசஸ்தானமாகிய திருப்பாற் கடல்போல வெண்ணிறமுடையதும் பல புறங்களிலும் அருவியாறுக ளிறங்குவதும், சங்குகன்னன் - வாணன் - குண்டோதரன் முதலிய கணநாதர்கள் நாற்புறத்திலுங் காவல் செய்வதும், இடையறாது இமையவர் குழாங்கள் "ஹரஹர சங்கர ஜகதீஶ" எனப் பலவகையாகத் துதிசெய்யும் பேரிறைச்சலுடையதுமாகிய வெள்ளிமலையின் சிகரங்களைத்தரிசித்துக் கை கூப்பி மலைச்சாரலைச்சமீபித்துச் சிவத்தியானத்துடன் திருமலைமேலேறி, திருக்கோபுரவாயிலை யடைந்து, வாஹனமாகிய கருடன் பேரிலிருந்திறங். துவாரப்பிரதேசத்தில் வாகனத்தை நிறுத்தி வைத்து நந்தியெம் பெருமானது நளினபாதங்களை நமஸ்கரித்து, அவர் அநுஜ்ஞைபெற்றுத் தேவதேவ ரைத்தரிசிக்கத் திருச்சந்நிதானத்தி னுட்சென்று, காளகண்டமும், சூரிய சோமாக்கினி யாகிய திரிநேத்திரங்களும், மான் மழு வரதாபயமு முற்றுவிளங்குஞ் சதுர் புஜங்களும், கங்கையுங் கொன்றையுந் திங்களுமணிந்த செஞ்சடையும், பார்வதி தேவிபாகமுமாக ஸ்ரீசிவபெருமான் நவரத்தின கஜித மண்டபத்தில், இந்திராதி இமையவரும், நாரதாதிமுநிவரும் அட்டவசுக்களும், யக்ஷ கிந்நராதி பதினெண் கணங்களும் புடை சூழ்ந்துநிற்கவும், அரம்பை முதலிய தேவதாசிகள் நடிக்கவும், சர்வாடம் பரபூர்வமாய் எழுந்தருளியிருக்குந் திருக்கோலத்தைக்கண்களாரத்தரிசித்து வாயாரவாழ்த்தி ஆனந்தக்கடலி லமிழ்ந்திருந்தனர். இதுநிற்க:

விஷ்ணுமூர்த்தியின் வாகனமாயும், அவரால் வெளியேயிருக்க ஆஞ்ஞை பெற்றுள்ளதுமாகிய கருடன் சிறிதுநேரம்பார்த்து, திருமால் விரைவாகத் திரும்பி வராமையால், தானுந்திருச்சந்நிதானத்தினுட்செல்ல விரும்பி, உள்ளே போகையில், திருநந்திதேவர் வெகுண்டு "வைநதேய! உள்ளே புகாதுநிற்றி; மாதவன் வருமளவும் ஈண்டிருத்தி" என இசைத்தனர். அதுகேட்ட கருடன்கடுஞ்சினங் கொண்டு "என்னைத்தடுக்க நீ எவ்வளவினன்; நீயோ பிச்சையெடுப்பவன் வாகனம்; உன்னை விரைவி லுயிரொழிப்பேன்" எனவுரைத்து விடைத்தேவர் பிரளயகாலாக்கினி ருத்திரற்போற் பெருஞ் சினமுற்றுப் பேசுதெலொன்றுமிலராய் அக்கருடன்பேரில், தமது நிசுவாச உசுவாசங்களைச்செலுத்தினர். கருடன் அந்நிசுவாசத்தாற் ககனமார்க் கத்திற் கடுந்தூரம் போயும், உசுவாசத்தால் நந்திதேவரது நாசிகாபிலத்தையடைந்துங் கஷ்டப்பட்டுக்கொண்டு, ஊழிகாலத்துதித்த பிரசண்ட வாயுவேகத்திலலையுஞ் சிறுதுரும்புபோல்த்துன்புற்றுத் தனது வல்லமையால் உயிர்பிழைக்க உபாயமொன்று மில்லாமல் விஷ்ணுமூர்த்தியை "மாதவா! கேசவா! மதுசூதனா! அபயம், அபயம்,

எனது அஞ்ஞானத்தால் ஸ்ரீநந்திபகவானுக்குண்டாகிய கோபாவேச உசுவாச நிசுவாசங்களால் உயிரொழி யுந்ததியி லிருக்கின்றேன். அத்துன்பத்தையகற்றி அடியேனைக் காக்கவேண்டும்" என இறைச்சலிட்டு முறையிட, சிவதரிசனஞ் செய்துகொண்டிருந்த திருமால், அது முறையிடும் இறைச்சலைச் செவியேற்று, சிவபிரான் சமுகத்தில் திருவிண்ணப்பஞ்செய்தனர்.

சிவபெருமான், தமக்கு மனைவியும் சத்தியும் அம்பும் பரமபக் தருமாகவுள்ள விண்டு மனம் வருந்தி வாய்விண்டு விண்ணப்பித்தவற்றைத் திருச்செவிசாத்தி, "மாலே! மாலுறாமல் நமது கட்டளை யென்று நந்திபால் நவின்று கருடனை விடுத்தி" எனத் திருவாய் மலர்ந்தருளினர். உவணகேதனன் உள்ளங்களித்து ஓடோடி விடைத் தேவர்பால்வந்து விமலர்கட்டளையை விளம்பி, "ஐயனே! அதன் அறியாமையை மன்னித்து அருள்புரிய வேண்டும்" என்று பிரார்த்திக்க, நந்திகேஸ்வரர் "என் முன்னே இறைவரை இதழ்ந்து கூறிய இக்கருடனுயிரை இமைப்பொழுதில் மாய்ப்பேன்" எனச் சினத்துடன் செப்ப, நாரணன் நடுக்கெய்தி, மீண்டும் விடையூர்திபால் விண்ணப்பிக்க, சிவபிரான் நந்தியெம்பெருமானை விளித்துத் தமது கட்டளையாற் கருடனை விடுவித்து உயிர்காத்து மாயவனை மகிழ்வித்தனர்.

கருடன் கருவபங்கமுற்றுக் கமலைகேள்வனைச்சுமந்து பழையபடியே பதுமநாபனுடன் பாற்கடல்சேர்ந்தது. ஈண்டு நந்திதேவரால் துன்புற்ற கருடனுக்குச் சமீபத்தருள் செய்த காரணத்தால் கடவுளுக்குக் கருடாந்திகமூர்த்தியெனப் பெயரெய்தியது.

**ருத்ரகோடி ஸ்தலமாஹாத்ம்யம்.**

*உச்வாஸேநஹ்ருபுஸ்தூர்ணம் யோஜநாநா௦ஶத௦கத:*
*நிச்வாஸேநஸமாக்ருஷ்ய வ்ருஷநாஸாந்தரம்விஶத் இத்யாதி*
*ஏநாமுக்த்திம்ஹரேஸ்ருத்வா வ்ருஷோவசனமப்ரவீத்*
*அநேநாகாரிகோவிந்த ஶிவஶிந்தாமஹாத்தரா*
*ஹரிஷ்யேவைநதேயாஸூ நிதிவேகாத்வ்ருஷோப்ரவீத் இத்யாதி*
*ஶ்ருத்வைநாம்வ்ருஷபஸ்யோக்திம் மஹாவேகாத்ரியம்பக:*
*கருடம்முஞ்சமுஞ்சேதி வ்ருஷப௦ஶங்கரோப்ரவீத்*
*வ்ருஷோமுத்க்வாதகருட௦ வேகாதுக்தம்விபோ:புர:*
*தஸ்மாந்மஹிபவத்தோஷ: இதிசிந்தாஸமாகுல:*

**பதினோராந் திருமுறை.**

"*கார்மலிசிறகின் கருடனைக்காய்ந்தனை*
*அன்னவற்கிரங்கிப் பின்னருமருளினை.*"

**கருடாந்திகமூர்த்தயே நம:**

## ப்ரம்மசிரச்சேத மூர்த்தி.



ஐம்பத்தெட்டாவது

# ப்ரம்மசிரச்சேத மூர்த்தி.

முன்னொருநாளிற் பொன்மலையாகிய மேருகிரியின் மேலுள்ள ஒருசிகரத்திற் பிரமதேவனும் விஷ்ணுமூர்த்தியும் வீற்றிருக்கையில், கணக்கில்லாத தேவரும் முனிவரும் வந்து வணங்கிக் கைகுவித்து "திரிமூர்த்திகளில் முதன்மையுற்றோரும், ஆதிமத்தியாந்த மற்றவரும், சமஸ்த ஜீவான்மாக்களிடத்தும் அந்தரியாமியா யுள்ளவரும் யாவர்? நீங்களிருவருமாக இயம்புங்கள்" எனப் பிரார்த்திக்க, ஆதிதேவனருளாலன்றிப் போதலில்லாத மாயையின் பிணிப்புற்று வருந்தும் பசுக்களாகிய பிரம விஷ்ணுக்கள் இருவருங் கன்மவசத்தால் இறுமாப்புற்றனர். அப்பொழுது அயன் "அத்தகைய பிரமம் யான்" என, நாரணன் "நானேயுனைப் பெற்றேனாதலின் நான் தான் பிரமம்" என, ஒருவரோடொருவர் உரைத்து எண்ணில் காலம் இகல்மொழிபேசி எரிசித்தவிழித்துத் தருக்கஞ்செய்யக் கண்டதேவர் முநிவர் "நம்மாலிவர் இத்தகைய பகைமை கொள்வானேன்" என்று தத்தமிடஞ்சார்த்தனர்.

தேவர் முதலியோர் சென்ற பின்னும் இருவரும் மமதை மாறாதவராய் வழக்கிட்டுச் சண்டை செய்கையில் வேதமும் பிரணவமும் வெவ்வேறுருக்கொண்டு வந்து "பிரமவிஷ்ணுக்களே! வீண்வாதெற்றுக்கு சர்வபரிபூரணராகிய சிவபெருமானே பரம்" எனத் தனித்தனிசாற்றவுங் கேளாதவர்களாய் மீண்டுஞ் சண்டைசெய்கையில், ஆண்டவர் அவர்கள் வழக்கையொழிக்கச் சோதியுருவாய் நிற்க, இருவரும் ஏதோ சுடரென்றிருக்க, எம்பிரான் அதன் நடுவே உமாதேவியாருடன் திருக்கைலாயத்தில் வீற்றிருப்பதாக வடிவுகாட்ட, விண்டுகண்டு விடையூர்தியென் றுட்கொண்டு நில மிசைத்தாழ்ந்து துதித்து நின்றனன். மலரோன் மலமுதிர்ச்சியால் மதியாமல் நடுச்சிரத்தால் நக்கனை யிகழ்ந்து பேசினன். எல்லாவுலகங்களும் இமைப்பில் எரியுமேயென்றுகருதி, சிவபெருமான் சிறிதுஞ் சினங்கொண்டிலர். எண்கண்ணன் இறுமாப்பொழியவும் மற்றைய வானவர் மதர்ப்பு நீங்கவும் மகாதேவன் மனதிற் சிந்திக்க வைரவக்கடவுள் தோன்றினர். "சிறுவனாகிய பிரமன் சிரங்களைந்தில் நம்மையிகழ்ந்த நடுச்சிரத்தை நகநுதியாற்கொய்து கரத்திலேந்தி அவனுக்கு உயிர்ப்பிச்சையளித்து, தேவர் முநிவர் நகரங்கடோறுஞ்சென்று, உதிரப்பலியேற்று இரத்தப்போக்கா லிறந்தோரையெழுப்பி யாவரகந்தையையு மழித்து அண்டகடாகத்தின் மேலடைந்திரு" வென்று ஆஜ்ஞாபித்து பரமன் சோதியிற்கூடிப் பண்டுபோல் வீற்றிருந்தனர்.

மங்கைபாக னருள் பெற்ற வைரவக்கடவுள் வருதல் நோக்கிய மாதவன், வடுகதேவன் மலரடிவணங்கி வைகுந்தமடைந்தனன்; பிரமன் மரம்போல்நிற்க, வைரவர்சினந்து தமதுநகத்தினால் நாதன் கட்டளைப்படி அவனது நடுச்சிரங் கொய்தனர். உதிரவெள்ளம் உலகெலாம் பரத்தலின் உயிர்ப்புநீங்கி மலரோன் மாய்ந்தனன். மேருவைச்சுற்றிய சோரிநீரை நுதல்விழியானுலர்த்திப் பிரமனை யெழுப்ப, நித்திரை தெளிந்தோன் போல நிலத்தினின்றெழுந்து நின்மலராகிய வைரவரைவணங்கி "மலைவில்லிக்கு யான்செய்த அபராதம் வரையறைவில்லை,

என் பேதைமையைப் பொறுத்தி; பெருமானே!" என்று திருவடியில் வணங்கி "என் சிரசைத் தேவரீர் திருக்கரத்திலேயே வைத்திருக்க வேண்டுகிறேன்; தேவரீரால் அஞ்ஞானமொழியப்பெற்றேன்" என்று பிரார்த்தித்தனன். வைரவர் "இனி நான்முக னென்ன நானிலத்துறைதி" என விடுத்து, மேருமலையினின்றிறங்கித் திருவுள்ளக்குறிப்பின்படி சென்றனர். தலையிழந்த பிரமன் சதுர்முகத்தோடு சத்திய லோகஞ் சார்ந்தனன்.

தானே பிரமமெனத் தருக்குற்றபதுமனது ஐந்தாவது தலையை நக நுதியா லரிந்தமையின் சங்கரருக்குப் ப்ரஹ்மஶிரச்சேதமூர்த்தியென வோர்பெயர் வழங்குகின்றது.

**ப்ரஹ்மாண்ட புராணம்.**

*ஸஸர்ஜஸ்வாத்மந:கிஞ்சித் பைரவம்லோகதாஹகங்*
*ஸ்வயம்ஸாக்ஷாந்மஹாதேவ: க்ஷணாத்வைகாலபைரவ:*
*சகர்தகரஜாக்ரேண ப்ரஹ்மண: பஞ்சமம்ஶிர:*

**வாமநபுராணம்.**

*தச்ருத்வாக்ரோதயுக்தேந ஶங்கரேணமஹாத்மநா*
*நகாக்ரேணஶிரஶ்சிந்நம் ப்ராஹ்மம்பருஷவாதியத்*
*தச்சிந்நஂஶங்கரஸ்யைவ ஸவ்யேகரதலேபவத்*
*பதிதேநகதாசித்து தச்சங்கரகராச்சிர: || இத்யாதி*
*ஸக்ருத்வாஸுமஹத்புத்தம் ப்ரஹ்மண:காலபைரவ:*
*சகர்ததஸ்யவதநம் விரிஞ்சஸ்யாதபஞ்சமம்.*

**ப்ரஹ்மஶிரச்சேதமூர்த்தயே நம:**

ஐம்பத்தொன்பதாவது

# கூர்மஸம்ஹார மூர்த்தி.

பண்டொரு பதுமகற்பத்தில் திதிமைந்தரும் அதிதிமைந்தருமாகிய தேவரும் அசுரருந் தீராப்பகையாற் பலகாலஞ் சமர்புரிந்தனர். இருதிறத்தவரிலும் எண்ணில்லார் இறந்தனர்; அதனால் அவர்கள் ஒருங்குகூடி, க்ஷீராப்தி மதனஞ்செய்து அமுதுண்டு அதிகநாள் ஜீவித்து அரும்போர் ஆற்றவேண்டுமென்று, அகத்துட் கொண்டு, பதுமனுடன் கூறி அவனையு முடன்படுத்தி, அழைத்துக்கொண்டு அச்சுதன்பாற் சென்று அறைய, திருமால் "அவ்வாறேயாகுக" வென்று, மந்தர மலையை மத்தாகவும், சந்திரனை அடைதூணாகவும், வாசுகியைத் தாம்பாகவும் அமைத்து, இருதிறத்தவரையும் இருபுடைநின்று மாறிமாறி யீர்க்கச்செய்ய, மந்தரமலைசாய்ந்தது. அதுகண்ட ஐம்படைக்கிழ்வன் பெரிய யாமைவடிவுகொண்டு பாற்கடலிற்பாய்ந்து, தன்மேற்புறத்தையிலக்க யோசனையிடமாக்கிவீழ்ந்த வெற்பையெழுப்பி முதுகின் மேற்றாங்கி நின்றனன். அந்தரரும் அசுரருங்கடைய அவ்வசலம் மீண்டுஞ்சாய்ந்தது. அதுகண்ட கமடவுருக்கொண்ட கமலநாபனுக்குக் கரங்களாயிரந்தோன்றின. பல கரங்கள் ஓங்கலின் உச்சியைப்பற்றி யூன்றின. பலகரங்கள் பர்வதத்தைப் பக்கத்திற்சாயாமற் பத்திரமாய்ப்பற்றிநின்றன. சிலகரங்கள் தேவாசுரர் கடல்கடைந்து களையுறாமல் அவர்கட் குதவியாய் நின்றன. அமரர் - அசுரர் - அச்சுதன் முதலானார் யாவரும் ஒருங்குகூடிக் கடைந்தமையால் அம்மந்தரம் அதிவேகமாகச்சுழன்று பாற்கடலைக்கலக்கிப் பல சிறுதிவலைகளைத் தேவருலகமட்டுமெறிந்தது.

இவ்வாறு பாற்கடல்கடையப் புக்கோர் பரமசிவன்பால் விண்ணப்பித்து அவர் கட்டளை பெறாமற் செய்த அபசாரத்தால், தாம்பாகிய வாசுகி வருத்தந்தாங்காமற் றன்வாய்வழி நஞ்சுகக்கியது. வானவருந் தானவரும்வெருவி வாயுவேகமாகவோடத் தலைப்பட்டனர். திருமால் அதுகண்டு, "தேவாசுரர்களே! சிறிது மஞ்சன்மின்" என்று அதனை த்தடுக்க முயன்றும், விடவேகத்தால் உடல் கருகித் தானுநிற்றற்கஞ்சித் தேவர்களை நோக்கி,-

> "*என்னை யொப்பவ ராயிர கோடிய ரெனினு*
> *முன்ன ருங்கொடு விடத்தினை யெதிர்ப்பவ ருளரோ*
> *பின்னல் வேணியன் றிருவருளுளவெனிற் பிழைப்பே*
> *மன்னதில்லையே லெங்ஙனம் பிழைத்துமென் றறைந்தான்.*"

என்றபடியே "என்போன்றோர் ஆயிரகோடி பேரெனினும் நினைத்தற்குமரிய இவ்விஷத்தின் சேர்திற்பாருளரோ? சடைமுடிதரித்த சங்கரரது திருவருளிருந் தாற் பிழைப்போம்; அஃதில்லையாயிற் பிழைத்தலருமை" என்று கூறினர். அதனால் அமரர் - அசுரர் - அயிராணிகேள்வன் - அம்புயனாதியோர் அஞ்சி அச்சுதனுடன் வெள்ளிமலையை விநாடியிலடைந்து விடைத்தேவர்பால் விடைகொண்டு விமலர் சந்நிதிசேர்த்து "அரஹர சங்கர! அபயம்! அபயம்!! என்ற லறியழுதனர். உமாபதி

யொன்று முணரார்போன்று "உம்பர்காள்! நுங்களுக்குற்ற துன்பம் யாது" என வினாவ, இமையவர் யாவையும் விண்ணப்பித்தனர். இறைவர் இமயவல்லியைக் கடைக்கணித்தனர். ஈஸ்வரியார் "ஈசனே! எவ்வாற்றானும் இவர்களைக்காக்க வேண்டும்" என்றிசைப்ப, முன்னோன் தம்முன் நின்ற சுந்தரரால் அவ்விடத்தை வருவித்து உள்ளங்கையிலேற்றுட்கொண்டு, உம்பர் ஓர்காலத்தும் அகந்தையடை யாமல், தமது திருக்கண்டத்திலேயே அவர்கள் விருப்பின்படி அவ்விஷத்தை யமர்த்தினர்.

நீலகண்டரென இக்காரணத்தா லியம்புந் திருநாமமேற்ற நின்மலர் "உம்பர்காள்! உங்கள் உள்ளக் கருத்தின்படி பாற்கடலையினி மதித்து அமுதுண்பீராக" என விடையளித்துவிடுத்தனர். திருமால் பிரமன் இந்திரன் வானவர் தானவர் முதலானோர் பெருங்களிப்புடன் ஆரவாரித்து ராப்தியையடைந்து, விண்டு கமட வுருக்கொண்டு மந்தரத்தைப் பண்டுபோற்சுமக்க, தேவரும் அசுரரும் அதைச் சுழற்றும்படி வடந்திருப்பினர். வடந்திருப்பினர். முதலில் மூதேவி தோன்றினள்; அவளை வருணனுக்களித்தனர். தண்டு கமண்டலத்துடன் தந்வந்த்ரியென்னுந் தேவமருத்துவன் தோன்றினன்; உலக முழுவதுக்கும் மருத்துவனாகவிடுத்தனர். அறுபது கோடி அரம்பா ஸ்திரீகள் பிறந்தனர்; அவர்களை இந்திரலோகத்திற் கேகவிடுத்தனர். சுரைதோன்றியது; அதனை வானவருண்டனர்; தானவர் நீத்தனர்; அதனால் அவர்கள் சுரரென்றும் அசுரரென்றும் பெயரெய்தினர். உச்சைச்சிரவம் என்னும் புரவியுதித்தது; புரவியைப் புரந்தரனுக்களித்தனர். கவுத்துவமணி பிறந்தது; அதனைக் கமலநாபன் மார்பிலணிந்தனன். பஞ்ச தருக்கள் - காமதேனு - சிந்தாமணி இவை பிறந்தன; இவற்றை இந்திரனுக்கீந்தனர். சந்திரன் ஜனித்தான்; அவனை ஒளிசெய்யும்படி ஆகாயத்திலனுப்பினர். தாக்கணங்கு தோன்றினள்; தாமோதரன் தனது தாரமாகக்கொண்டனன். இவையாவுந்தோன்றிய பின்னர் அமிர்தம்பிறந்தது.

அமரரும் அசுரரும் அமிர்தத்தைத் தமக்குத் தமக்கென்று ஒருவரோடொருவர் சமர்புரிந்து இருதிறத்தவரிலும் எண்ணில்லாதவர் இறத்தல்கண்ட மாயோன் ஓர் மாயையால் மோகினி வடிவேற்று அசரரைவஞ்சித்து அமரருக்கு அமிர்தத்தைப் பகிர்ந்தளித்தனன். அவ்வானவத் தொகுதியில் மாறிய வடிவுடன் அமுதேற்றருந்திய தான வரிருவர், சூர்யசந்திரரால் விஷ்ணுவுக்கு வெளியிடப்பட்டனர். அச்சுதன் அக்கணமே அளவில்லா வெகுளி கொண்டு தன்கைச்சட்டுவத்தா லவர்கள் சிரத்தை யறுத்தெரிந்தனன். அவர்கள் அமுதுண்ட விசேடத்தாலிறவாமல், சிவார்ச்சனை செய்து இராகு கேதுவென்னுங் கிரகங்களாய்த் தம்மை வெளியிட்ட செங்கதிர் வெண்கதிர்களைத் தீராத்துயர் செய்து வருகின்றனர். இவையேகிரஹண்காலமாம். சுரர் அமுதருந்தித் தீர்க்காயுவெய்தி அசுரரை ஹதஞ் செய்து பொன்னுலகு சேர்ந்து வாழ்ந்திருந்தனர். இது நிற்க!

மந்தரமலையாகிய மத்தினைத் தாங்கிநின்ற மாயவன் அவதாரமாகிய யாமைகடலேழையும் ஒன்றுகூட்டி, அதன் வெள்ளம் அவனியை யழிக்கும்படி கலக்கி, சிந்துவைச் சேறுபடுத்தி, இலக்கயோசனை மேன்முதுகும், கால்களினள வைக் கணக்கிட்டறிய ஏலாதவையுமா யியைந்ததாதலின், திமிங்கலமுதலிய ஜலப்பிராணிகளை யெல்லாம் புசித்தும் பசி தணியாமல், ஜலத்தையுங்குடித்துத்

தரை தெரியும்படி சேற்றையு நக்கியது. அதனாற் கலக்கி வெளிப்படுத்தப்பட்ட கடல் நீர் யுகாந்தவெள்ளம்போல எங்கும்பரவியது. தாமோதரனாகிய யாமை தனக்குக் கிடைத்த பலபொருளையுந் தின்னத் தலைப்பட்டது. இதனையறிந்த சூரியசந்திரர் கடலிற்றோன்றிச் செல்லுவதஞ்சினர். உலகமெங்கும் இருட்பிழம்பாயது. மகபதியும் மலரோனும் வையமழியுமென்று மனங்கலங்கி ஸ்ரீகைலாயமலையை யடைந்து திருநந்திதேவ ரநுஜ்ஞையால் மஹாசந்நிதானத்தினுட் சேர்ந்து சிவபெருமானைச் சேவித்துத் துதித்து நின்று "எம்பெருமானே! எளியேங்கட்கு இடுக்கணெய்தினால், அதனையகற்றி அருள் செய்வோர் யாவர்? அடைக்கலம்! அடைக்கலம்!! அச்சுதன் யாமைவடிவுகொண்டு ஆர்கலியிலிருந்து அவன் புரியும் அல்லல் அறைதற் பாலதோ? அறியார் போன்றிருப்பது தேவரீரது திருவருளுக் கழகாகுமோ? விரைவில் அதனை விலக்கி எங்களைக் காக்க வேண்டும்" என்று குறைகூறி யாசித்தனர்.

சிவபெருமான் தேவமாநுடர்கட்குத் திருவருள் செய்யத் திருவுள்ளங்கொண்டு, "அமரமே! அஞ்சன்மின்" என்று உடன்வரக் கொண்டு உத்தியையடைந்து தமது திருக்கரத்திருந்த சூலப்படையால் அக்கூர்மத்தின் உடலைச் செகுத்து, அதன திறைச்சியைக் குடைந்தெறிந்தனர். பார்த்துக்கொண்டிருந்த பண்ணவர் களிகூர்ந்து ஆர்த்து "கருணாநிதியே! கமலைகேள்வன் மீண்டுங் கர்வமடையாமல் அவ்வோட்டினைத் தேவரீர் திருமேனியிலுள்ள திருவாபரணங்களோடு ஒன்றாக அணிந்து கொள்ள வேண்டும்" என்று வேண்ட, அடியா ரவாவிய அடைவே அருள்புரியும் அண்ணலார் அக்கூர்மத்தின் முதுகோட்டையுந் தமது திருமார்பிலுள்ள பிரமவிஷ்ணுக்களின் சிரோமாலைக்கு நடுநாயகமாக வணிந்து அமரர்கட்கு விடையளித்தனுப்பி, விடையூர்ந்து வெள்ளிமலைசேர்ந்து வீற்றிருந்தனர்.

கூர்மவடிவேற்ற விஷ்ணுமூர்த்தி அதனாற் பண்டைய வுணர் வெய்தி, பரமபதியைத் துதித்துச் சிவலிங்கார்ச்சனை புரிந்து, தேவர்முதிவர் கேட்கும்படி கூர்மபுராணம் ஓதித் தமது நிஜவடிவுடன் வைகுந்தமுற்றுச் சிவத்தியானஞ்செய்து வாழ்ந்திருந்தனர்.

பிருகு முநிவர் சாபப்படி பின்னைகேள்வனுக்குற்ற கூர்மாவதாரத்தில், அக்கூர்மத்தின் கொடுமையை யொழிக்கக்கொன் றெறிந்தமையால், கொன்றை வேணியைக் கூர்மாரியெனக் கூறவேண்டுவதாயிற்று.

**காளிகாகண்டம்.**

*தத:ப்ராண்யுபகாராய. கூர்மಂஸம்ஹ்ருக்யகர்விதம்*
*ததங்கம்பூஷணத்வேந தாராயமாஸஶங்கர:* ||

**ஸ்காந்தபுராணம்.**
**வீரபத்ரவாக்யம்.**

*அத்யாபிதவபஶ்யத்வம் கபாலங்கூர்மரூபிண:*
*ஹரஹாரலதாமத்யே முக்தகஸ்மர்ந்தபுத்யஸே* ||

**கந்தபுராணச்சுருக்கம்.**

"*மாலவன்கமடத்துருக்கொடு மந்தரத்தைவெரிந்தனிற்*
*சாலவன்றுபரித்தனன்கட றந்ததங்கமுதந்தனை*
*நீலமாயனகந்தைகொண்டு நிறைந்தவேலையுழக்கவே*
*யாலமுண்டவன்வந்துபற்றி யவன்றன்வன்மையழித்தனன்*"

**காஞ்சிப்புராணம்.**

"*மகரந்திளைக்குங்கடலேழு மலங்கக்கலக்கும்பசுந்துளவ*
*முகைவிண்டலர்தாராமையினைப் பற்றித்தகர்த்தமுதுகோடு*
*நகுவெண்டலைமாலிகையணிக்கு நடுநாயகமாக்கோத்தணிந்து*
*புகரின்றுயர்ந்தோர்தொழப் பொலிந்தபுத்தேள்செல்வத்திருவுருவம்.*"

**கூர்மஸம்ஹாரமூர்த்தயே நம:**

## மச்சஸம்ஹார மூர்த்தி.



அறுபதாவது,

# மச்சஸம்ஹார மூர்த்தி.

சிவாக்கினையால் அரக்கர்குலத்திலே சோமுகாசுர னென்னும் நாமமுற்ற தீயோன் ஒருவன் ஜனித்து எம்பிரானை நோக்கி யியற்றற்கரிய தவஞ்செய்து, பல வரங்களைப்பெற்றுப் பராக்கிரமசாலியாய்த் தன்னையெதிர்ப்போர் தரணியிலிலாது தருக்கெய்தி, தோள்களின் தினவு தீரும்படி மேருமலையையெடுத்துப் பந்துபோல் விளையாடினான். இயமனுங் கண்டஞ்சத்தக்க காலகாலன்போலவிருக்குஞ் சேரமுகன், தன்னொடு போர்ச்செய்யவல்ல சதுரர் சுவர்க்க மத்தியபாதலமென்னுந் த்ரிலோகத்திலு மொருவருமில்லாமையால், ஒருநாள் தானே சத்தியலோகமுற்றுப் பிரமதேவனுக்குமுன் தோன்றினன்.

அப்போது சதுமுகன் சோமுகனைக்கண்டு பயந்துநிற்க, இராக்கதன் இவன் வலி இவ்வளவுதானோவென்று கருதி யிகழ்ந்து, மலரவன் வசத்திலிருந்த மறைகள் நான்கையுங் கையாற்பறித்துக் கடவிற்பாய்ந்து களித்துலாவினான். அயனோ தனது ஆக்கற்றொழிலுக்காதரவாகிய ஆரணங்கணான்கும் அசுரன் கையிலகப்பட்டமையா லஞ்சிச் செய்வதொன்றுந் தெரியாமல், திருமகள் கொழுநன்பாற்சென்று "பிதாவே! என்வசத் திருந்த எழுதாக்கிளவியைச் சோமுகன் கொண்டுபோயினன்" எனக்கூற, நெடுமால் உடனே கோபாக்கிரசித்தராய்ப் பிருகுமுநிவர் சாபப்படி மீனவடிவேற்றனர். எண்ணில்லாதயோசனை நிகளமுள்ள பெரிய மச்சவடிவேற்ற மாயோன், கடலிற் பாய்ந்து அது சேறுபடும்படி சோமுகனைத்தேடி வாலாலடிப்பதால் நீர்த்துளி ஆகாயத்திற்படவும், அண்டச்சுவரில் மீனங்கள் மோதவும் விசிறி, திமிங்கலமுதலிய பெருமீன்களை அங்காந்த வாயினாலுட்கொண்டு, வேதத்தைக் கவர்ந்தொளித்த வெய்யோனாகிய சோமுகனைக்கண்டு பின்சென்று துன்புறுத்தி, அவனது சோரியாகிய மாரியை வாயாரவுட்கொண்டு அவனைச் சங்கரித்து அவன் வசத்திருந்த அருமறை நான்கையுங் கைக்கொண்டு திரும்புகையிற் கமலயோனி கண்டு மாலோன் மலரடிபணிந்து அச்சத்துடன் கையேந்த, நாரணன் ஆபரணங்களை யம்புயன் வசமளித்தனன். அதுபெற்ற அயன் அகங்களி கொண்டு தனது சத்தியலோ கஞ்சார்ந்தனன். அசுரன் மெய்யிலிருந்தொழுகும் உதிரப்பெருக்கு உவரியைச் செந்நிறமாக்கியது.

அப்பொழுது மந்தரம் போலக் கடலைக்கலக்கிய மச்சங் கரைகளையிடித்துக் கிழக்கு - மேற்கு - தெற்கு - வடக்கு ஆகிய நாற்றிசைகளொன்றில் தலையும் பிறிதொன்றில் வாலுமாக நின்று முதுகுநீரிலமிழாத பேருருக்கொண்டு மகரமுதலிய மச்சங்களைப் புசித்து மரக்கலங்களையுடைத்து எல்லாவற்றையுமழிக்குந் ததியிலிருப்பது தெரிந்து, தேவர்கள் புகலிடந்தேடித் திருக்கைலாயகிரியை யடைந்து அறவடிவாகிய திருநந்திதேவரைப்பணிந்து விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட் சென்று ஸ்ரீபரமபதியைத் தரிசித்து "எம் பெருமானே! மாயோன் மச்சவடிவாய் எழுகடலையுமொன்று கூட்டி அதிலுள்ளவைகளைப் புசித்தலின் மாந்தர் வருந்துகின்றனர். இனி யாவரிடம் வருவனோதெரியேம். அண்டகடாகமுற்று

மதிர்கின்றது; ஆதலின் அம்மாயா மச்சத்தி னிறு மாப்பை மாய்க்க வேண்டும்" என விண்ணப்பித்து வணங்கிநிற்க, சிவபெருமான் "அவ்வாறேயாகுக. அமரர்களே! அஞ்சற்க" என்றபயமளித்து, வலைஞர் வடிவேற்று வாரிதியையடைந்து, அம்மச்சத்திற்கேற்ற பேருரு வாய்த்து, எழுகடலையும் மறைக்கத்தக்க வலையை வீச மீனம் அதனுளகப்பட, சங்கரர் அதன்விழியைப் பறித்தனர். அப்பொழுது தேவர் இருடியர் முதலானார் இறைவனே! இத்திருமால் இன்னுமொருகரம் இத்தகைய விறுமாப் பெய்தாவண்ணம் அவ்விழியையுந் தேவரீர் திருமேனியிலணிய வேண்டுகிறோம்" எனப் பிரார்த்திக்க, அன்பர் எண்ணியவாறே அருள்புரியும் அமலர் அதனைக் கைவிரல் மோதிரத்தி லமைத்தணிந்து வெள்ளிமலை சேர்ந்து வீற்றிருந்த னர். கண்ணிழந்த ஈனமாகிய மீனவடிவுற்ற விஷ்ணு பண்டைய வுணர்ச்சியால் அவ்வடிவையொழித்துச் சிவார்ச்சனை புரிந்து மச்சபுராணமோதி வைகுந்தமுற்றனர்.

சிவபெருமான் மச்ச சங்காரஞ்செய்கையிற் கொக்குருவேற்றுச்சென்றதாய் அதர்வண வேதம் கோஷிக்கின்றது.

மாயனாகிய மச்சத்தின் மமதையை மாய்த்து, அதனைச் சங்கரித்தமையால், ஐயனுக்கு மச்சாரியென்றோர் திருநாமம் அறைத்லாயிற்று.

**அதர்வண வேதம்.**

*த்ரியம்பகோபகோநாமருத்ர: நாராயணமிரச்ச0சுநாசகர்த -*

**உபதேசகாண்டம்.**

*"எடுத்து வீசிய வலைகட லேழையு நிரப்பிப்
படுத்தி ழுத்தலும் வலையகப் பட்டது பாரா
நடுக்க டற்புகுந் திருவிழி பறித்தன னடந்தான்
கடுத்த வெஞ்செருக் கழிந்தது மீனமாக் கடவுள்"*

**காஞ்சிப்புராணம்.**

*"வானம்பழித்தவலைமாக்கள் வடிவுதாங்கிவலம்புரிக்கை
மீனம்படுத்துவிழிசூன்று விரன்மோதிரத்தினெவ்வுயிர்க்கு
ஞானம்பயப்பக்குருவிந்த நலங்கேழ்மணிபோற்பதித்தணிந்த
கானம்படித்துச்சுரும்புளருங் கடுக்கைத்தொடையோன்றிருவுருவம்."*

**மச்சஸம்ஹாரமூர்த்தயே நம:**

## வாரஹஸம்ஹார மூர்த்தி.



### அறுபத்தொன்றாவது

# வராஹஸம்ஹார மூர்த்தி.

தாமரைமலரில் வீற்றிருக்குஞ் சதுமுகப் பிரமதேவனை நோக்கித் தவஞ் செய்து பலவரம்பெற்ற * இரணியாக்கன் பரந்தவுலகத்தைப்பாய்போற்சுருட்டிச் சமுத்திரத்தில் வீழ்ந்து மறைந்தனன். தேவர்கள் அப்பொழுது நடுக்கமெய்தி நாரணனையடைந்து நடந்ததுகூறி "அடியேங்கட்கு அடைக்கலம் வேறில்லை" என்று வேண்டினர். திருமால் அமரர்களே! "அவ்வசுரனைத் தொலைத்து அவனியை யளிப்பேன்" என்று கருடவாகனமேறிச் செல்லுகையில் இந்திரன் பிரமன் இருடியர் முதலானார் பணிந்தனர். மாயோன் வையகத்தைக்கொணர் வராகவடிவாயினன். அவ்வராகமோ நீலவெற்பினும் இரட்டிப்புயர்ந்ததும், கால்கள் நடுவே ஆயிரங்காத தூரமுள்ளதும், வால் அசையுந்தோறும் திக்குகளிற்படுவதும் சுவாசத்தால் அண்டத்தைக்குலுக்குவதும், உராய்ஞ்சால் அண்டச்சுவரையசைப்பதும், வடவாமுகாக்கினிபோற் பார்வையுடையதும், மூக்கினாற்றோண்டப் பாதலமுட்டு வதுமாயுள்ளது. பன்றியாகிய திருமால் கடலேழையுங்கலக்கிச் சேறுபடுத்திப் பின்னர்ப் புழுதியாக்கி இரணியாக்கனைக்கண்டு, கொம்பினாலே யவனைக் கிழித்துக்கொன்று சுருண்டிருக்கும் பூமியைக் கொம்பின் நுனியாற்றாங்கி யெடுத்து வந்து ஆயிரம் முடிகளையுடைய ஆதிசேடனது உச்சியில் விரித்தனர்.

---

[* இரணியாக்கன் - பொன்னிறமான கண்களையுடையவன்,
இரணியம் -பொன். அக்கன் - கண்களையுடையவன்.]

---

அவ்வாறு செய்த வராகம் தனது வெற்றியால் மமதையுற்று, அஷ்டகுலபர்வதங்களையு மிடித்துத்தள்ளியும், பலவுயிர்களை வாயிற் பெய்து குதட்டியும், சப்தமேகங்களும் நாகலோகமும் அஷ்டகஜங்களும் அச்சமெய்தி நடுங்கும்படி ஆர்ப்பரித்துக்கர்ச்சித்தும், காசினியைத்தாங்குங் காசிபர்பெற்ற எவ நாகங்களும் உச்சி நடுங்கும்படி தரையைமோந்தும், பூமியைக்குத்தித் தோண்டியும், கட்கடையில் ஊழித்தீயைச் சிந்தியும் உலாவியது. இக்கோலமாகிய கோலத்தைக் கண்டஞ்சிய இமையவர் கண் கூச்சம் மனக்கலக்கமுமுற்று, இத்தகைய இடுக்கண் விலகும்படி வெள்ளிமலையையடைந்து, முதற் பெருங்காவலாகிய நந்தியெம் பெருமான் கட்டளை பெற்றுத் திருச்சந்நிதியுட்சென்று கருணாநிதியைக் கண்டு தரிசித்துச் சாஷ்டாங்கமாகப்பணிந்து கைகட்டி வாய்பொத்தியின்று 'மகாதேவா! மாயவன் வராக வடிவேற்று வையக முழுவதும் வருத்துகின்றனன். இமைப் பொழுது கழியின் இமையவருலகுமழியும். இரணியாக்ஷனைச் சங்கரிக்கும்படி திருமாலைத்துதித்தது இத்தீமையை விளைத்தது. யாங்கள் துன்புற்றால், தேவரீரை யன்றி யதனைத் தீர்ப்போர் யாவர்?" எனப் பலவாறு துதித்துப் பணிந்து நின்றனர். விடையூர்தி அத்தேவமுநிவர் வேண்டுகோளுக்கிரங்கி, அவர்கட்கருள் செய்யத் திருவுள்ளஞ்செய்து ஓர் வேடுவவுருவேற்று வராகத்தை யடைந்து தமது திருக்கரத்திருந்த முத்தலைவேலால், நெற்றியிற் குத்தி நிலத்திலமுத்தி, ஒரு கொம்பைப்பறித்தனர்.

அக்காலத்தில் அகந்தைகழிந்த வராகம் ஐயனைத்துதித்தலால் அருள்கூர்ந்து மற்றொருகொம்பையும் பறிக்காமல் மன்னித்து விடுங்க, தேவர்கள் "எம்பெருமானே! இன்னுமொருதரம் இதனைப் போல மாயோன் மாலோனாய் மமதையுறாமல் இதன் கொம்பையும் தேவரீர் திருமேனியிலணிந்து கொள்ளல் வேண்டும்" என, சிவ பெருமான் அவ்வாறே அவர்கள் விருப்பின்படி அதனைத் திருமேனி யிற்றரித்துத் திருக்கைலாயமலைக்கு எழுந்தருளினர். தனக்குப் பிருகு முநிவரிட்ட சாபப்படி பன்றியாகிய திருமால் சிவபிரானைத் துதித்துப்பணிந்து தேவரும் முன்வருங் கேட்கும்படி வராகபுராணங்கூறித் தனது வைகுந்தபதவியடைந்து வாழ்ந்தனர்.

திருமாலாகிய வராகம் இறுமாப்புற்று உலகிற்றுன்புறுத்துகையில், தேவர் வேண்டுகோளுக்கிரங்கி அதன் அகந்தையை யழித்தமையால் மகாதேவருக்கு வராஹாரியென்பதோர் திருநாமம் வழங்குகின்றது.

**காளிகாகண்டம்.**

.

*"உத்பாட்யதம்ஷ்ட்ராம்தஸ்யைகாம் ஹரஸ்யோரஸிபூஷணம்*
*ஏசஶ்ரு கவராஹோபூத் ததாப்ரப்ருதிமாதவ: ।*

**லிங்க புராணம்.**

*த்ருஷ்ட்வாஜக்ராஹதம்ஷ்ட்ராந்தாம் விஷ்ணோஶ்சைவமஹாத்மந:*
*பபாரசமஹாதேவ: கூர்மம்ப்ராந்தேபிகோரஸி*
*புத்ரபௌத்ராவ்ருத:ஸர்வோ வராஹஸ்சாபதத்புவி*
*அத்யாபிஸூகராக்யாதம் தீர்த்த₀கங்காதமேஸ்திதம்*
*ஸ்கந்தஶக்த்யாஹதோயத்ர வராஹாக்யோம்ருதோஹரி: ।*

**ஷை வீரபத்ரவசநம்.**

*விஸ்ம்ருதம்தத்ததா₀ஶேந தம்ஷ்ட்ரோத்பாடேநபீடித:*
*வராஹவிக்ரஹஸ்தேத்ய ஸாக்ரோஶஸ்தேநஹேதுநா*

**கந்தபுராணம்.**

*"கண்டுகண்ணுதலவன்மருப்பொன்றினைக்கரத்தாற்*
*கொண்டுவல்லையிற்பறித்தலுமுணர்வுமுன்குறுக*
*விண்டுமற்றதும்பறிப்பனிங்கிவனெனவெருவிப்*
*பண்டுபோலநின்றேத்தலும்போயினன்பரமன்.*

*அன்றுகொண்டதோர்மருப்பினைச்சின்னமாவணிந்தா*
*னின்றுமங்கவன்மார்பிடைப்பிறையெனவிலங்கு*
*மொன்றுமற்றிதுகேட்டனைநின்றதுமுரைப்பா*
*நன்றுதேர்ந்துணர்மறைகளுமித்திறநவிலும்."*

**காஞ்சிப்புராணம்.**

"*சுழிக்கும்புனலேழ்கடல்சுவற்றிமலைகளேழுந்துகள்படத்தீ*
*விழிக்குங்கடவுட்பன்றியினைவிறல்வேடுருக்கொண்டெழுந்தருளி*
*யழித்தங்கொருவெண்கோடுபறித்தணிந்துமற்றையிடக்கோடு*
*பழிச்சுந்துதிகேட்டுளமிரங்கிவிடுத்தபகவன்றிருவுருவம்.*"

**வராஹஸம்ஹாரமூர்த்தயே நம:**

---

அறுபத்திரண்டாவது

# ப்ரார்தநா மூர்த்தி.

முன்னொருகாலத்தில், தவமே முத்திபயக்கத்தக்கதென்றிறுமாந்திருந்த தாருவநமுநிவர் தவத்தையும், அவர் பன்னியர் கற்பையுமழிக்க, சிவபெருமான் பிக்ஷாடகமூர்த்தியாய், திருமால் மோகினி வடிவேற்று உடன் வரக்கொண்டு தாருவுனத்தைச் சார்ந்து மோகினியால் முநிவர் தவத்தையொழித்து, தாமே அவ்விருஷிமாதர் கற்பையகற்றினர். அதனால் வெகுளிமீக்கொண்ட அந்தணர் அபிசார ஹோமமொன்றியற்றி அதிற்றோன்றிய பலபொருள்களையும்பரமன் மேற்பிரயோகிக்க, இறைவர் அவற்றை உடை - படை - அணி முதலியனவாகக் கொண்டனர். அவர்கள் யாகாக்கினியிற்றோன்றிய முயலகனைச்செலுத்த, முன்னோன், அம்முயலகன் முதுகில் ஓர் திருவடியையூன்றி ஓர் நடனஞ்செய்து முநிவர்கட்கு ஞானமளித்துத் திருமாலுடன் திருக்கைலைசேர்ந்தனர். [இச்சரிதங்களை முறையே பிக்ஷாடநமூர்த்தம் - சார்த்தூலஹதமூர்த்தங்களிற் கண்டுகொள்க.]

இதனையறிந்த எமதன்னையாகிய கௌரியம்மையார் தாம் சத்தியாயிருக் கையில் இறைவர்மாலாகிய மோகினியை உடன் கொண்டு சென்றதும், தாம் உடனில்லாத சமயத்தில் தாருவனத்தில் திருநடனஞ் செய்ததுமாகிய காரணங்க ளால், ஓர் லீலாமாத்திரையாய் ஊடல் கொண்டனர்.

அதுகண்ட அருள்வள்ளல் "ஏகைவஶக்தி: பரமேஶ்வரஸ்யப் ரயோஜ நார்தாய சதுர்விதாபூத் - போகேபவாநி புருஷேஷுவிஷ்ணு:க்ரோதேசகாளீ ஸமரேசதுர்கா"- என்றபடியே. "உமையே! எமது ஒரு ஶக்தியே மாயாகாரிய சம்பந்தத்தால் நான்கு வகை யுற்று விளங்கும். அதுவே நீயும் - திருமாலும் - காளியும் - துர்க்கையு மென்றறிவை. அதாவது:- மனைவியாகையில் நீயும், ஆணுருவாகையில் விண்டுவும், குரோதமுற்றபொழுது காளியும், யுத்தமுனையில் துர்க்கையுமாக விளங்குவீராதலின், திருமாலும் நீயும் வேறன்று. இதற்காக வெகுளி வேண்டுவதில் லை" என்று தாமும் லீலா மாத்திரையாய்ப் பிரார்த்தித்தனர்.

தேவியார் சினந்தணிந்து "தேவநாயகா! எளியேன் அத்திரு நடனத்தைத் தரிசிக்கும்படி திருவருள் புரிய வேண்டும்" எனப் பிரார்த்திக்க, இறைவர் அகங்களிகூர்ந்து “அவ்வாறே ஆகுக" என்று ஆண்டும் ஓர்தாண்டவஞ் செய்தருளினர். அதனைக் கௌரி தாண்டவம் என்பர். இறைவியார் ஈசனைப்பணிந்து “எளியேன் பிழையை மன்னிக்க வேண்டும்" என்று பலமுறை பணிந்து பண்டு போல் பரமன்பக்கலில் வீற்றிருந்தனர். இறைவர் லீலாமாத்திரையாக ஊடல் கொண்ட இமயவல்லியைப் பிரார்த்தித்த அவசரம் ப்ரார்தநாமூர்த்தமெனப்படும்.

**ப்ரார்தநாமூர்த்தயே நம:**

அறுபத்து மூன்றாவது

# ரக்தபிக்ஷாப்ரதாந மூர்த்தி.

சிவபிரானை யிகழ்ந்து சிரித்த பிரமனது, நடுத்தலைகிள்ளியவைரவக்கடவுள் சிவாக்கினைப்படி உதிரப்பலியேற்க, அப்பெருமானால் அநுக்கிரகிக்கப்பட்ட காலவேகன் கனன்முகன் சோமகன் ஆலகாலன் அதிபலன் ஆகிய கணத்தலைவருடன் சிறந்த தவசிகள் வசிக்கும் வனங்களுந் தவச்சாலைகளுமடைந்து, அவர்களைச் சூலப்படையாற்குத்திச் சோரிநீரைக்கபாலத்தேற்று, உம்பருலகடைந்து அவ்வாறே உதிரமேற்று அவர்களுள் உயிர்துறந்தாரையுடனே யெழுப்பி அகந்தையொழித்து உலகமெங்குஞ் சஞ்சரித்து மாயகன்வாழும் வைகுந்தநகர மடைந்தனர்.

அவருடன் கூடிவந்த கணநாதர்கள் கொக்கரித்துக் கூச்சலிட்டு முன்செல்ல, விண்டுவின் சாரூபமுற்றுத் தண்டு கோதண்டம் சங்குகட்கம் சக்கரங்கொண்டு விடுவசேனனென்னும் பெயருடைய முதற்காவலாளன் வைரவப்பெருமானது பிரதாபத்தையறியாமல் சாமாந்யமாகக்கருதி முன்வந்துதடுத்து, எம்பிரான் கணத்துடனெதிர்த்துச் செருச்செய, வைரவர் விசையுடன் சூலநுதியில் விடுவசேனனைக் குத்தித் தோள்மேற்சாய்ந்து, பூமகள் நிலமகள் இருபுறம் பொருந்த, பல தலையுடைய பன்னக சயனத்திற் படுத்துத் திருக்கண்வளருஞ் சீதரன்முன் சிவகணங்களோடணுக, திருமால் இருமாதருடன் துண்ணென்றெழுந்து மண்மிசைவிழுந்து மலரடி வணங்கி "எம்பெருமான் ஈண்டுற்றதென்?" என வினாவ, வைரவப்பெருமான் "பலிக்குவந்தோம்; சிரத்திலிருந் திழியுஞ்செச்சீரைச் சீக்கிரந்தருக" என்றனர்.

நாரணன் நன்றென்றிசைந்து தன் நகத்தினால் நெற்றியிலுள்ள நரம்பொன்றைப் பிளந்து பரமன் கபாலத்திற் சோரி சொரியும்படிவிட, அதினின்றும் உதிரப்பெருக்கு ஓர் ஆயிரவருடமொழுக, மால் மயக்குற்றனன். கபாலத்திற்பாதியும் நிரம்பியதில்லை. சீதரன் சோர்ந்ததால் மாதர்கள் வைரவரை வணங்கிநிற்க, "மாதர்களே! அஞ்சல்" என்றருளி வாசுதேவனைச் சுவாசமுற்றெழத் திருவுள்ளஞ் செய்து, "ஈங்கிருத்தி" என விடுத்துத் திரும்புகையில், விண்டு "பண்டுபோல விஷ்வக்சேனனைத் தலைவாயில்காக்கத் தயை செய்ய வேண்டும்" என்று பிரார்த்திக்க, காரி சூலநுதியிலிருந்த விடுவசேனனையிறக்கி யுயிரளித்து விடுத்துப் பின்னுமுள்ள தேவர் முநிவர் செருக்கையொழித்துச் சேனாசமுத்திரஞ்சூழ அண்டங்கடோறுஞ் சென்றனர். இவர் ஸர்வஸம்ஹாரகாலமாகிய யுகாந்தங்கடோறும், வேதமேசுவாநமாகவர அதன்மீதேறி அகமகிழ்ந்துலவுவர். இவ்வாறு தேவர் முதலானாரது உதிரத்தைப் பலியேற்றது, அவர்கள் இறுமாப்பொழிக்கவேயன்றிப் பிறிதொரு காரணத்திற்குமன்று.

இறுமாப்புற்ற இமையவர்பால் இரத்தத்தைப் பலியேற்று அவர்கள் அகந்தையை அடக்கிவைத்தமையாற் சிவபிரானுக்கு ரக்தபிக்ஷாப்ரதாநமூர்த்தியெனவோர்பெயர் விளங்குகின்றது.

**ப்ரஹ்மாண்டபுராணம்.**

*அவிஜ்ஞாயபர0தாம திவ்யதத்பாரமேஶ்வரம்*
*நிவாரயத்ரிஶூலாங்க0 த்வாரபாலோமஹாபல? । இத்யாதி*
*நிர்பித்யபாதயாமாஸஶூலேநோரஸிதம்புவி*
*தத்யாஜஜீவிதம்த்ருஷ்ட்வா ம்ருத்யுவ்யா திஹதோயதா.*

**ஶிவரஹஸ்யம்.**

*மஹதர்தேநதேவோஸ்மி மாஹத்ம்யேநவிமோஹிதா:*
*மா0நஜாந0திதாதார0கர்வக்ரஸ்தாஸ்ஸுராஸுரா:*
*ப்ரஹ்மவிஷ்ணுமஹேந்தத்ராத்யா ஸ்தாநஹ0லீலயாமுஹு-3*
*ரக்தபிக்ஷாடநவ்யாஜாத்வீதகர்வாந்விதாயச.*

**ப்ரஹ்மாண்ட புராணம்.**

*தேவநா0தாநவாநாஞ்ச ததாந்யேஷாஞ்சமாத்யதாம்*
*ரக்தபிக்ஷாச்சலேவை கர்வகண்டும்ஹராம்யஹம்*
*இதிநிஶ்சித்யவிஶ்வாத்மா சசாரபுவநத்ரயம் - இத்யாதி*
*ஜகாமவிஷ்ணோர்பவந0 யத்தாஸ்தேமதுஶூதந- இத்யாதி*
*ந்யவாரயத்த்ரிஶூலாங்க0த்வாரபாலோமஹாபல: - இத்யாதி*
*விஷ்வக்ஸேநஇதிக்யாதோ விஷ்ணோரம்ஸஶமுத்யவ:*
*ஶூலேநோரஶிநிர்பித்ய பாதயாமாஸதம்புவி*
*விவேஶஶூலேநாதாய தத்களேபரமீஶ்வர:- இத்யாதி*
*திவ்யவர்ஷஸஹஸ்ரந்து கபாலேபைரவஸ்யது*
*தயாபத0த்யாவிப்ரேந்த்ர தாரயாபரமேஷ்டிந:*
*கபாலஸ்யவிஶாலஸ்ய நார்தமப்யபிபூரிதம்*
*ரக்தஸ்யவிரஹாத்விஷ்ணு: பபாதபுவிமோஹிதா.*

**கந்தபுராணச்சுருக்கம்.**

*"உன்றலைப்படுசோரிநீரையு குத்தியென்னநகத்தினாற்*
*றன்றனெற்றிபிளந்துசோரி தனைப்பொழிந்திடநம்பிரான்*
*வென்றிசேரயனார்பெருஞ்சிர மீதிறேனனூறுநூ*
*றென்றுகூறிடுமாண்டுசெல்ல விளைத்துமாயன்விழுந்தனன்."*

**ரக்தபிக்ஷாப்ரதாநமூர்த்தயே நம:**

### அறுபத்து நான்காவது

# சிஷ்யபாவ மூர்த்தி.

ஸ்ரீமுருகக்கடவுள் திருவிளையாடல்கள் பலவியற்றி, தேவர் வேண்டுகோளின் படி அவர்கள் பூசையைக் கொள்ளத் திருவுள்ளங் கொண்டு ஸ்கந்தகிரியில் எழுந்தருளியிருந்து, நாரதமுநிவர் யாகத்திற்றோன்றிய யாடொன்று அமரருலகத்தை யழித்து வந்ததால் அந்தரர் துயர்கூற, அதனை வீரவாகுதேவராற் பிடிப்பித்து வாகன மாகக்கொண்டு வீற்றிருந்தனர்.

அவ்வாறிருக்கையிலொருநாள், பிரஹ்மேந்திராதி தேவர்கள் சிவபெருமா னைச் சேவை செய்யக் கருத்துட்கொண்டு திருக்கைலாயமலையையடைந்து தரிசித்துத் திரும்பி, குமாரக்கடவுள் வீற்றிருக்குந் திருவாலயத்தைச் சமீபிக்கையில், இளையபிள்ளையார் இலக்ஷத்தொன்பதுவீரரும் புடைசூழ்ந்து விற்க, பொன்மயமான முதற் கோபுரவாயிலில் எழுந்தருளியிருந்தமையால், அவ்வமரர்குழாத்திடை அவர்கட்குத் தலைவனாக வரும் பிதாமசனைத் திருக்கண்சாத்தி, "ஏசதுர்முக" எனவிளிக்க, பதுமன் அக்கட்டளை மேற்கொண்டு சமீபித்துச் சாஷ்டாங்கமாய்ப் பணியாது கைகூப்பி நின்றனன். முருகக்கடவுள் 'நீயாவன்?" என்று வினாவ, அலரோன் "அண்ணலாக்கினைப்படி அகிலத்தை ஆக்குவோன்" என்றனன். அறுமுகக் கடவுள் அவ்வாறு சிருட்டி செய்வோனாகில் உனக்கு வேதந்தெரியுமோ" என, அம்புயன் "அண்ணலே! இறைவரருளிய எண்ணில்லாவேதாகமங்களுட் சிறிதறிவேன்" எனச் செப்பினன். கார்த்திகேயன் "கமலயோனியே! இருக்கு ஓதுக" என, நான் முகன் "நல்லது" என்று ஓம் எனப் பிரணவத்தையுச்சரித்துப் பின் வேதமோதத் தொடங்கினன்.

முருகக்கடவுள் "இரு; முன்னோதிய ஓம்எனபதற்கு முதலில் உரையுரைத்துப் பின்வேதமோதுக" எனப்பணிப்ப, அன்னவூர்தி அஃதறியானாதலின் அறைதலொன்று மிலனாய் யோசித்து நின்றனன். செவ்வேள் சினமிகக் கொண்டோராய் "இதன்பொருளறி யாதவுனது சிருஷ்டித்தொழிலும் இவ்வாறேயோ?" என்று திருவாய் மலர்ந்தருளி அவனது நான்கு முடிகளுங் குலுங்கும் வண்ணங்குட்டி, நிலத்தின் மேலேவிழவுதைத்து, பரிசனங்களாற் கந்தகிரியிலே சிறையிடுவித்து, தாமே ஜபமாலை - கமண்டலம் - அபயம் - வரதமேந்திய நான்கு திருக்கரங்களும் ஒரு திருமுகமுமாக வீற்றிருந்து பிரமதேவனைப்போலச் சிருஷ்டி செய்து கொண்டிருந்தனர். சதுமுகனோடுவந்த வானவர்பயந்து வள்ளலைவணங்கித் தத்தம்பதவியடைந்து பண்டுபோல் வாழ்ந்திருந்தனர். இவ்வாறே பலகாலங்கழிந்தன.

பதுமன் சிறையிலிருத்தற்காக, பன்னகசயனன் தன்னுளமதனில் இன்னல் மிகுந்து எண்கணன் சிறையை விலக்கவெண்ணி, அட்டதிக்கிறைவர் எட்டுவசுக்கள் - துவாதசாதித்தர் - சந்திரன் முதலிய கோள்வள் - சத்தருஷிகள் - நவபிரமாக்கள் முதலிய தேவர் முநிவர்களைச் சிந்திக்க அவர்கள் அந்தக்கணமே ஐம்படைக்குரிசில்பாலடைந்தனர். திருமால் தேவர்முநிவரை யுடன்கொண்டு

திருக்கைலையையடைந்து திருநந்திதேவர் விடைபெற்றுத் திருச்சந்நிதானத்தினுட் சென்று திரியம்பகனைச் சேவை செய்து பலவகையாகத் துதித்துக் கைகூப்பி நின்றனர். உமாபதி ஒன்றுமறியார் போன்று லீலாமாத்திரையாய் "தேவமுநிவர்களே! ஒருகாலத்துமில்லாத பெநந்துயருற்று வந்தனிர்போலும்; என்ன விசேஷம்"? எனவினாவ, வானவர்கூட்டத்திலிருந்த மாதவன் பணிந்து, "மஹாதேவ! தேவரீரது புதல்வராகிய முருகப்பிரான் பிரமனைப் பிரணவப்பொருள் வினாவி அவனஃதறியாமையாற் சிறையிலிட்டுச் சிருட்டியையுந்தாமே செய்து வருகின்றனர்; வேள் போல வேதனுந் தேவரீர் சுதனேயாம்; ஆதலின் சிறைநீக்க அருள் புரிய வேண்டும்" என விண்ணப்பித்தனர். சிவபிரான் நந்தியெம்பெருமானை நோக்கி "எமது கட்டளையைக்கூறிப் பிரமனைச் சிறைவிடுவித்துவா" என, அவர் அவ்வாறேசென்று சுப்பிரமணிய மூர்த்திகளைத் தரிசித்து, ஆஜ்ஞையை விண்ணப்பித்தவளவில், வேற்படையேந்தியவிமலர் வெகுளி மிக்கு 'வேதாவைவிடுவதில்லை; விரைந்து செல்லாது நிற்பின் நின்னையுஞ் சிறையிடுவேன்" என்றருளிச்செய்ய, நந்திபகவான் அச்சமுற்று ஒன்றுங்கூறாது உம்பர் நாயகரிடமுற் றுரைத்தனர்.

பரமசிவன் அதுகேட்டுப் புந்நகை செய்து, சகலதேவருந் தம்மைப்புடை சூழ்ந்துவர இடபவாகனத்தி லாரோகணித்து, ஸ்கந்தகிரியையடைந்து விடையினின் றிழிந்து உள்வருதல் கண்ட உம்பர் சேனாதிபதி எதிர்வந்து இறைவரது இருசரணங்களைப் பணிந்து தமது பீடத்தின்பேரில் வீற்றிருக்கச்செய்து "தேவரீர் ஈண்டெழுந்தருளியதென்னகாரணம் ?" என வினாவ, பிறைசூடிய பெருந்தகை "பிரமனை நீயிட்ட சிறையினின்றும் விலக்குக" என, ஸ்கந்தர் சிரமசைத்து, "பிரணவப்பொரு ளறியாத. இவன் சிருட்டி செய்வது அடாது" எனக்கூறினர். சிவபெருமான் சினங்கொண்டார் போன்று "வேலவ! விதியைவிடுதி" என அறுமுகக்குரிசில் பரிசனர்களாற் பதுமனை விடுத்தனர். பரமபதி அவ்வலரோனுக்கு அருள்செய்து ஆக்குந்தொழிலிற் பண்டு போலிருக்கப் பணித்து விடுத்து மயூரவாகனரைத் தொடைமேலிருத்தி "பிரணவப்பொருள் உனக்குத்தெரியுமாகிற் செப்புக" என, குழகன் "கொன்றைவேணியாய் அன்றென தன்னைக்கருளிய ஞான்று பிறருணராது பேசியதன்றோ ? அன்னதிங்ஙனனைவரு மன்னியவிடத்தே மறைவிலாதுறைத்தல் மரபதுதானோ" என மறுமாற்றம் வழங்கினர். ஈசன் எனக்கு 'மறைவாகக்கூறுக" என்று திருச்செவிகொடுக்க, ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகள் ஓம் என்னும் பிரணவத்தின் பொருளை யுபதேசித்தருளிச் சிவகுருநாதர் எனப்பெயரெய் தினர். சிவபிரான் களிகூர்ந்து தேவர்களுக்குச் செல்ல விடையளித்து, விடையேறி வெள்ளி மலையடைந்து வீற்றிருந்தனர்.

முருகக் கடவுளிடத்திற் பிரணவப்பொருளைக் கேட்டுக்கொண்டபொழுது சிஷ்யகோலமாக நிற்றலின், சிவபெருமான் சிஷ்யபாவமூர்த்தியெனப் பெயரெய்தி னர்.

**சிஷ்யபாவமூர்த்தயே நம:**

## வாழ்த்து

“தண்ணாறுமுடி  னைந்தசங்கரனுமலையரயன்றருபூங்கொம்பு
மெண்ணாறுகரத்தானுமீராறுகரத்தானுமெழிலார்வில்லித்
தண்ணேறுஞ்சிரத்தானுந்திருவேறுமுரத்தானுந்தாசராக
வெண்ணோறுமொருநீறுங்கண்மணிநன்னூலிதுவும்வாழ்கவென்றே.”

# சிவபராக்கிரமம்

**முற்றுப்பெற்றது.**